அவருக்கு இணை வேறு எவரும் இல்லை. அந்தத் திறமையினால் தான் அரசரையும் கைநீட்டிக் குறை சொல்கிறார். அதட்டி வேலை வாங்குகிறார். இல்லை நீ சொல்லும்படி கல் வளையாது என்று சொன்னால், உளியும், சுத்தியும் எடுத்து உட்கார்ந்து விடுவார். இரண்டு நாழிகையில் அந்தக் கல்லை எப்படி வளைக்க முடியும் என்பதையும் அவனுக்குக் காட்டுவார். அவரை எதிர்த்த வன் கதறுவான். சுற்றியுள்ள பலபேருக்கு அவரை எதிர்க்க வேண்டும் என்ற எண்ணமே எழாது போகும். அப்படி பலமுறை நடந்திருக்கிறது."

சிற்பிகள் .தங்களுக்குள் பேசிக் கொள்வார்கள்.

"இப்படி எல்லா வேலைகளையும் திறம்பட உங்களால் செய்ய முடிகிறதே, இது எதனால்? எங்களால் ஏன் செய்ய முடியவில்லை? எனக்குத் தெரிந்த கொடுங்கை வேலையிலையே நான் அவ்வப்போது தவறு செய்து விடுகிறேன். முடிக்கும்போது மூளியாக்கி விடுகிறேன். முப்பது நாள் வேலை குப்பையாய்ப் போகிறது. நீங்கள் மட்டும் இப்படி அற்புதமாக எல்லா வேலை களையும் செய்கிறீர்களே எதனால்? என்ன மந்திர சக்தி."

"எந்த மந்திர சக்தியும் இல்லை. மனம் ஒரு நிலைப்படுத்தி அந்த வேலையின் மீது முழுமையாய் ஈடுபட்டால் எந்த வேலையையும் செய்ய முடியும். சிற்ப வேலை மட்டுமல்ல. இந்த இடத்தை பெருக்கி சுத்தம் செய் என்றால் நான் பெருக்கி சுத்தம் செய்வதற்கும், நீ பெருக்கி சுத்தம் செய்வதற்கும் வித்தியாசம் இருக்கும். இந்த வேலை என்னுடைய வேலை என்ற விருப்பத் தோடு, மனம் முழுமையோடும், இந்த வேலையைத் திறம்பட செய்து முடிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடும் நான் செய்வேன். அந்த எண்ணம் உனக்கு வந்துவிட்டால் உன்னாலும் நன்கு வேலை செய்ய முடியும். மனம் ஒருமைப்படுத்துவது பொருத்துத்தான் உன் திறமையும், உன் வலிமையும் இருக்கிறது."

"நீங்கள் சொல்வது புரிகிறது. அற்புதமாக இருக்கிறது. உங்களைப்போல் மனம் ஒருமைப்படுத்துவோர் எவரையேனும் கண்டிருக்கிறீர்களா."

அந்த இளம் சிற்பி அவரை நோக்கிக் கேட்டான். அவர் அவனைப் பார்த்து மௌனமாக நின்றார்.

அந்த இளம் சிற்பி இன்னொரு சிற்பியைப் பெருந்தச்சர் சொல்லுவார் என்று எதிர்பார்க்க, அவன் எதிர் பார்ப்பைப் புரிந்து கொண்டு வாய்விட்டுச் சிரித்தார்.

"பார்த்திருக்கிறேன். அவருக்குப் பெயர் சக்ரவர்த்தி, உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர்."

கூட்டம் எழுந்து நின்று சோழம், சோழம் என்று கை தட்டியது.

"மன ஒருமைக்கு என்னை மிஞ்சி ஒருவர் உண்டு எனில் அது சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவர். அவர் இங்கு மன்னராக இருப்பதால் நான் அவரை வாழ்த்தவில்லை. எனக்கு அதிகாரியாக இருப்பதால் அவரை நான் கொண்டாட வில்லை.

அவரோடு நான் பல இடங்களுக்குப் பயணப் பட்டிருக் கிறேன். கடும் பாலை நிலம், குதிரைகள் கூட வெயில் தாங்க முடியாமல் தாகத்தில் தவிக்கின்றன. அவர் சுற்றுமுற்றும் பார்த்து விட்டு கை ஈட்டியால் ஒரு திசையைச் சுட்டிக் காட்டுகிறார். இங்கிருந்து ஆறு கல் தொலைவில் ஒரு குளம் இருக்கிறது. அங்கு நீர் இருக்கிறது. படையை அந்தப் பக்கம் திருப்பு என்று சொன்னார்.

ஆறு கல் தொலைவில் நீர் இருப்பது இவருக்குத் தெரிகிறது. அப்படி அந்த இடத்தில் நீர் இல்லா விட்டால் படைகள் மிகவும் சோர்ந்து விடும். நிச்சயம் இருக்கிறதா என்று இளவரசர் இராஜேந்திரர் கேட்க, வெகுநிச்சயமாய் இருக்கிறது, படைகளைத் திருப்பு என்ற வேகமாகக் கட்டளையிட, நீர் இருக்கும் இடம் நோக்கிப் போகிறோம் என்ற நினைப்பில் படைகள் வேகமாகச் சென்றன.

எனக்கு உள்ளூர பயம். அங்கு நீர்நிலை இருந்து நீர் இல்லையெனில், அந்த நீர் நன்றாக இல்லையெனில் என்ன செய்வது என்ற பயம். ஆனால், படைகள் மொத்தமும் போவதைப் பார்த்து விட்டு, பிறகு கடைசியாக அவர் தன் குதிரைகளைப் படைகளுக்குப் பின்னே திருப்பினார். நான் என் பயத்தை வெளியிடடேன் அப்படியா, அப்படியானால் தொடர்ந்து வந்து பாரும் என்று சொல்லிவிட்டு நகர்ந்து வந்தார். நான் அவருக்குப் பின்னே போனேன்.

மிகச்சரியாக ஆறு கல் தொலைவில் பெரும் குளம். போகும் போது குதிரைகள் ஒரு பக்கம் யானைகள் ஒரு பக்கம், காலாட் படைகள் ஒரு பக்கம் என்று இறங்கி நீர் குடித்துக் கொண்டிருந் தார்கள். எல்லாம் ஏறியதும் மாடுகளும், கோவேறு கழுதைகளும் இறங்கி நீர் குடித்தன. மிகச்சுவையான நீர் எப்படித் தெரிந்தது. என்று கேட்டேன். காற்றில் வேறு எந்தப் பக்கத்திலிருந்தும் ஈரப்

பதம் வரவில்லை. ஒரு திசையிலிருந்துதான் ஈரப்பதம் வருகிறது. மனம் ஒருமைப்படுத்தி அந்த திசையையே உற்று நோக்க, எவ்வளவு தொலைவில் அந்த ஈரப்பதம் வருகிறது. என்பதை என்னால் யூகிக்க முடிந்தது. மனம் ஒருமைப்படுத்தினால் இவைகளைக் கண்டு பிடிக்கலாம். என்று சொன்னார். மனம் ஒருமைப்படுத்துதலின் உச்ச கட்டம் என்பது இதுதான். ஆனால், அவரோ இதற்கு மேலும் பல விஷயங்கள் தெரியும் என்று சொல்கிறார். எனவே, சிற்பிகளே மனம் ஒருமைப்படுத்துதலை வளர்த்துக் கொள்ளுங்கள்."

சிற்பிகள் வாயடைத்து நிற்பார்கள். பெருந்தச்சரை மிக மரியாதையோடு பார்ப்பார்கள். இப்படிப் பல்வேறு முறை, பல்வேறு விதமாக சிற்பிகளுக்கும், பெருந்தச்சருக்கும் உரையாடல்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஆனால், இது உரையாடும் நேரமல்ல. அடுத்தடுத்து யார் யார் என்ன வேல செய்ய வேண்டுமென்று பிரித்துக் கொடுப்பதற்காகப் பெருந்தச்சர் குஞ்சர மல்லன் வரவழைத்திருக்கின்றார்.

அடித்தளம் போடுகிறவரோடு பேசி முடித்து விட்டார். அடித்தளம் எப்படி அமைக்க வேண்டும் என்பதை விளக்கி விட்டார். இப்போது. உள்ளுக்குள்ளே தூண்கள் நிறுத்துவது பற்றியும், சாந்து சார்த்துவது பற்றியும் பேச்சு நடந்து கொண்டிருக்கிறது. தூண்களின் பூமியில் பதிய வேண்டிய பகுதி இன்னும் சற்று நீளமாக இருக்கலாம். தூணினுடைய பக்கவாட்டிலும் ஆண் யோனி. பெண் யோனி அமைக்கப்படலாம் என்றும் சொல்லப்படடது.

"ஒரு உருளத் தூணை நான் எப்படி வேண்டு மானாலும் பொறுத்துவேன். யோனி என்று அடித்து விட்டால் ஒரு திசையில் தானே பொருத்த வேண்டும்." என்று சிற்பி சொல்ல, "உருளைத் தூண் அல்ல சதுரத்தூண். நீ ஒரேவிதமாகத்தான் செய்ய வேண்டும்."

"செய்யும்போது அதில் யோனி அமைத்தால் என்ன" என்று சாந்து பூசுபவர்கள் சொல்ல, அங்கு ஒரு காரசாரமான பேச்சு வந்தது.

"உன்னுடைய வேலை சாந்து மட்டுமே. நீ ஏன் தூண் அடிப்பதைப் பற்றிப் பேசுகிறாய்." என்று சிற்பிகள் சீறினார்கள்.

சாந்து அரைப்பவர்கள் "இன்னும் உறுதியாக நிற்கத்தான். நீங்கள் சோம்பல்பட்டு அடி அளவை குறைத்து விடுவீர்கள். பிறகு தூண் ஆடினால் சாந்து சரியாக இல்லை என்று சொல்கிறீர்கள்.

இரண்டரை ஆள் உயரத்திற்கு தூண் இருக்க வேண்டுமென்றால் கீழே அரை ஆள் உயரத்திற்காவது இருக்க வேண்டாமா. இரண்டு முழங்கை ஆழத்திற்கு இருந்தால் எப்படி தூண் ஆடாமல் இருக்கும். "தூண் என்பது கீழ்த் தளத்திற்கும் மேல் தளத்திற்கும் இடையில் இருப்பது. ஒரு தூண் ஆட வேண்டிய அவசியமே இல்லை. கீழே இரண்டு முழம் ஆழத்திற்கு பதிந்து விட்டால் மேலே இருக்கிற தளத்தின் கனத்தால் அழுத்தப்பட்டு தூண் ஆடாதிருக்கும்.

"நாங்கள் களி மண்ணில் தூண் செய்ய வில்லை. கல்லில் செய்கிறோம். மண்டபத்திற்கு மட்டும் நூற்று சொச்சம் தூண்கள் செய்ய வேண்டும். அந்த நீளத்திற்குக் கல் வேண்டும்.

எல்லாவற்றையும் புரிந்து கொண்டு பேசுங்கள். சதாசிவாச் சாரி கல் உடைக்க ஒவ்வொரு நாளும் பேரவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கிறார். நீங்கள் கீழ்ப் பக்கம் கூடுதலாக ஒரு அடி, மேல் பக்கம் கூடுதலாக ஒரு அடி என்று பேசுகிறீர்கள். இரண்டு முழங்கை என்பதே அதிகம். சாந்து உறுதியாக இருந்தால் தூண் ஆடாதிருக்கும். எனவே, சாந்துக் கலவையை கவனமாகச் செய் யுங்கள். வேலை தெரியாதவர்களோடெல்லாம் பேச வேண்டி யிருக்கிறது." என்று ஒரு சிற்பி சொல்ல, மிகப்பெரிய எதிர்ப்புச் சத்தம் கிளம்பியது.

எதிரே பெருந்தச்ச குஞ்சரமல்லன் இருக்கிறார் என்று தெரி யாமல் கெட்ட வார்த்தைகள் இறைக்கப் பட்டன. முஷ்டிகள் மடக்கப்பட்டன. பின்னால் இருந்த பெண்டுகள் ஓடி வந்து என்ன கூச்சல் இது என்று கடிந்து கொண்டார்கள். அதையும் மீறி சாந்து அரைப்பவர்கள் சத்தம் போட்டுக் கொண்டிருந் தார்கள்.

குஞ்சரமல்லர் தலைகவிழ்ந்து உட்கார்ந்திருந்தார்.

"சொல்லுங்கள் ஐயா... நீங்களே சொல்லுங்கள்."

சிற்பிகள் வற்புறுத்தினார்கள்.

குஞ்சரமல்லர் மெல்ல நிமிர்ந்தார்.

"அது கல். மாக்கல் அல்ல. கருங்கல். அந்த நீளத்திற்கு கருங்கல் கிடைத்தால்தான் இவர்கள் தூண் வடிக்க முடியும். இத்தனை நீளம் கருங்கல் கிடைப்பது மிகக் கடினம். பற்பல அளவுகளில் கல் அறுத்து எழுப்பலாம் தூணை அப்படி அனுப்ப முடியாது. இரண்டாகச் செய்ய முடியாது. இன்னும் நடுப் பகுதியில் ஒட்டு வேலையெல்லாம் செய்தால் கட்டிடம் ஒழுங்

காக நிற்காது எனவே, இருக்கிற கல்லில் மிகக் குறைந்த அளவு ஆழத்தில் இறுக்கமாகப் பதிய வைப்பதுதான் கெட்டிக்காரத் தனம். சாந்து என்ற விஷயத்தில் நாம் எந்த விதமான முன் னேற்றமும் அடையவே இல்லை."

"ஐயா, சாந்து அரைப்பதில் நாம் ஒரு உச்ச நிலையை அடைந்து விட்டோம்." சாநது அரைப்பவரில் ஒரு மத்திம வயசுக்காரன் சொன்னான்.

"அப்படியா, நிம்மதி. இனி எந்த முயற்சியும் செய்ய வேண்டாம். நாமே நம்மைப் பார்த்து உச்சநிலைக்கு வந்து விட்டாய். இதற்கு மேல் உன்னால் உயர முடியாது என்று சொல்லிக் கொள்வோம்."

அலுப்போடு பெருந்தச்சர் பேசினார்.

கூட்டம் மௌனமாக இருந்தது.

"நித்த வினோதப் பெருந்தச்சனிடம் போய் சாந்து அரைப் பதில் வேறு ஏதேனும் மாற்றங்கள் செய்ய முடியுமா என்று கேளுங்கள். நம்மில் ஒருவன் கெட்டிக்காரனாய், பல சூட்சு மங்கள் நிறைந்தவனாய், எது பற்றியும் தெளிவாக யோசிப்பவ னாய் இருக்கும் போது அவனை உபயோகப்படுத்திக் கொள் ளுங்கள். இதற்கு மேல் தூணின் அடிப்பகுதியை அதிகப்படுத்த முடியாது.

தூணின் அடிப்பகுதியில் ஆண், பெண் யோனிகள் இணைத்து இழைப்பதும் நடக்காது. தூணுக்கு மேலுள்ள பாரத்தில் தூண் அழுத்தமாக நிற்க வேண்டும். அதற்குச் சாந்து துணை செய்ய வேண்டும். எனவே வரை படங்களை எடுத்துக் கொண்டு போங்கள். சாந்து அரைப்பதற்கு எல்லாவிதமான மூலப் பொருட்களும் இருக்கின்றனவா? சாம்பிராணிக் கட்டிகளுக்குச் சொல்லியனுப்பி விட்டீர்களா? புற்று மண் வேண்டுமென்று சொன்னீர்களே போய் பார்த்து வந்தீர்களா? நான் சொன்ன இடத்திற்குப் போனீர்களா. அற்புதமான புற்று மண். கிராமம் முழுவதும் புற்றுகள் நிரம்பியிருக்கின்றன. யாரை யேனும் அனுப்பி கவனமாகப் புற்று மண்ணை உபயோகப்படுத் துங்கள். அதிகம் சேர்த்து விடாதீர்கள். கலவை மோசமாகி விடும். புற்று மண்ணின் பெரும் பகுதி உலோகச் சிற்பிகளுக்குப் போக வேண்டும் என்பதையும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். இன் னொரு முறை என் எதிரே இப்படி உரத்த குரலில் பேசாதீர்கள். என் கவனங்கள் சிதறுகின்றன. குறைவாகப் பேசுபவனே

நிறைவாக வேலை செய்வான். இதைக் கற்றுக் கொள்ளுங்கள், நீங்கள் கலையலாம்."

பெருந்தச்சர் குஞ்சரமல்லர் உத்தரவிட்டார். சுருண்டு படுத்தார்.

அடுத்தவர் வரலாமா என்று கேட்ட பெருந்தச்சர் உதவி யாளர், அவர் சுருண்டு படுப்பது பார்த்து மெல்ல நகர்ந்து அவர் மனைவியிடம் விஷயம் சொன்னான்.

"அவருக்கு ஏதேனும் உணவு தேவையோ, குடிப்பதற்கு ஏதேனும் இருக்கிறதா." என்று வினவினான்.

பெருந்தச்சரின் மூத்த மனைவி தொலைவிலிருந்து அவனை உற்றுப் பார்த்தாள்.

"நீ போ. நான் பார்த்துக் கொள்கிறேன்." என்றாள்.

அவன் தயங்கி நிற்க, "வாசலுக்குப் போய் உட்காரடா. நான் பேசிக் கொள்கிறேன்." என்று அதட்டினாள்.

அவன் வெளியே நகர்ந்தான். பெருந்தச்சரின் மனைவி உள்ளே போனாள். இரண்டாம் மனைவியிடம் காதோரம் கிசுகிசுவென்று பேசினாள்.

இரண்டாம் மனைவி சட்டென்று முதல் மனைவியின் கரங்களைப் பிடித்துக் கொண்டாள். இரண்டு பேரும் மெல்ல கூடத்திற்கு வந்தார்கள்.. பெருந்தச்சர் கட்டிலுக்கு அருகே நின்றார்கள். பெருந்தச்சர் மெல்லிய குறட்டையோடு தூங்கிக் கொண்டிருந்தார். பெருந்தச்சரின் மனைவி காலுக்கு அருகே உட்கார்ந்து அவர் கால்களைப் பிடித்துவிடத் துவங்கினாள்.

பெருந்தச்சருக்குச் சட்டென்று விழிப்பு வந்தது.

"என்ன. எங்கே அவர்கள்" என்று கேட்டார்.

"யார்"

"சாந்து அரைப்பவர்கள்" என்று உளறலாய்ப் பதில் சொன்னார்.

"எல்லோரையும்தான் அனுப்பி விட்டீர்களே. படுத்துத் தூங்கி விட்டீர்கள். அதனால்தான் வந்தோம்."

"சரி, அடுத்த ஆட்களைக் கூப்பிடு. குடிக்கச் சற்று நீர் கொண்டு வா."

“இருக்கட்டும். உடம்பும், புத்தியும் இவ்வளவு அயர்ச்சியாக இருக்கும்பொழுது மறுபடியும் வேலையில் ஈடுபட வேண்டுமா.”

“வேறு என்ன வழி. கோவிலைக் கட்டி முடிக்க வேண்டாமா”

“கட்டி முடிக்கலாம். அதற்கு முன்னால் சில கடமைகளும் இருக்கின்றன. அதையும் செய்யலாம் அல்லவா”

“என்ன.”

“உங்களுக்குப் பெண் இருக்கிறதே அதை யாருக்குக் கட்டிக் கொடுக்கப் போகிறீர்கள். கோவில் கட்டுவதைப் பற்றி மட்டுமே யோசிக்கிறீர்களே. அந்தப் பெண்ணைப் பற்றி யோசிக்க வேண்டாமா.”

“என்ன. திடீரென்று என் மகள் கல்யாணம் பற்றிப் பேசுகிறாய்.”

“இதோ பாருங்கள். உங்களுக்கு அழகாக இரண்டு ஆண்களைப் பெற்றுக் கொடுத்தேன். அந்த இரண்டு ஆண்களும் தொழில் கற்றுக் கொண்டு ஒழுங்காக வேலை செய்கிறார்கள். நான் போதவில்லை என்று ஆட்டமாடி இவளைப் பிடித்தீர்கள். இவள் தலையெழுத்து இவளுக்குப் பிறந்த பெண்ணை என் பெண்ணாகவே வளர்த்தேன், இப்பொழுது, அவளுக்குப் பதினாறு வயது. திருமணப் பருவம். எந்த நேரமும் அவள் உட்கார்ந்து விடுவாள் என்று தோன்றுகிறது. அதற்குப் பிறகு திருமணம் நடத்துவது நல்லதா. அழகா மரபா எனவே அவள் பூப்படைவதற்கு முன்பு திருமணம் செய்துவிட வேண்டும். இப்பொழுதே பிடுங்கிக் கொண்டு கற்சிலை போல நிற்கிறாள். இவளுக்குத் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யலாமா.”

“ஏற்பாடு செய்தால் போயிற்று.”

“எப்போது... கோவில் கட்டி முடித்த பிறகா. இதோ பாருங்கள். இதுதான் நல்ல நேரம். கையில் காசு நடமாட்டம் இருக்கிறது. மரியாதை இருக்கிறது. நம்மைத் தேடி பெரிய மனிதர்கள் வருகிறார்கள். அப்படிப் பெரிய மனிதர்கள் வரும்போது திருமணம் நடந்தால் நமக்கு நல்லதல்லவா. பெருமை அல்லவா. நம்முடைய திருமணத்திற்குச் சக்ரவர்த்தியும், இளவரசரும், கிருஷ்ணன்ராமனான பிரம்மராயரும், மற்ற சேனாதிபதிகளும், பட்டமகிஷியும், பஞ்சவன் மாதேவியும் வந்து நின்றால் எப்படியொரு கொண்டாட்டமாக இருக்கும்.”

இத்தனை பேருடைய பெயரையும் கேட்ட பெருந்தச்சர் குஞ்சரமல்லன் முகம் மலர்ந்தது. அத்தனை பேரும் தன் வீட்டிற்கு விருந்துக்கு வந்தால் நன்றாகத்தான் இருக்கும் என்ற யோசனை படர்ந்தது.

"போய் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்யுங்கள்."

"நாங்கள் எப்படிச் செய்வது. இதை நீரல்லவா செய்ய வேண்டும்."

"என்னை என்ன செய்யச் சொல்கிறாய். எங்கு போகச் சொல்கிறாய்."

"எங்கும் போக வேண்டாம். வெண்ணெய்க் குடம் கையி லிருக்க நெய்க்கு அலைவார்களா."

"இந்தப் பழமொழிகள் எனக்குப் புரிவதேயில்லை. வெட் டொன்று துண்டு இரண்டாகப் பேசு. என்ன செய்ய வேண்டும்."

"உங்களுடைய சீடன் சீராளன் இருக்கிறானல்லவா. அந்த ஓவியனுக்கு நம் பெண்ணைக் கொடுத்தால் என்ன."

"அவனை மகனைப் போலல்லவா வளர்க்கிறோம்."

பெருந்தச்சர் சற்று வியப்பான குரலில் கேட்டார்.

"வாயைக் கழுவும். எல்லா சீடப் பிள்ளைகளும் மகனைப் போல என்றால் நம் பெண்ணை எவர் தலையில் கட்டுவது."

"அவன் யாரோ பெற்ற பிள்ளை. நம் வீட்டிற்கு வந்தான். அவனுக்கு வித்தை கற்றுக் கொடுத்தேன்."

"வித்தை கற்றுக் கொடுத்த பையனுக்கு பெண்ணைக் கொடுக்கப் போகிறீர்கள். அவ்வளவுதானே. மாட்டேன் என்று சொல்லிவிடுவானா அவன்."

"நன்றியுள்ளவன் சொல்லமாட்டான்"

அந்தப் பெண்மணிகள் மாறி மாறிப் பேசினார்கள்

"சீராளன் நன்றியுடையவன்தான்."

பெருந்தச்சர் வாயிலிருந்து அவரை மீறி வார்த்தைகள் வந்தன.

"அப்படியானால் நேரே போய் அவனிடம் ஒரு வார்த்தை கேட்டுவிட்டு, பிறகு அவன் தாயிடமும், தந்தையிடமும் நாம் போய்ப் பேசுவோம். பெண்ணுக்காக தனித்த வீடும், மாட்டு

வண்டிகளும், கோவேறு கழுதைகளும் கொடுப்போம். நாம் இருக்கின்ற வரை வருடந் தோறும் மருமகனைத் தேடி அரிசியும், பருப்பும், இதர தானியங்களும், துணிகளும் அவர் கேட்ட எல்லா விஷயங்களும் அனுப்பப்படும் என்று சொல்லிவிடுங்கள்.”

மூத்த மனைவி, இளம் மனைவி பேசிய பிறகு தொடர்ந்தாள்.

“சீராளனுடைய ஒரே வேலை நம்முடைய பெண்ணைக் கூடிக்குலவி கொஞ்சி நிறைய குழந்தைகள் பெற்றுக் கொள்ள வேண்டியது மட்டுமே. எத்தனைக் குழந்தைகள் வேண்டுமானாலும் அவர்கள் பெற்றுக் கொள்ளட்டும். அதை எடுத்து வைத்துச் சீராட நாங்கள் இருக்கிறோம். எங்களைச் சுற்றி ஒரு பட்டாளமே இருக்கிறது. குறைந்த பட்சம் பத்துக் குழந்தைகளாவது பெற்றுக் கொள்ள வேண்டும் என்பது எங்கள் ஆசை.”

அந்தப் பெண்மணிகள் பேசப் பேச பெருந்தச்சர் எதுவும் சொல்லத் தோன்றாது அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அவர் உள்ளுக்குள் கோவிலைப்பற்றிய அளவுகள் போய்க் கொண்டேயிருந்தன. தந்தையையும், தாயையும், சித்தியையும் தொலைதூரத்திலிருந்து பார்த்த வண்ணம் பெருந்தச்சரின் மகள் பரமி என்கிற பரமேஸ்வரி அமர்ந்து கொண்டிருந்தாள்.

அவள் மனம் சந்தோஷத்தில் குதியலிட்டது.

சீராளன் பற்றி பெண்களிடையே மிகப்பெரிய பரபரப்பு இருந்தது. சீராளன் வரைந்த பல படங்களைத் தூக்கிக் கொண்டு அவர்கள் கடைத்தெருக்களில் முன்னும் பின்னும் அலைந்தார்கள்.

ஊர் ஜனம் அந்தப் படத்தைப் பார்க்க வேண்டுமென்று கெஞ்சியது. இவர்கள் வேண்டாவெறுப்பாக திரைச்சீலைய விலக்கி அந்தப் படத்தைக் காண்பித்தார்கள்.

ஊர் கன்னத்தில் விரல் வைத்து வியந்தது.

‘அடா, அடா.’ என்றது.

அந்தப் பெண்களைப் பொறாமையோடு பார்த்தது.

“யார் வரைந்தது.”

வியப்போடு வினவியது.

எங்கள் சீராளன் என்று அந்தப் பெண்கள் சொல்ல அப்போதும் அதிகம் பொறாமைப்பட்டது. அந்தப் பொறாமையைப் பார்த்து சிற்பிகளுடைய பெண்கள் குதூகலமடைந்தார்கள்.

அந்தச் சிற்பிகளில் கெட்டிக்காரப் பெண்கள் சீராளனிடம் போய், "நான் கடைத் தெருவுக்கு உங்கள் படத்தை எடுத்துக் கொண்டு போயிருந்தேனா, அந்த ஆண்களெல்லாம் எப்படி வியக்கிறார்கள் தெரியுமா. பெண்கள் எப்படிப் பார்க்கிறார்கள் தெரியுமா." என்று கதையளந்தார்கள்.

சீராளனும் ஆவலாகக் கேள்வி கேட்டான். மத்திம வயதுப் பெண்கள் சீராளனை வேறு விதமாய்க் கொண்டாடினார்கள்.

"முன்பெல்லாம் தெருவில் போனால் நம்மை மதிப்பதே யில்லை. இப்பொழுதெல்லாம் உங்களால் எங்களுக்கு பெரிய பெருமை. மரியாதை. என் வீட்டுக்காரர் கொடுங்கை அடிக்கிறார் என்றால் என்ன என்று புரியாமல் விழித்தார்கள். நான் கோவிலுக்குக் கூப்பிட்டுக் கொண்டு போய் எது கொடுங்கை, எது உத்திரம், எது அரை பத்மம், எது கண்டம் என்று அவர்களுக்கு விவரித்தேன். ஆண்களும் பெண்களுமாய் பல பேர் என்னைச் சூழ்ந்து கொண்டு கோவில் கட்டுவதைப் பற்றி விளக்கமாகச் சொல்லு என்று கேட்கிறார்கள். எனக்குத் தெரிந்தவரை நானும் சொல்கிறேன்."

"அடி சக்கை. பெரிய கோயிலையே நான்தான் கட்டுகிறேன் என்று சொல்லாமல் இருந்தால் சரி" என்று சீராளன் சொல்ல அந்தப் பெண்கள் வெட்கப் பட்டார்கள்.

"கொழுக்கட்டையும், அப்பமும், தேங்காய் புட்டும் கொண்டு வந்திருக்கிறேன். எடுத்துக் கொள்கிறீர்களா." என்று கேட்க, சீராளன் நெகிழ்ந்து போவான்.

இரண்டு பிடி எடுத்துக் கொண்டு போய் வீட்டில் வைத்து விட்டு, மற்றவற்றை அங்கேயே வினியோகம் செய்வான். மற்ற பெண்கள் உட்கார்ந்து அவன் ஓவியம் வரைகிற அழகைப் பார்த்துவிட்டுப் போவார்கள். போய்க் கடைத்தெருவில் மறுபடியும் கதை பேசுவார்கள். அப்பேர்ப்பட்ட சீராளன் தனக்குக் கணவனாக வரப் போகிறான் என்றதும் பரமிக்குத் தலைகால் புரியவில்லை.

"நான் இரண்டாவதாக வாக்கப்பட்டேன். எனக்குப் போய் பெண் பிறந்திருக்கிறது" என்று தாய் அடிக்கடி புலம்புவதை அவள் கேள்விப்பட்டிருக்கிறாள். பெரிய தாயின் அலட்டலை,

சீற்றத்தை அனுபவித்திருக்கிறாள். பயந்து நடுங்கியிருக்கிறாள். ஆனால், இதை யெல்லாம் தாண்டி தனக்கு ஏதோ ஒரு நல்லது நடக்கப் போகிறது என்ற ஒரு உணர்வு அவளுக்கு நிரந்தரமாக இருந்தது. தடதடவென்று கொல்லைப் புறமாக அடுத்த வீடு நோக்கி ஓடினாள். கூடத்துக்கு நடுவே நின்றாள். தூணைப் பிடித்துக் கொண்டு சாய்ந்தாள். துவண்டு விழுந்தாள்.

எல்லோரும் அவளை வாரி அணைத்துக் கொண்டார்கள். முகத்தில் நீர் தெளித்தார்கள். கதறினார்கள்.

அவளுக்கு தான் செய்வது அதிகம் என்று தெரிந்தாலும் இப்படி நாடகமாடுவது அவளுக்குப் பிடித்திருந்தது.

"இவள் எவ்வளவு மெல்லியவளாக இருக்கிறாள். தனக்குத் திருமணம் என்று செய்தி கேள்விப் பட்டவுடனேயே மயங்கி விட்டாளே" என்று மற்ற பெண்கள் பேசுவார்கள்.

"சீராளனா, உனக்கா, கணவரா... அப்பா என்ன சந்தோஷம். பெருந்தச்சரின் பெண்ணல்லவா. உன்னை மணப்பதற்குப் போட்டி போட்டுக் கொண்டல்லவா வருவார்கள். அதில் சீராளன் கிடைப்பதில் என்ன அதிசயம். உன் தந்தை விரல் சைத்தால் இந்த நாடே அசையுமே. உனக்காக உன் தந்தை என்ன வேண்டுமானாலும் செய்வாரே கொடுத்து வைத்தவளடி. இவளுடைய பூர்வ புண்ணிய ஸ்தானம் மிகப் பலமாக இருக்கிறது. வாழ்வாங்கு வாழ்வாய். எனக்கு அதில் சந்தேகமேயில்லை. கல்யாணத்திற்கு என்னைக் கூப்பிடுவாயல்லவா. அப்படிக் கூப்பிட்டால் நான்தான் நலங்கிடுவேன். அடியேய், எனக்குத் தலைப் பின்னலுக்கு ஒரு இடம் விடடி. நகைகளை இவள் செய்யட்டும். உடைகளை இவள் பார்த்துக் கொள்ளட்டும்."

அப்பொழுதே வேலைகளைப் பிரித்துக் கொள்ள சண்டை போடுவார்கள்.

பரமிக்குச் சந்தோஷம் தாங்காமல் நெஞ்சம் வெடித்து விடுமோ என்ற பயம் வந்தது. மிகக் கவனமாக அவள் தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டாள். கண் திறந்து மலங்க மலங்க விழித்தாள்.

எனக்குத் திருமணம் என்று தட்டுத்தடுமாறி சொன்னாள். அவள் நினைத்ததைப் போல சந்தோஷக் கூச்சல்கள் அங்கு எழும்பின. அவள் நினைக்காதது போல வேறு சில பெண்கள் இந்தக் குண்டுக் கழுதைக்கு வந்த கொடுப்பினையைப் பார்த்தாயா. அந்தப் பேரழகன் சீராளன் இவளுக்குக் கணவனாம்.

கடவுளுக்குக் கண்ணில்லை என்பது சரிதான் என்று முணுமுணுத்தார்கள்.

தனக்கு ஒரு நல்லது நடந்தால் எல்லோரும் பாராட்டு வார்கள். நிச்சயம் வாழ்த்துவார்கள் என்று நினைப்பதில் ஒரு பிசகு இருக்கிறது. உலகம் பலதரப்பட்ட ருசிகளை உடையது. விதம்விதமான முகங்களை உடையது. அது நிதானம் உள்ளவர் களுக்கே புரியும்.

வீட்டிலுள்ள பெண்கள் அகன்ற பிறகு பெருந்தச்சர் நிதானமாக யோசித்தார்.

தனது வயது ஒத்தவரும், தன்னைப்போல திறம்பட வேலை செய்பவரும், தனக்கு எல்லா விதத்திலும் உதவியாக இருக்கின்ற வருமான விஸ்வநாத ஆச்சாரியை அழைத்தார்.

விஸ்வநாத ஆச்சாரி கட்டுமானப் பணியாளர். மண் பரிசோதனையில் நிபுணர். மிகமிக அமைதியானவர். தனது கெட்டிக்காரத்தனத்தை மறந்து போயும் எங்கேயும் பறைசாற்றிக் கொண்டதில்லை. நீங்கள் யார் என்று கேட்டால் பெருந்தச்சர் என்று அவர் சொல்ல மாட்டார். நான் ஒரு கற்சிற்பி என்று சொல்லுவார். அப்படியொரு இடத்தில் சொல்லி அம்மி கொத்தித் தர முடியுமா என்று கேட்டு, இவரும் போய் அம்மி கொத்திவிட்டு வந்தார்.

திருவிடைமருதூர்க் கோயில் மண்டபம் கட்டி விமானம் எழுப்பியவர் என்று தெரிந்ததும் அந்த வீடு ஆடிப் போயிற்று. ஓடிவந்து மன்னிப்பு கேட்டது.

அவசியமே இல்லை. எனக்கு அம்மி கொத்தவும் தெரியும். அதனால்தான் செய்தேன். அந்த வேலை தெரியவில்லை என்றால் தெரியாது என்று சொல்லியிருப்பேன் என்று அவர்கள் புலம்பலைச் சாதாரணமாக்கி விட்டார்.

அந்த விஸ்வநாத ஆச்சாரியை அழைத்து, “சீராளனிடம் போய் அவன் அபிப்ராயத்தைக் கேட்டுக் கொண்டு வாரும், தற்காலத்தில் பையன்கள் சுதந்திரமானவர்களாக இருக்கிறார்கள். தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்று சொன்னால், மேற் கொண்டு வேறு ஏதேனும் பேசு என்பார்கள். சீராளன் அப்படிப் பட்டவன் இல்லை என்றாலும், காலத்தை அனுசரித்து அவனி டம் போய் என் மகளை அவனுக்குச் செய்து கொள்ள நான் விரும்புகிறேன் என்று சொல்லி, அவன் விருப்பத்தையும் கேட்டு வாரும். அது நல்லது என்று நினைக்கிறேன்” என்று சொன்னார்.

"ஆமாம், அதுதான் நல்லது. நீங்கள் சொல்வது போல இப்பொழுதெல்லாம் பையன்கள் மிகச் சுதந்திரமாக இருக்கிறார்கள். நம்முடைய இளம் வயதில், நீரும், நானும் நடனம் பார்க்கப் போவதற்கு பயப்படுவோம். அது தவறாகி விடுமோ. யாரேனும் கேலி பேசுவார்களோ, இழிவாகச் சொல்லி விடுவார்களோ என்று பதறுவோம். இப்பொழுது அப்படியெல்லாம் இல்லை. நடனப் பெண்களின் தோளில் கை போட்டுக் கொண்டு போகிறார்களாம். அந்தப் பெண்கள் வரும்போது பறையடிப்பவரை துரிதமாக முழங்கச் சொல்லி இவர்களும் ஆடி, அந்தப் பெண்களை ஆட்டத்துக்கு அழைக்கிறார்களாம். அந்தப் பெண்கள் ஆடாமல் போனால் உனக்கு ஆடத்தெரியாதடி என்று கேலி செய்கிறார்களாம். ஆடும்படி வற்புறுத்துகிறார்களாம். கேட்கவே ஆச்சரியமாக இருக்கிறது. ஆனால், நீர் சொன்னது சரி, சீராளன் அப்படிப்பட்டவன் இல்லை. நம்முடைய பரம்பரையில் அவன் மாறுதலானவன். இல்லை. நம்முடைய பரம்பரையில் அவன் வேறு வார்ப்பு. ஆனால், தளுக்கன். அவனுடன் இரண்டு ஆட்கள் எப்பொழுதும் வருகிறார்கள். தடுக்குப்பாய், தண்ணீர்க் கூஜா என்று ஒரு ஆளும், ஓவியங்கள் தூக்கி வருவதற்கு இன்னொரு ஆளும் என்று ஒரு பட்டாளத்தோடு தான் போகிறனாம் சரி, அவன் தொழிலுக்கு அது தேவையாக இருக்கிறது என்று எல்லோரும் மௌனமாக இருக்கிறார்கள். எனக்கொரு கேள்வி இருக்கிறது. பதில் சொல்வீர்களா."

விஸ்வநாத ஆச்சாரி பெருந்தச்சர் குஞ்சர மல்லரிடம் கேட்டார்.

"கேளுமேன், எதுபற்றி."

"உம்முடைய மகள் திருமணம் பற்றித்தான்."

"தாரளமாகக் கேளும்."

பெருந்தச்சர் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"நித்த வினோதப் பெருந்தச்சன், இல்லத்திச் சடையன் என்று நம்முடைய தொழிலே செய்கின்ற இளைஞர்கள் இருக்கிறார்கள். கல்லில் வேலை செய்கிறவர்களாக இருக்கிறார்கள். கட்டுமானப் பணியாளர்களாக இருக்கிறார்கள். அவர்களை விட்டு விட்டு ஓவியம் வரைகின்ற தளுக்கனுக்கு உமது பெண்ணைக் கொடுக்கிறேன் என்று சொல்கிறீர்களே. சரிவருமா."

"என்ன கேட்கிறீர்கள். நமக்கு ஓவியம் அன்னியமா. அவன் நான் வளர்த்த பையனய்யா."

"இருக்கலாம். நமக்கு ஓவியம் அன்னியமில்லைதான். ஆனாலும் கல்லை அடித்து நொறுக்குகின்ற நம் கைகள் வேறு, தூரிகை பிடித்துக் கொண்டு முன்னும் பின்னும் அசைக்கின்ற அவன் கைகள் வேறு. உழைப்புக்குத் தகுந்தபடிதான் புத்தியும் வேலை செய்யும். வேலைக்குத் தகுந்தது போலதான் உணவு இருக்கும். உணவுக்குத் தகுந்தது போலத்தான் உற்சாகங்களும் இருக்கும். மனக் கிளர்ச்சியும் உழைப்பைப் பொறுத்து வேறுபடும்.

சீராளனை உற்றுப் பார்க்கும்போதெல்லாம் அவன் வெறுமே கட்டிக் கொண்டுத் தூங்குகின்ற பையன் போல் எனக்குப் படும். உனது மகளோ நல்ல வனப்பு மிகுந்த வளம் கொண்டவள். அதனால் சொல்கிறேன். யோனிப் பொருத்தம் என்று ஒன்று இருக்கிறதல்லவா. அதை ஜோதிடரை வைத்துக் கொண்டு பார்த்தால் தெரியும். எருதுக்குப் பசு, சிம்மத்திற்குப் புலி என்று இருக்கலாம். மாறாய்ப் பூனைக்கு குரங்கு என்று வந்து விட்டால்."

"உண்மையில் ஜோசியம் பார்க்கின்ற இடத்தில் நான் இல்லை. என் வீடும் இல்லை. என் வீடு வளர்த்த பையன் சீராளன், இன்று உயர்வாக இருக்கிறான். கொடி பறக்க வாழ்கிறான். அவனை வளைத்துப் போட்டு உன் மருமகனாகச் செய்து கொண்டால் என்ன என்று என் வீட்டுப் பெண்கள் ஒன்று கூடிப் பேசி, என்னைச் சம்மதிக்க வைத்து விட்டார்கள். நானும் தலையசைத்து விட்டேன் இதை நல்லபடி முடித்துத் தர வேண்டியதற்காகத்தான் உங்களுடைய உதவியை நாடுகிறேன்."

பெருந்தச்சர் கைகூப்பினார்.

கூப்பிய கையை விஸ்வநாத ஆச்சாரி விரைவாகப் பிடித்து மடக்கி அவர் கழுத்தைத்தடவி கண்களில் ஒற்றிக் கொண்டார்.

"நீர் பெரிய ஞானவான். உமக்கு நல்லதே நடக்கும். வாழ்வின் சுகதுக்கங்கள் அறிந்தவர் நீர். உம்மால் எதையும் தாண்ட முடியும். எதையும் எதிர்கொள்ள முடியும். நீர் சொன்னது போலவே நான் சீராளனிடம் பேசிவிட்டு வருகிறேன்."

விஸ்வநாத ஆச்சாரி எழுந்தார். அந்த மரப்பலகையின் ஓரத்தில், இடுக்கில், அவர் மேல் துண்டு மாட்டிக் கொண்டது. எழுந்து அவர் உட்கார்ந்து சிக்கலை விடுவித்துக் கொண்டு மறுபடியும் சால்வையைப் போர்த்திக் கொண்டு போனார். என்னவோ சரியில்லை என்று தெளிவாகத் தெரிந்தது.

"திரிபுரம் எரித்த சிவன் என்ற விஷயம் தெரியுமா. உனக்கு."

சீராளன் உமையாளைக் கேட்டான்.

வெளியே மேகமூட்டமாயிருந்தது. காற்று சிலுசிலு என்று வீசியது. சீராளனின் தாயும், தங்கையும் கடைத் தெருவிற்குப் போயிருந்தார்கள்.

சீராளனின் தந்தை வண்ணக் கலவைக்காக வெளியூர் போயிருந்தார். அவர் வரும்போது விதம்விதமான வர்ணங்கள் மூட்டை மூட்டையாகக் கொண்டு வருவார்.

சீராளன் உமையாளோடு பேச ஆரம்பித்ததும், சீராளனின் உதவியாளர்கள் மெல்ல இடம், வலம் பார்த்து அந்த இடத்தை விட்டு நகர்ந்துவிட்டார்கள். வாசற்பக்கம் காவல் மறவன் மட்டும் இருந்தான். அந்தக் காவல் மறவனுக்குத் தூக்கம் தூக்கமாக வந்தது. மெல்ல திண்ணையில் சாய்ந்து கொண்டே தூங்கினான்.

சீராளனின் வீடு நறுமணப் புகையினாலும், குளிர்க் காற்றா லும் சூழப்பட்டு அமைதியாக இருந்தது. அவன் தோட்டத்தில் புறாக்கள் முன்னும், பின்னும் அலைந்தன. க்கூம்... க்கூம்... என்று ஓசையை எழுப்பின. பேடையை வசீகரிக்க ஆண் புறா தோகையை விரித்து காட்டியது. பல பெண் புறாக்கள் சிவந்த விழிகளை உருட்டி உருட்டி ஆண் புறாவின் அசைவைப் பார்த்துக் கொண்டிருந்தன. பவழமல்லி கட்டவிழ்ந்தது. முல்லை நறுமணம் வீசிற்று. செண்பக மொட்டுக்கள் மலரத் துவங்கின. நெல் அவித்த வாசனை ஒன்று வீட்டில் நிரந்தரமாக இருந்தது.

“தெரியாது சொல்லுங்கள்”

‘‘சிவன் அம்பு தொடுத்து போருக்குத் தயாரானார் சிவனுக்கு முன்னே கணபதியும், அம்பாளும் சுப்பிரமணியரும், இன்ன பிற தேவர்களும் அசுரர்களை நோக்கிப் பாய்ந்தார்கள் அசுரர்கள் போருக்குத் தயாரானார்கள். அவர்கள் போருக்குத் தயாராகின்ற வேகத்தைப் பார்த்துவிட்டு கோபமாக வந்த சிவன் சிரித்து விட்டார்.

என்னை எதிர்த்தா இத்தனை வேகமாகப் போர் ஏற்பாடுகள் என்று அவர் ஏளனமாய்ச் சிரிக்க, சிரித்த அடுத்த கணமே அந்த அசுரர்கள் பொசுங்கி விட்டார்கள்.

போர் என்பது அங்கு தேவையில்லாமல் போய் விட்டது. இறைவன் ஏளனமாய்ச் சிரித்தால் போதும். எல்லாமும் அழியும். இறை என்பது மிகப்பெரிய சக்தி என்பதை இந்தக் கதை சொல்லுகிறது.”

சீராளன் பேச்சை நிறுத்தி அவளை உற்றுப் பார்த்தான். உமையாள் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"எனக்கு ஆச்சரியமான விஷயம் இதில் உண்டு."

"என்ன அதெப்படி சிரித்துப் பொசுக்க முடியுமென்றா?"

"இல்லை. பொசுக்க முடியும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு."

"சிவன் கோபமாகப் பார்த்தார். நெற்றிக்கண் திறந்தார். சிரித்தார். உனக்குப் புரியவில்லையா." சொல்லிவிட்டு மறுபடியும் சீராளன் அவளை உற்றுப் பார்த்தான்.

உமையாள் மெல்ல அவனையே பார்த்துக் கொண்டிருந் தாள்.

"புரிகிறது." என்று கூவினாள்.

"என்ன சொல் பார்க்கலாம்" என்று கூறினான்.

"சிவன் கோபமாக பார்த்தார். நெற்றிக்கண் திறந்தார். அதாவது கோபத்தின் உச்சியில் இருந்தார். ஆனால், ஏளனமாய்ச் சிரித்தார் அல்லவா. அதாவது சிரிப்பும், கோபமும் ஒரே முகத்தி லிருந்து ஒரே நேரத்தில் வெளிப்பட்டன."

"அற்புதம், அற்புதம்."

எழுந்து நின்று அவள் தோள்களைத் தட்டி, கன்னத்தை வருடி, நெற்றியில் சீராளன் முத்தமிட்டான்.

அவள் சட்டென்று வெட்கப்பட்டாள்.

ஆனால் சீராளனுக்கு அவளுடைய வெட்கம் எந்தத் பாதிப்பையும் தரவில்லை. அவன் மனம் அந்த முகத்திலேயே இருந்தது. அந்த பாவத்திலேயே இருந்தது. அதை எப்படி ஓவியத் தில் கொண்டு வருவது என்ற சிந்தனையே இருந்தது."

"எனக்கு மறுபடியும் ஒரு கேள்வி."

சீராளன் தொடர்ந்தான்.

"என்ன. எப்படி சிவனால் கோபத்தையும், சிரிப்பையும் ஒரே நேரத்தில் கொண்டு வர முடிந்தது என்றா?"

உமையாள் கேட்டாள்.

"இல்லை. திரிபுரத்தை எரித்த சிவனால் சிரிப்பையும், கோபத்தையும் ஒரே சமயத்தில் காட்ட முடியாதா. சிவனால்

எதுவும் செய்ய முடியும். எல்லாமும் செய்ய முடியும். எனக்கு அது குறித்து எந்தச் சந்தேகமும் இல்லை. ஆனால் இதை உன்னால் செய்ய முடியுமா."

"புரியவில்லையே."

"உன்னால் கோபமாகவும், ரிபபாகவும் இருக்க முடியுமா."

"புரியவில்லையே."

"கோபம் என்பது எப் டி வெளிப்படுகிறது."

"பல்லைக் கடிப்பதிலிருந்து."

"இல்லை."

"நீ என் மீது கோபப்படு." அவள் நாணபபட்டாள்.

"கடவுளே, நீ என் மீது கோபப்படு."

அவள் மறுபடியும் வெட்கப்பட்டாள்.

"உமையாள் நாம் வேலை செய்து கொண்டிருக்கிறோம். மிக முக்கியமான விஷயத்தை விவாதித்துக் கொண்டிருக்கிறோம். இங்கு நாணப்படுவதற்கு என்ன இருக்கிறது."

சுருக்கென்று சற்று உரத்த குரலில் சீராளன் கூவினான்.

அவள் தன்னைச் சுதாரித்துக் கொண்டாள்.

"சரி, சொல்லுங்கள்" என்று நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

அவள் ஆடை சற்று நெகிழ்ந்து அவள் வனப்பைக் காட்டியது. ஆனால் சீராளன் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"நீ என் மீது கடும் கோபத்தை இப்போது காட்டு."

அவள் முகத்தில் ஜன்னலிலிருந்து வந்த வெளிச்சம் மெல்ல பரவிக் கொண்டிருந்தது.

சீராளன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். சற்று தலைகுனிந்து உமையாள் யோசித்தாள்.

அவன் மீது கோபம் கொள்ள முடியுமா. முடியாது. ஆனால் வேறு ஆளாகப் பார்த்துவிட்டால் கோபம் கொள்ள முடியும். அவனை யாராகப் பார்ப்பது. உமையாளுக்குக் குடிப்பவனைப் பிடிக்காது. குடித்துவிட்டு பேசுபவனைப் பிடிக்காது. இப்

பொழுது எதிரே ஒருவன் குடித்துவிட்டு வாடி என்று அசிங்க மாகப் பேசுகிறான் அவனை எப்படிப் பார்ப்பது.

சட்டென்று உமையாள் நிமிர்ந்தாள். கண்களில் கனல் தெறித்தது.

'என்னையா மறிக்கிறாய் நாயே..' என்று உள்ளுக்குள் ஒரு கோபத்தை வரவழைத்துக் கொண்டாள். கண்கள் வெறிக்க அவனைப் பார்த்தாள்.

சீராளன் கை தட்டினான்.

"அற்புதம். உன் முகம் பேசுகிறது உமையாள், என்ன கோபம். உமையாள் இப்போது கோபத்தைக் காட்டியது. உன் கண்கள். பற்களல்ல. உன்னுடைய பற்களை நீ நரநரவென்று கடிக்க வில்லை. உதடுகளை மடிக்க வில்லை. வெறுமே என்னை வெறித்துப் பார்த்தாய். உன் கண்களிலிருந்து கோபம் பொங்கியது. இப்போது என்னை அட அல்பமே என்று ஏளனமாகப் பார்த்துச் சிரி."

"உங்களைப் பார்த்து நான் எப்படிச் சிரிப்பது. அப்படி யெல்லாம் என்னால் சிரிக்க முடியாது."

"பரவாயில்லை சிரி."

"நீங்கள் மிகப்பெரிய ஓவியர். அரசர் கொண்டாடுகின்ற ஓவியர். அரசரும், மற்றவர்களும் உங்களை எப்படிக் கொண் டாடுகிறார்கள் என்று அந்தச் சபையில் நான் பார்த்தேன். உங்களையெல்லாம் ஏளனமாகப் பார்த்து என்னால் சிரிக்க முடியாது."

"சற்று முன் கோபமாகப் பார்த்தாயே."

"உங்களைப் பார்க்கவில்லை."

"யாரைப் பார்த்தாய்."

"வேறு ஒருவரை நினைத்துக் கொண்டு பார்த்தேன்."

"அதேபோல வேறு ஒருவரை நினைத்துக் கொண்டு ஏளனமாக, இழிவாக உன்னால் என்ன செய்ய முடியும் என்று கேலியாகச் சிரி." விளக்கினான்.

மறுபடியும் உமையாள் தலை குனிந்தாள். அவன் காத்திருந் தான். அவள் கழுத்து வளைவு. தோளின் குழைவு, புஜத்தின் அசைவு, இடையின் குறுகல், இடுப்பின் பெருமிதம், தொடையின்

வழிசல், முழங்காலின் உருளை, ஆடு தசையின் கரவு, பாதத்தின் திண்மை, விரல்களின் நேர்த்தி என்று பார்த்து பார்த்து வியந்து கொண்டிருந்தான்.

அவள் மனதுக்குள் வேறு ஒருவனைக் கொண்டு வந்து நிறுத்தினாள். மத்திம வயது தாண்டிய குடிகாரன். புளியமரம் ஏறி பெண்கள் குளிப்பதை எட்டிப் பார்த்தவன். அவனைக் கல் எறிந்து இறக்கி கட்டிப்போட்டு ஆண்கள் அசிங்கப்படுத் தினார்கள்.

அவன் கைகூப்பி அழுதான். அப்போது பல பெண்கள் அவனை ஏளனமாகப் பார்த்தார்கள். உயரமும், அகலமுமாய் இருக்கிறாய். ஆனால் புத்தி ஏனடா இப்படி இருக்கிறது என்று இரைந்தார்கள் அதை நினைத்துக் கொண்டாள்.

சட்டென்று தலை நிமிர்ந்தாள்.

ஏளனமாகப் பார்த்தாள். அவள் உதடு மெல்ல கோணி, மூக்கு சற்று விடைத்து, முகவாய் சற்று கீழிறிங்கி, வாய் பிளந்து அழகாக ஏளனத்தை வெளிப்படுத்தியது.

"நில். அப்படியே நில். அந்த ஏளனத்தை அங்கேயே வெளிப் படுத்து. இப்போது, இப்போது கண்களில் அந்தக் கோபத்தை வெளிப்படுத்து. வெறிக்கப் பார் விழிகளை விரித்து வெறிக்கப் பார். பார், பார், கோபம் கண்களில், உதடுகளில் ஏளனம். ஏளனத்தை விட்டுவிடாதே அப்படியே நிறுத்து கண்களில் கோபம் கொண்டு வா. கொண்டுவா. மெல்லக் கொண்டு வா. ஆமாம் இப்பொழுது என்னைக் கோபமாகப் பார். ஏளனமாகச் சிரி."

அவள் அவன் சொன்னது போலச் செய்தாள். அவன் திகைத்தான். அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"போதும். மிக்க நன்றி. போதும். இது என்மனத்திரையில் படிந்து விட்டது. நான் வரைவேன். வெகு நிச்சயமாய் வரைவேன். உமையாள், உன் முகம் மெல்லியதாக இருக்கிறது. என்ன சொன் னாலும் கேட்கிறது. உன்னுடைய முகத்திலிருந்து பாவங்கள் சிதறுகின்றன. உன் அசைவு மட்டுமல்ல உமையாள், உன்னுடைய கண்களும், மூக்கும், உதடும், முகவாயும் கன்னமும் அழகாகப் பேசுகின்றன. உமையாள் இப்பொழுது எழுந்து நில். மரப்பீடத் தில் ஏறி நின்று கொள். அந்த மரப்பீடம்தான் தேர். இறைவனது தேர் இப்பொழுது இறைவனது தேர் வெகு வேகமாப் போகிறது.

வேகமாக ஓடும் தேரில் ஒருவன் எப்படி நிற்பான் என்று தெரியுமா.”

“தெரியும். நான் நின்றிருக்கிறேன்.”

“எப்படி.”

“உங்களோடு வந்தேனே அப்போது தேரில்தானே வந்தேன்.”

“என்னோடு தேரில் வந்தாயா, எப்போது.”

“என்ன இது. என்னைப் பெருந்தச்சர் சபைக்கு அழைத்துப் போகவில்லையா.”

“ஆமாம், ஆமாம். என்கூட நீயும் வந்திருந்தாய் அல்லவா.”

“ஆமாம்.”

“இப்பொழுது சொல் எப்படி நிற்பாய்.”

உமையாள் வியந்தாள்.

தன்னோடு வந்ததே மறந்துவிட்டதா. இருபது வினாடிகள் அருகே நின்று விட்டுப் போனதை ஒரு கவிஞன் ஊரில் கவிதை யாக எழுதிக் கொண்டு வந்திருந்தான். ஆனால் இவனுக்குக் கூடவே ஒரு நாள் முழுவதும் இருந்தது மறந்து விட்டது. அப்படி யானால் இவன் புத்தி எங்கிருக்கிறது. வேலையில், வேலை செய்வதில் வேலை செய்வதில் மட்டுமே இருக்கிறது.

உமையாள் அவனைப் பெருமையோடு பார்த்தாள்.

அவளுக்கு அவனைப் பிடித்திருந்தது.

ஒரு ஆண் மகன் வேலையில் ஆர்வமுடையவனாய் வேலை செய்வதில் திறனுடையவனாய் வேலை செய்வதில் உச்சாணி இடத்தைத் தொடுபவனாய் இருத்தல் வேண்டும். சோம்பேறிகளை உமையாளுக்குப் பிடிப்பதேயில்லை. சோம்பேறித்தனம் கெட்ட பழக்கத்தில் முதன்மையானது. குடிப்பது, குடிபோதையில் இருப்பது, குடிபோதையில் இருப்பவரை மனிதர் என்றே எவராலும் சொல்ல முடியாது. தான் சுதந்திரமாக இருப்பதற் காக, தான் வாய்க்கு வந்ததைப் பேசுவதற்காக, தான் இஷ்டப்படி நடந்து கொள்வதற்காக குடிகாரர்கள் மற்றவர்களைத் துன்புறுத் துவார்கள். ஏளனம் செய்வார்கள். கோபமாய் கத்துவார்கள். அசிங்கப்படுத்துவார்கள். அருவருக்க வைப்பார்கள். குடிகாரர் களைப் போலக் கேவலம் எதுவுமில்லை. அதே போல சோம் பேறிகள், சம்பாதிக்கத் தெரியாதவர்கள் மோசமானவர்கள்.

அவன் வீடு மிகப்பெரியது. அழுத்தமான கூரையில் வேயப் பட்டிருக்கிறது. நெருக்கமான மூங்கில்களால் கூரை தாங்கப்பட் டிருக்கிறது. உத்திரக்கட்டைகளாகப் பெரும் மூங்கில்கள் நிறுத்தப் பட்டிருக்கின்றன. அவனுடைய கட்டில் எவ்வளவு அகலம். கூடத்தில் பல்வேறு வகையான ஆசனங்கள். மூலையில் நீர்த் தாவரம். பெரிய நிலைக்கண்ணாடி. முற்றத்தில் துளசி மாடம். அதற்கெதிரே விஸ்வகர்மாவின் ரெண்டு முழ உயரச்சிலை. வீட்டின் கிழக்குப்பக்கம் நாகப் பிரதிஷ்டை அந்த நாகப் பிரதிஷ் டைக்கு அருகேயுள்ள சுவரில் வெள்ளை அடித்து பிரம்மாண்ட மான ஆலமரம். விதம்விதமான பட்சிகள். கீழே பசும்புற்கள். மேலே எதிர்எதிரே சுவாமி மாடம். உள்ளே பெரும் விளக்கு. விளக்கு இடையறாது எரியக்கூடாதாம். இரவு நேரம் குளிர்வித்து விடுவார்களாம். பிறகு காலையில் திரி போட்டு தங்கையோ, அம்மாவோ விளக்கேற்றுவார்களாம். குனிந்து வணங்குவார் களாம். அதற்கெதிரே நிரந்தரமாக ஒரு மாக்கோலம். பூஜை மாடத்திற்கு எதிரே சாப்பிடும் அறை. அதைத் தாண்டி சமையல் அறை. இரண்டுமே பெரும் ஜன்னல்களோடு வெளிச்சமாக இருக்கும். அறைகளை ஒட்டி ரேழி. ரேழியைத் தாண்டி விருந் தினர் அறை. அதையும் தாண்டி அரிசிக் குதிர். அதைத்தாண்டி சாமான்கள் வைக்கும் அறை. பிறகு நல்ல செடிகளுடைய நந்தவனம்.

வீடு எப்பொழுதும் சுத்தமாக இருந்தது. வீட்டிலுள்ள மனிதர்கள் சுறுசுறுப்பாக இருந்தார்கள். அதே சமயம் மிருதுவாக இருந்தார்கள்.

"அம்மா இது உமையாள். எனக்கு ஓவிய மாதிரியாகப் பெருந்தச்சர். அனுப்பி வைத்திருக்கிறார்."

தகப்பனிடமும் போய் உமையாளை அறிமுகப் படுத் தினான்.

"அடாடா... அழகு மிக அழகு. கடவுள் கிருபை. ஆண்டவன் செய்கின்ற எத்தனையோ ஜாலங்களில் இவளும் ஒன்று... வாழ்க... வாழ்க.." தந்தை கை உயர்த்தி ஆசீர்வதித்தார்.

நடனமாடும் பெண்ணை நடுக்கூடத்திற்கு அழைத்து வராதே என்று பழமொழியெல்லாம் சொல்வார்கள். ஆனால் இந்த வீட்டில் எங்கும் போக முடிந்தது. எங்கும் வரமுடிந்தது. எல்லோரோடும் சுமுகமாகப் பழக முடிந்தது. எல்லாவற்றையும் விட அற்புதம் இந்தச் சீராளன்.

அரசரோடு ஒருமுறை பேசிவிட்டு வந்தால், இந்த வீணை ஆதிச்சன் என்பவன் மிகப்பெரிய அலட்டல் காட்டுவார். எதுவும் என்னைக் கேட்டுக் கொண்டு செய்யுங்கள். இல்லையென்றால் சக்ரவர்த்தி தவறாக நினைத்துக் கொள்வார். என்னைத்தாண்டி எதுவும் செய்து விடாதீர்கள் என்றெல்லாம் பேசுவார். பெண்கள் அவரைப் புறக்கணிப்பார்கள்.

ஆனால், சீராளனுக்கு எல்லோரிடமும் பேசுகின்ற, பழகுகின்ற வாய்ப்பு இருப்பினும், சக்ரவர்த்தியோடு நெருங்கி நின்று உரையாடிய பின்னும் அது குறித்து எந்தக் கர்வமும் இல்லாமல் சாதாரணமாக இருக்கிறான்.

அவள் சட்டென்று கூடத்திற்குப் போய் முகம் கழுவிக் கொண்டாள். குங்குமத்தைச் சரி செய்து கொண்டாள். நெற்றியில் திருநீறு தரித்தாள். அந்த திருநீற்றுக்கு நடுவே நிலைக்கண்ணாடி பார்த்து ஒரு பெரிய திலகம் வரைந்து கொண்டாள்.

இதுதான் நெற்றிக்கண் என்று நினைத்துக் கொண்டாள். மடமடவென்று பின்னலைப் பிரித்து விட்டுக் கொண்டாள்.

சிவபெருமானது செஞ்சடை விரித்துத்தானே இருக்கும் என்று தன் மேலாடையை இறுக்கிக் கொண்டாள். இடுப்பு கச்சத்தை தளரவிட்டு அதையும் இறுக்கிக் கொண்டாள்.

அவன் துணியை வேகமாக மடித்து ஒரு கிரீடம் போல் செய்து கொண்டு அருகே வந்து அவள் தலையைச்சுற்றி இறுக்கக் கட்டினான். இப்பொழுது விரித்த சடைக்கு மேலே ஒரு கிரீடம் அமர்ந்து கொண்டது. அந்த ஆசனத்தின் மீது ஒரு காலை நீட்டி, இன்னொரு காலை அழுந்த வைத்து வில்லை ஊன்றி நின்றாள்.

"வில்லை ஊன்றாதே. வில்லை ஊன்றினால் போருக்கு இறைவன் தயாராகவில்லை என்று அர்த்தம். வில்லை தூக்கிப்பிடி."

சீராளன் கட்டளையிட்டான்.

அவள் காலை நகர்த்தினாள்.

"இல்லை. காலை நீ வைத்தது போலவே வைத்துக் கொள். வில்லை மட்டும் தூக்கிப்பிடி. முன் ஒரு கால், பின்னொரு காலாக இரு. வண்டி வேகமாகப் போகிறது. ரதம் பறக்கிறது. தேரின் ஆட்டம் மிக வேகமாக இருக்கிறது. அப்படியானால் உன் உடம்பு எப்படியிருக்கும்."

அவள் சற்று உடம்பை பின்னுக்கு சரித்துக் கொண்டாள்.

"இப்பொழுது ஏளனமாகச் சிரி. கோபமாகப் பார். ஏளனமாகச் சிரி. கோபமாகப் பார்."

அவன் கத்தினான். அவளைச் சுற்றிச் சுற்றி வந்தான். அவளை வியப்போடு பார்த்தான்.

ஒரு வெள்ளைத் துணியை விரித்து முற்றத்து வெளிச்சத்தில் திசை திருப்பி அவள் முகத்தில் பாய்ச்சினான்.

வெள்ளைத்துணியின் ஒளிபட்டு முகம் மினுமினுத்தது.

"இது சரியில்லை உமையாள். அப்பொழுது காண்பித்தது வேறு. இப்போது நடிக்கிறாய். உண்மையாக இரு உமையாள் உண்மையாக இரு. சிவன் திரிபுராந்தகன். திரிபுரத்தை எரித்தவன். செஞ்சடையன். அதே வேகத்தில் இரு. என்னையா எதிர்க்கிறாய் என்று ஏளனத்தோடு இரு. அதே நேரம் கோபத் தோடு இரு."

அவன் சொல்லச் சொல்ல அவள் உருமாறினாள். தனக்குள் திசை மாறினாள். அவன் சொன்னதை உள் வாங்கிக் கொண்டு தன்னைச் சிவனாக்கி ஏளனமாகப் பார்த்தாள். பிறகு கோபமாக வெறித்தாள்.

அவன் திகைத்தான்.

"கடவுளே, கடவுளே என் சிவனே. தென்னாடுடைய சிவனே போற்றி. எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி." பிளிறினான். முன்னும், பின்னும் அலைந்தான். தொலைவில் நின்று பார்த்தான். அருகில் நின்று பார்த்தான். மிக அருகில் வந்து அவளை நுகர்வது போல் நின்று பார்த்தான். இன்னும் சற்று விலகினான். இடப் பக்கம் போனான். வலப் பக்கம் போனான். சுற்றி வந்தான். மெல்ல அவள் எதிரே மண்டியிட்டு அவள் நின்றிருந்த ஆசனத்தில் தலையை வைத்தான். அழத் துவங்கினான்.

அவள் பயந்து போனாள். அவள் தன்னை மெல்ல நேராக்கிக் கொண்டாள். கீழே இறங்கினாள். அருகே வந்து அமர்ந்து கொண்டாள். ஆசனத்தின் மீது நெற்றியை வைத்து குலுங்கி அழுது கொண்டிருந்தவன் முதுகைத் தடவினாள்.

"என்னாயிற்று." காதோரம் வினவினாள்.

அவன் திரும்பி அவளைப் பார்த்தான். முகம் துடைத்துக் கொண்டான். சிரித்தான்.

"நான் இறைவனைப் பார்த்தேன். உன் முகத்தில், உன் வடிவில் தென்னாடுடைய என் சிவனைப் பார்த்தேன். என்ன அற்புதமான முகம் உமையாள். நீ பூங்கொடி போல இருக்கிறாய். புயல்போல இருக்கிறாய். தழல் போல இருக்கிறாய். நீ இறைவன் அளித்த வரம். எனக்காகப் படைக்கப்பட்ட பிரகிருதி."

மெல்லத் திரும்பி இறுக்கி அவளை அணைத்துக் கொண்டான். அவள் முகத்தைத் தடவினான். ஆவலாக அவள் முகத்தைப் பார்த்தான்.

"என்னைப் பிடித்திருக்கிறதா உங்களுக்கு."

உமையாள் அவன் காதோரம் கேட்டாள்.

"மிகவும் பிடித்திருக்கிறது உமையாள். உமையாள், உமையாள் நான் உன்னை நேசிக்கிறேன். என்னைத் தாண்டி நீ வேறு எவரிடமும் போகக்கூடாது என்று கவலைப்படுகிறேன். நீ யார் என்று எவருக்கும் தெரியாது. உன் முகத்தின் மாறுதல்கள், உன் உடம்பின் அசைவுகள், உன் அங்கங்களின் வடிவுகள் பற்றி வேறு எவருக்கும் புரியாது. எனக்குப் புரிகிறது. நீ இறைவனால் தனித்த விதமாய்ச் செய்யப்பட்ட ஒரு பிரகிருதி. நீ வெறுமே நாட்டியமாடி ஜனங்களைக் குதூகலப்படுத்தப் பிறந்தவளல்ல. போகத்திற்காகப் படைக்கப்பட்டவளல்ல. நீ ஓவியத்திற்காக உருவானவள். உமையாள் நீ என்னோடேயே இரு. எப்போதும் இரு."

"அப்படியானால் என்னை, என்னை,"

அவள் தயங்கினாள்.

"கேள். என்ன வேண்டும் உனக்கு."

"என்னைத் திருமணம் செய்து கொள்வீர்களா.

அதுதான் என் விருப்பம்."

"நானும் உன்னை அப்படித்தான் கேட்க ஆசைப் படுகிறேன். வெறுமே நடபாக, வெறுமே தொடர்பாக இல்லாமல் நீயும், நானும் கணவன் மனைவியாய் ஆனால் என்ன எனக்கு மட்டுமே நீ என்று வாழ்க்கைப் பட்டால் என்ன. தேவரடியார் கழுத்தில் பொட்டு கட்டி, பலபேர் முன்பு நடனமாடி இருக்க வேண்டிய பெண். நீ திசை மாறினால் என்ன. எங்கள் வீட்டு மருமகளாக வந்தால் என்ன."

"அம்மா ஏற்றுக் கொள்வார்களா."

"நீ எனக்கு மட்டும் என்று இருந்தால் அம்மா இரு கை நீட்டி வரவேற்பார்கள். பிறகு நடனமாட வேண்டும் என்று போனால் அம்மா வருத்தப்படுவார்கள்."

"இல்லை. நான் நடனம் கற்றுக் கொள்வது எல்லோர் முன்பு ஆட அல்ல. வேறு என்ன செய்வது என்று தெரியாமல் கற்றுக் கொண்டேன். உங்களைப்போல ஒரு கணவர் கிடைத்தால் எனக்கு நடனம் இரண்டாம் பட்சம்."

"உன்னுடைய முதல் பட்சம் அப்போது எது."

"உங்களுடைய ஓவியம். உங்களுக்குத் துணையாக இருத்தல். வாழ்நாள் முழுவதும் உங்களையே நினைத்துக் கொண்டிருத்தல். உங்களையே பார்த்துக் கொண்டிருத்தல். உங்களுடைய எல்லாச் செயல்களிலும் துணையிருத்தல்."

"உமையாள் விமானத்தின் கருவறைக்கு மேலே முதல் தளத்தில் ஓவியம் வரைவதற்காகச் சுண்ணம் அடித்து மழமழப் பாக்கித் தரப்போகிறார்கள். அந்த பரப்பளவை நான் அறிவேன். மேற்கூரை இடப்பக்கம் வலப்பக்கம் எல்லாம் சேர்த்து பெரிய பரப்பு எனக்குக் கிடைக்கப் போகிறது. சூரியர், சந்திரர் உள்ள வரை காலகாலத்திற்கும் உள்ள அற்புதமான ஓவியங்களை நான் வரையப் போகின்றேன் என்ற எண்ணம் எனக்குள் உறுதிப் பட்டுக் கொண்டேயிருக்கிறது. உன்னைப் பார்த்த பிறகு அந்த உறுதி மேலும் பலமடைந்து வருகிறது. நான்கு பேராகப் பிரித்துக் கொள்ளுங்கள் என்று பெருந்தச்சர் குஞ்சரமல்லர் சொன்னார். நான் அவரிடம் முடியாது. அந்த மொத்த வேலையையும் நான் மட்டுமே செய்வேன் என்று அவரிடம் அனுமதி வாங்கியிருக் கிறேன். முடியுமா, முடியுமா என்று கேட்டார். இரவு பகலாக உழைத்தால் நிச்சயம் முடியும்.

"திரிபுராந்தகனை மட்டும்தான் வரைவீர்களா."

"இல்லை, வரைவதற்கு பல்வேறு விஷயங்கள் இருக்கின்றன."

"விதம்விதமான புராணக் கதைகளா."

"புராணக் கதைகள் மட்டுமேயல்ல. நம்முடைய சக்ரவர்த்தி அவர்களுடைய வாழ்க்கையைப் பற்றிக்கூட வரையலாம்."

"அவர் போருக்குப் போனதா."

"இல்லை. எல்லாம் மங்கலமான விஷயங்கள். அவருடைய சதயத் திருவிழாவைச் சிதம்பரத்தில் கொண்டாடினார் அல்லவா அப்போது சிதம்பரம் தீடசிதர்களெல்லாம் வாய்

பொத்தி மௌனமாக அவரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந் தார்களல்லவா. சேரதேசத்து நம்பூதிரிகளின் ஆளுமைக்குட்பட்ட அந்த இடம் நம்முடைய ஆளுமைக்கு முழுக்க முழுக்க வந்ததல்லவா. தேவார திருவாசகங்களை ஒளித்து வைத்தது தவறு. இராஜராஜர் செய்தது சரி. மிக மகத்தான பணி என்று சிதம்பரம் தீட்சிதர்களே ஒத்துக் கொண்டார்கள் அல்லவா. அந்த விஷயத்தை வரையலாம்."

"ஆமாம். அப்படித்தான் வரைய வேண்டும். அது தான் நம்முடைய சக்ரவர்த்தி வாழ்வில் நடந்த மிகமிக முக்கியமான நிகழ்ச்சி. அவர் சேரதேசத்தை வென்றதோ, கீழைச் சாளுக்கி யத்தை வென்றதோ, மேலைச் சாளுக்கியத்தை வென்றதோ, ஈழத்தை முறியடித்ததோ மிகப்பெரிய விஷயமல்ல. நம்முடைய மொழியை, நம்முடைய கலாச்சாரத்தைப் புதைத்து வைக்க வேண்டுமென்று நினைத்தார்களே. அதை மீட்டுக் கொண்டு வந்தாரே அதுதான் அற்புதம்."

உமையாள் உணர்ச்சியோடு பேச, அவன் அவளிடம் இன்னும் நெருங்கி உட்கார்ந்து கொண்டான்.

"அரசர் நிற்க அருகே உலகமாதேவி, உலகமாதேவிக்குப் பிறகு வானதி. வானதிக்குப் பிறகு பஞ்சவன் மாதேவி என்று இவர்களை வரிசைப்படுத்தி, மற்ற மனைவியரையும் கீழே எழுதி, தில்லை நடராஜரை மிகப்பெரியதாக வரைய வேண்டும் என்று திட்டமிட்டிருக்கிறேன். அதற்காகப் பலமுறை தில்லை நட ராஜரை நான் உற்றும் பார்த்திருக்கிறேன். அந்தச் சிலையை உற்றுப்பார்க்க வேண்டுமென்பதற்காக அந்த தீட்சிதர்களில் ஒரு இளைஞன் எனக்கு அதன் உடல் முழுவதும் விபூதியைத் தெளித் துக் காண்பித்தான். வெள்ளை வெளேர் என்ற சிவன். பெருஞ் சிரிப்பு, பெரிய கண்கள், படர்ந்த சிகை, தூக்கிய கால், தொங்கும் மணிச்சரம், சீறி எழும் நாகம் என்ற பல அற்புதமுடன் அந்தச் சிலை இருந்தது."

"அவள் வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

"ஒருமுறை நாம் சிதம்பரம் போய் வருவோமா."

"நிச்சயம் போய் வருவோம்."

அவள் இன்னும் நெருங்கி அமர்ந்து கொண்டாள்.

அவள் அவன் நெஞ்சின் மீது தன் தோளைப் பதித்துக் கொண்டாள். அவன் முழங்காலை மெல்லத் தடவி விட்டாள்.

"இப்படியொரு சிலை வரையும்போது நீங்கள் மன்னரையும், மன்னரின் மனைவியரையும் மட்டும் வரைதல் கூடாது."

"இன்னும் யாரை வரைய வேண்டும்."

"சேனாதிபதிகள் அத்தனை பேரையும் வரைய வேண்டும். பெருந்தச்சரை வரைய வேண்டும். கருவூர்த்தேவரை வரைய வேண்டும். நம்பியாண்டார் நம்பியை வரைய வேண்டும். என்றைக்கும் மன்னருக்கு அருகே யாரெல்லாம் நெருங்கி நிற்கிறார்களோ, யாரெல்லாம் துணையாக நிற்கிறார்களோ. அத்தனை பேரையும் காட்ட வேண்டும். கோயில் வரையத் துவங்க வேண்டுமென்றால் சிதம்பரம் அந்தணர்கள் வரிசையாக நின்று தங்களை வரையச் சொல்வார்கள். அப்படி வரைதல் கூடாது. கோவிலினுடைய யானைப்பாகன், குதிரை வீரன், கொடி பிடிப்பவன், எக்காளம் ஊதுபவன் இவர்கள் எல்லோரையும் வரைய வேண்டும். நீங்கள் என்னைக் கூட அங்கு வரைய வேண்டும்."

"எதற்காக உன்னை வரைய வேண்டும் என்கிறாய்."

"நீங்கள் சொன்னீர்களே அதற்காகத்தான்."

"நான் என்ன சொன்னேன்."

"சூரியர், சந்திரர் உள்ளவரை காலாகாலத்திற்கும் அழியாத ஓவியமாக அதை வரையப் போகிறேன் என்கிறீர்கள். அப்படிப் பட்ட ஓவியத்தில் நான் இடம்பெற வேண்டாமா."

அவள் இன்னும் நெருக்கமாக உட்கார்ந்தாள். அவன், இடுப்பு சுற்றி அவளை அணைத்துக் கொண்டான்.

"அப்படியொரு ஓவியம் நான் வரைவேன் என்று உனக்குத் தோன்றுகிறதா."

"நிச்சயம் தோன்றுகிறது."

"எதனால் தோன்றுகிறது."

"என்னுடைய முகத்தை க்ஷணநேரத்தில் கரிக்கோடுகளில் வரைந்தீரே அயர்ந்து போனேன். எண்ணிப் பார்த்தேன். மொத்தமும் பதினாறு கோடுகள். பதினாறு கோடுகளில் என்னுடைய உருவத்தை இத்தனை துல்லியமாக உங்களால் வரைய முடிகிறதென்றால் நீங்கள் தெய்வ ஓவியர். உங்களால் அற்புதமாக வர்ண ஓவியங்கள் வரைய முடியும். காலகாலமும் நிற்கின்ற ஓவியங்கள் வரைய முடியும். நம்முடைய அரசருடைய இந்தக் கோவில்

நெடுங்காலம் சூரியர் சந்திரர் இருக்கும் வரையில் இருக்கப் போகிறதெனில் இந்த ஓவியமும் அவ்வளவு நாள் இருக்கு மல்லவா. அப்பொழுது உமையாளும் இருப்பாளல்லவா."

"நிச்சயம் இருப்பாள். இருக்க வைப்பேன்."

அவள் இன்னும் இறுக்கிக் கொண்டாள். அவள் மெல்ல குனிந்து அவன் இதழோடு இதழ் பதித்தாள் அவர்கள் தழுவிக் கொண்டார்கள். அவன் சட்டென்று நின்றான். பிரிந்தான்.

"உமையாள் உன்னை வரைய வேண்டுமென்றால் ஒரு தனித்த முத்திரை காட்ட வேண்டும்."

"என்ன முத்திரை சொல்லுங்கள்."

"உன்னுடைய உடம்பில் மிக அழகான பகுதி எது."

அவன் வினவினான்.

அவள் நாணினாள்.

"சொல். வெட்கப்படாதே. உன் உடம்பின் அழகான பகுதி எது."

"என் முகம்தான்."

அவள் தன்னைச் சாதாரணமாக்கிக் கொண்டு சொன் னாள்.

"நல்லது. உன் முகம் மிக அழகானது. மறுப்பதற்கில்லை. அதையும்விட அழகானது உண்டு சொல்லட்டுமா."

"எது."

"உன் முதுகு, பிருஷ்டம், உன் பின் தொடை, உன் கரவுக் கால்."

அவள் முகம் பொத்திக் கொண்டு வெட்கப் பட்டாள்.

"நான் ஓவியன். உள்ளதைச் சொல்கிறேன். எழுந்து நில். உன் உடைகளைக் களைந்து போடு."

அவள் வாய் பொத்திக் கொண்டாள்.

"நான் ஓவியன். உன்னைப் பார்க்க வேண்டும். உன் உடைகளைக் களைந்து போடு."

"இது எப்படி நமக்குத் திருமணமாகவில்லையே"

"திருமணமானால் களைந்து விடுவாயா."

"நிச்சயம்."

"இரு."

அவன் தன் மோதிரத்தை அவிழ்த்தான். அவளைக் கிழக்குப் பக்கம் நிற்க வைத்தான். தன்னுடைய மோதிரத்தை அவள் விரலில் அணிவித்தான். மெல்ல அவள் தலையைத் தடவினான். உச்சியில் முத்த மிட்டான். விரலால் சிவப்பு வர்ணம் எடுத்து அவள் நெற்றியிலும், உச்சியிலும் இட்டான்.

அவள் அவன் பாதம் பணிந்தாள். எழுந்து நின்றாள். அவர்கள் தழுவிக் கொண்டார்கள். முத்தமிட்டுக் கொண் டார்கள். மெல்ல அவனை அவள் விலக்கினாள்.

தத்தோம்... தகிட தத்தோம்...என்று ஆடினாள்.

காலில் புஷ்பங்களைச் சொரிந்து வணங்குவது போல அபிநயம் செய்தாள். தள்ளி நின்றாள். இரண்டு, மூன்று முத்திரை களுக்குப் பிறகு மெல்ல முதுகு காட்டி இடப்பக்கம் முகத்தை திருப்பி, கால்களை சதுரமாக்கி பிருஷ்டத்தை இறுக்கமாக்கி, முதுகை லேசாய் வளைத்து. இடக்கையில் வில்லும், வலக்கையில் அம்பும் தரித்து அவனைப் பார்த்து இதுதான் என் தனித்த முத்திரை என்றாள்.

"நல்லது ஆடைகளோடு இருக்கும் போது உன் வடிவம் முற்றிலும் புரியவில்லை. ஆடைகளை எடுத்து விடு."

அவன் வேண்டிக் கொண்டான். அவள் மறுபடியும் அமைதியாய் நின்றாள்.

தலை குனிந்து நாணினாள். பிறகு இடுப்பில் கை வைத்து இடுப்பின் சுருக்கை அவிழ்த்தாள். நிர்வாணமானாள். சட்டென்று மறுபடியும் அந்த முத்திரை காட்டினாள். அவன் வியந்தான்.

அவளையே பல்வேறு கோணங்களில் பார்த்தான். கை கொட்டினான். முன்னும் பின்னும் அலைந்தான்.

"இறைவனுடைய படைப்பில் மிக உன்னதமான படைப்பு மனிதன் இதில் எனக்குச் சந்தேகமில்லை. யானையைவிட, சிங்கத்தைவிட, பாம்பைவிட, புலியைவிட, மரத்தைவிட, கொடியைவிட, மலர்களைவிட மிக அழகான ஒரு படைப்பு பெண். அதுவும் அழகான பெண். எனக்குப் புரிந்துவிட்டது. உமையாள் நீ சந்திரர், சூரியர் உள்ளவரை வெகு நிச்சயம் உயிரோடு இருப்பாய்."

தூங்குகின்ற காவலாளியைத் தட்டி எழுப்பி விட்டு விஸ்வநாத ஆச்சாரி உள்ளே நுழைந்தார். உமையாள் நிர்வாண மாக நின்றதைப் பார்த்தார். துணுக்குற்றார். உமையாள் துணியை வாரி உடம்பைச் சுற்றிக் கொண்டு உள்ளுக்குள் ஓடினாள்.

சீராளன் திரும்பினான். கை கூப்பினான், வருக, வருக என்று வரவேற்றான்.

விஸ்வநாத ஆச்சாரி அவனையே வியப்போடு பார்த்தார்.

சீராளன் முகத்தில் எந்தக் கலவரமும் இல்லை. தெள்ளத் தெளிவாக, மிக அமைதியாக ஒரு உற்சாகமாக அவன் முகம் இருந்தது.

"நான் ஏதேனும் இடைஞ்சல் செய்து விட்டேனா."

விஸ்வநாத ஆச்சாரி பணிவாகக் கேட்டார்.

ஒரு ஆண், பெண் கூடலைத் தடுத்து விட்டோம் என்ற கவலை அவர் பேச்சில் இருந்தது.

"இல்லையே. எந்த இடைஞ்சலும் இல்லை அது உமையாள் ஒரு ஓவியத்திற்காக அவளோடு பேசி பல்வேறு விதமாக நிற்க வைத்துக் கொண்டிருந்தேன்."

"ஆடைகள் இல்லாமலா."

"ஆமாம். ஆடைகள் இல்லாமல்தான்."

"சீராளன் சாதாரணமாகப் பதில் சொன்னான்."

"சிற்பிகளுக்கும், ஓவியர்களுக்கும் இது வழக்கம் தான். ஆடைகள் இல்லாமல் பெண்களையும், ஆண்களையும் பார்ப்பது அவர்களுடைய பணிகளில் ஒன்று. அநேகமாக தெய்வ ஆண் உருவங்களைச் செய்யவும் அவர்கள் பெண்களைத்தான் நாடுவார்கள். அவ்விதம் நிற்கச் சொல்லுவார்கள். மிகக் குறைந்த ஆடைகளுடனோ அல்லது ஆடைகளே இல்லாதபடியோ பெண் களை நிறுத்தி வைத்து சிற்பிகள் பார்ப்பது உண்டு." எனவே, சீராளன் அப்படிச் சொன்னதும் விஸ்வநாத ஆச்சாரி சரியென்று தலையசைத்தார்.

உமையாள் உடுத்திக் கொண்டு மெல்ல கூடத்திற்கு வந்தாள். விஸ்வநாத ஆச்சாரியைக் கண்டதும் ஒரு பணிவு ஏற்பட்டது. என் புருஷன் குலத்தைச் சேர்ந்த பெரியவரல்லவா. இவரை வணங்குதல் கடமையல்லவா என்ற எண்ணம் தோன்றியது. மெல்ல நெருங்கி வந்து அவர் எதிரே பணிந்து வணங்கினாள்.

அவளுடைய விரல்களில் சீராளனுடைய மோதிரம் இருந்ததை விஸ்வநாத ஆச்சாரி உற்றுப் பார்த்து தெரிந்து கொண்டார் திரும்பி சீராளனைப் பார்த்தார். சீராளன் அவரையே வெகுளியாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

“சீராளன், உன் மோதிரம் இவள் கைக்கு வந்திருக்கிறதே. சன்மானம் கொடுத்தாயா.”

“இல்லை சன்மானமல்ல.”

“பிறகு.”

“ஒரு ஒப்பந்தம்.”

“என்ன விதமான ஒப்பந்தம்.”

“வியப்போடு விஸ்வநாத ஆச்சாரி கேட்டார்.”

“நான் உமையாளைத் திருமணம் செய்து கொள்ள வாக்குக் கொடுத்தேன். வாக்கு கொடுத்ததின் அடையாளமாக என் மோதிரத்தை இட்டேன்.”

விஸ்வநாத ஆச்சாரிக்குள் இடி இறங்கியது.

“அப்படியா.”

அவர் அமைதியாக யோசிக்கத் துவங்கினார்.

“உங்களுடைய ஆசீர்வாதத்தைக் கோருகிறேன்.”

இப்போது சீராளன் நீண்ட நெடுஞ்சாண்கிடையாக அவரை வணங்கினான். அவன் வணங்க, அவளும் மறுபடியும் விஸ்வநாத ஆச்சாரியை வணங்கினாள். விஸ்வநாத ஆச்சாரிக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

“நல்லது. வாழ்க... வாழ்க எல்லா வளமும் பெருக. நீண்ட நெடுங்காலம் சுகமாக இருக்க எல்லாம்வல்ல என் இறைவனை, என் சிவபெருமானை வணங்குகின்றேன். தீர்க்க சுமங்கலி பவ.” என்று இரண்டு கைகளையும் தூக்கி வாழ்த்தினார். இரண்டு பேரும் எழுந்து அவரைப் பார்த்து கை கூப்பினார்கள்.

விஸ்வநாத ஆச்சாரிக்கு உள்ளே ஒன்று உடைந்து போயிற்று.

‘அப்படியானால், பெருந்தச்சர் என்ன ஆவார். இதைப் போய்ச் சொன்னால் எப்படிப் புரிந்து கொள்வார். பெருந் தச்சரின் மகள் இதை அறிந்தால் என்ன செய்வாள்.

நல்லவேளை திருமணம் என்ற ஒன்று ஏற்பாடாயிருந்தால் இது இன்னும் ரசாபாசமாகியிருக்கும். கடவுள் கருணை மிக்கவர். எடுத்த எடுப்பிலேயே எனக்கு இங்கு என்ன நடந்தது என்பதைத் தெரிவித்து விட்டார். நான் வந்தது நல்லதாயிற்று. வேறு எவரேனும் இருந்தால் சீராளனை இழிவுபடுத்தியிருப்பார்கள். இந்தப் பெண்ணை அசிங்கப்படுத்தியிருப்பார்கள். இவள் தேவரடியார். இவளோடு உனக்கு என்ன சம்பந்தம் என்று பேசியிருப்பார்கள்.

இவள் பேரழகி. மன்னாதி மன்னர்களும் அவள் கால்களில் விழுந்து வணங்கி தவித்துக் கொண்டிருக்க, சீராளன் மயங்கியதில் என்ன தவறு அவள் சீராளனுக்கு உதவியாக இருத்தல் கூடும். குண்டாய், அதிகம் உண்பவளாய், அதிகம் தூங்குபவளாய், செல்லப் பெண்ணாய் இருக்கின்ற பரமியைவிட இவள் தான் இவனுக்குச் சரியான துணை.

இதைப்போய் பெருந்தச்சரிடம் எப்படிச் சொல்வது.

சொல்லித்தான் ஆக வேண்டும்.'

"ஒன்றுமில்லை. இந்தப்பக்கம் வந்தேன். தாகமாக இருந்தது. உன் வீட்டில் ஏதேனும் தாகசாந்தி செய்து விட்டுப் போகலாம் என்று வந்தேன்."

"அப்படியா. இதோ இருங்கள்" என்று அவன் பரபரக்க, அவனைத் தடுத்து நிறுத்திவிட்டு அவள் சமையற் கட்டிற்குள் ஓடினாள். மோர் எடுத்தாள். தேன் கலந்தாள். சிறிது இஞ்சிச்சாறு விட்டாள். கொத்த மல்லித் தழைகளை தேடி எடுத்து தண்டுகளை நறுக்கிப போட்டு ஒரு சிறிய மண்பானையில் அதை நிரப்பி ஒரு தட்டில் வைத்து ஆடாமல், அசையாமல் அதைக் கொண்டு வந்து அவர் எதிரே நீட்டினாள்.

பானை கொண்டு வந்த பக்குவத்தைப் பார்த்து விஸ்வநாத ஆச்சாரி வியந்தார். மோர் குடித்தார். மோர்க் கலவை மிகச் சரியாக இருந்தது.

"ஏன் மர ஆசனத்தை இங்கு போட்டிருக்கிறாய்." என்று விஸ்வநாத ஆச்சாரி கேட்க, அவன் திரும்பி உமையாளைப் பார்த்தான்.

"உமையாள் மறுபடியும் அந்தப் போர்க்கோலம் காட்டு." என்று சொன்னான்.

விஸ்வநாத ஆச்சாரி அவனை வியந்து பார்த்தார்.

"திரிபுராந்தகரை வரையப் போகிறேன். திரிபுராந்தகர் எப்படி இருந்திருப்பார் என்று நாங்கள் பேசி ஒரு முடிவுக்கு வந்தோம். திரிபுராந்தகரை இப்பொழுது அவள் உங்களுக்குக் காட்டுவாள்."

மறுபடியும் அவள் தலைவிரித்துக் கொண்டாள். அவன் கிரீடம் அணிவித்தான். அவள் உடைகளை இறுக்கிக் கொண்டாள். அவன் வில்லெடுத்துக் கொடுத்தான். அவன் பலிபீடத்தில் ஏறி நின்றாள். அவன் அவளைப் பல கோணங்களில் சரி செய்தான்.

"இப்போது பாருங்கள். இப்போது பாருங்கள். அவள் கண்களில் கோபமும், உதட்டில் சிரிப்பும் இருக்கும். செய், செய் உமையாள்" என்று கூறினான்.

அவன் ஆடுகின்ற தேரில் நிற்கின்ற சிவனைக் காட்டினான்.

விஸ்வநாத ஆச்சாரி வியந்தார். எழுந்து நின்றார் 'ஆஹா.' என்று இரண்டு கைகளையும் விரித்தார்.

"அடேயப்பா, அடேயப்பா. உதடு சிரிக்கிறது. கண்களில் கோபம் இந்தத் தேர் வேகம் என்று எல்லாம் காட்டுகிறாளே." என்று வியந்தார்.

"நல்லது. நல்லது. அற்புதம். அற்புதம்." என்று அவளை அவரும் சுற்றி வந்தார். அவனும் சுற்றி வந்தான்.

அவள் மெல்ல நேரானாள். கீழிறங்கினாள். மறுபடியும் கை கூப்பி வணங்கினாள்.

"நீ ஒரு அற்புதமான மாதிரி வடிவம். எந்தக் கோணத்தில் பார்த்தாலும் மிக அழகாக இருக்கிறாய்." என்று சீராளன் சொல்ல, ஆமாம், ஆமாம் என்று தலையசைத்தார்.

அவன் என்ன வரையப் போகிறான் என்பதை மறுபடியும் அவளிடம் விளக்கினான்.

"பெருங்கூட்டங்களை வரைவதில்தான் உன் திறமை இருக்கிறது. இறைவனை வரைந்து விடலாம். அசுரர் கூட்டத்தில் தான் நீ மனிதரின் பல முகங்களைக் காட்டப் போகிறாய். அசுரர்கள் என்பவர்கள் யார். தனித்த ஒரு ஜாதியா. ஒரு கூட்டமா. இல்லை, மனிதருடைய கேவலமான எண்ணங்கள் தான் அசுரக்கூட்டம். கேவலமான எண்ணங்கள் வளர வளர முகம் நசுங்கத் துவங்கும். நசுங்கிய முகத்தில் பயத்தைக் காட்டு இறைவன் வந்து விட்டால் அந்தக் கேவலமானவர்கள் பயந்து

நடுங்குவார்கள். வீரம் பேசிய அத்தனை வாயும் கோணிக் கொண்டு நிற்கும். அதனால் பயப்படு பயப்படு." என்று விஸ்வ நாத ஆச்சாரி சொல்ல, அவனும் பல்வேறு விதமான பயத்தைச் சொன்னான்.

அவள் விதம்விதமாய் பயத்தைக் காட்டினாள்.

விஸ்வநாத ஆச்சாரிக்கு ஒன்று புரிந்தது.

இது இறைவன் கருணை. சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜ ராஜத்தேவருக்கு இறைவன் கொடுத்த கொடை இந்தச் சீராளன். அந்தச் சீராளனுக்குக் கிடைத்த கொடை இந்த உமையாள். இதைப் பிரிப்பது என்பது எவராலும் இனி இயலாத காரியம். இவர்கள் அத்தனை பேரும் சோழ சாம்ராஜ்ஜியத்திற்கு, தமிழ் கலாச்சாரத்திற்கு இறைவன் கொடுத்த கொடை. இவர்களில் யாரைப் புறந்தள்ள, எவரை இழிவுபடுத்த விஸ்வநாத ஆச்சாரி விடைபெற்று நடந்தபோது, அவருக்கு மிகுந்த சோர்வாக இருந்தது.

விஸ்வநாத ஆச்சாரி வாழ்த்தியது உமையாளுக்கும், சீராளனுக்கும் மிகுந்த உற்சாகத்தைக் கொடுத்தது. அவர்கள் மறுபடியும் வேகமாகத் தழுவிக் கொண்டார்கள். இந்தத் தழுவலில் இப்பொழுது காமம் துளிர்விட ஆரம்பித்தது.

  

"**வா**ரும். உலாவப் போகலாம்."

விஸ்வநாத ஆச்சாரி குஞ்சரமல்லப் பெருந்தச்சரை அழைத்தார்.

"உலாவவா. என் இடக்கால் மிகவும் வலிக்கிறது."

"உட்கார்ந்து கொண்டே இருந்தால் வலிக்காதா. நடந்தால் தான் நல்லது. வாரும். மெல்ல நடந்து பாரும்."

அவரை எழுப்பி நடக்கச் சொன்னார். பெருந்தச்சர் தன்னு டைய பாரமான உடம்பை அசைத்தபடி தோளில் துண்டு போர்த் திக் கொல்லைப்புறம் படியிறங்கினார். கொல்லைப் புறத்தி லிருந்து நீண்டு நெடியதாக ஒரு நந்தவனம் படர்ந்திருந்தது.

இரண்டு பேரும் நடந்தார்கள்.

"நீ சொன்னது சரி. இப்படி நடப்பது ஆரோக்கியமாக இருக் கிறது. கால் வலியும் குறைகிறது. உட்கார்ந்தே இருப்பதால்தான் கால்வலி ஏற்பட்டு விட்டது என்று நினைக்கிறேன்."

காலை உதறிக் கொண்டு பெருந்தச்சர் நடந்தார்.

"சீராளனைப் போய் பார்த்து விட்டு வந்தேன்."

விஸ்வநாத ஆச்சாரி சொல்ல, நின்றபடி பெருந்தச்சர் திரும்பினார்.

விஸ்வநாத ஆச்சாரி அவரை மெல்ல அழைத்துக் கொண்டு போய் ஒரு கற்பாறை ஆசனத்தில் அமர வைத்து தான் பார்த்ததை, பேசியதைத் தெரிவித்தார்.

பெருந்தச்சருக்குத் திகைப்பு மேலிட்டது.

"தேவரடியார் பெண்தானே. இதிலென்ன திருமணம் வேண்டிக் கிடக்கிறது. சேர்மானம் என்று சொல்லும்."

"இல்லை. அப்படிச் சொல்ல முடியாது. சீராளன் மிகத் தெளிவாக அந்தப் பெண்ணை நேசிக்கிறான். அந்தப் பெண் அவன் மீது உயிரையே வைத்துக் கொண்டிருக்கிறது. இப்போது நீங்கள் போய்த் திருமணம் என்று கேட்டால் மிக வேகமாக சீராளன் மறுப்பான். மீறி நீங்கள் கட்டாயப்படுத்தித் திருமணம் செய்வித்தால் உங்கள் மகள் சந்தோஷமாக இருப்பாளா என்று சொல்வதற்கில்லை. தெரிந்தே அவளைப் பாழுங்கிணற்றில் தள்ளுவானேன். அவளை நல்ல இடத்தில் திருமணம் செய்து கொடுத்தால் போயிற்று. நான்தான் சொன்னேனே கற்சிற்பிகள் பலபேர் இருக்கிறார்கள். இலத்தி சடையன், நித்தவினோதப் பெருந்தச்சன் அவர்கள் யாரையாவது பர்க்கலாமே."

"சரி, அவ்விதமே செய்வோம். நித்தவினோதப் பெருந்தச்சனைப் பார்த்து மணமுடிக்கலாமா."

"அவசரப்படாதீர்கள். இவளுடைய ஜாதகத்தை எடுத்துக் கொண்டு போய் நான் நல்ல ஜோசியரிடம் பார்த்து வருகிறேன்."

"நல்ல ஜோசியர் யார்."

"கருவூர்த்தேவர். அவரைவிடத் தெரிந்தவர் உண்டா. உன் மகளின் பெயர் சொன்னால் போதும். அவர் அவளைப் பற்றி சகலமும் சொல்வார். அவர் வெறும் ஜோசியம் சொல்பவரல்ல. அதைத்தாண்டி உள்ளுக்குள் இருக்கின்ற ஆத்ம சக்தியைக் கிளறிச் சகலமும் பார்ப்பவர். அவரிடம் பேசிவிட்டு உமது மகளின் திருமணத்தைப் பற்றி யோசிக்கலாம் என்றிருக்கிறேன்."

"நல்லது. என்னால் எதுவும் யோசிக்க முடியவில்லை. கோவிலைத்தவிர வேறு எதையும் செய்யத் தோன்றவில்லை. வேறு

எது செய்யவும் துப்பு கெட்டவனாக இருக்கிறேன். நான் குடித்தனம் செய்ததோ, குழந்தை பெற்றதோ தவறு என்று நினைக்கிறேன். தயவு செய்து என் மகளின் திருமணத்தை உங்கள் மகளின் திருமணம் போல... என்று பெருந்தச்சர் கை கூப்ப, விஸ்வநாத ஆச்சாரி கைகளைப் பிடித்துக் கொண்டார்.

"அது என் கடமை. சோழதேசத்திற்குத் தொண்டு செய்கின்ற பெருந்தச்சர் குஞ்சரமல்லருக்கு நான் செய்கிற தொண்டு."

ஆமாம், கருவறைக்கு உள்ளே இருக்கிற ஆவுடையாரை ஒரே கல்லினால் செய்யப் போகிறீர்களா அல்லது துண்டு துண்டாகச் செய்து இணைக்கப் போகிறீர்களா."

"ஒரே கல்தான். பாணம் செய்ய கல் கிடைத்துவிட்டது. ஆனால், ஆவுடையாருக்கு இன்னும் அகலமான, உயரமான கல் தேவை. அப்படி கல் கிடைக்குமா. சதாசிவாச்சாரிக்கு ஓலை எழுதியிருக்கிறேன். அவரும் முயல்வதாகச் சொல்லியிருக்கிறார். நார்த்தா மலையிலிருந்து கிடைக்கவில்லையெனில் திருவக்கரை யிலிருந்தும் கல் கொண்டு வரலாம்."

"திருவக்கரையிலிருந்து கல் கொண்டு வரச் சொல்லுங்கள். அதுதான் மழமழ வென்றிருக்கும்."

பெருந்தச்சர் தன் மகளைப்பற்றி முற்றிலும் மறந்தார்.

ஆவுடையார் பற்றியும், விமானம் பற்றியும், கருவறை பற்றியும், அகலம் பற்றியும், உயரம் பற்றியும் பேசத் துவங்கினார். விஸ்வநாதாச்சாரிக்கு உள்ளே கனத்தது.

எப்பேர்ப்பட்ட சமர்ப்பணம். வீடுபற்றி, தன் மகள் பற்றி, எந்தக் கவலையும் இல்லாமல், கோயில் எழுப்புவது பற்றி மட்டுமே யோசிக்கின்ற இந்த மனிதர் இருக்கும் வரை சக்ரவர்த்திக்கு ஸ்ரீ இராஜராஜருக்கு என்ன குறை.

இறையே, இறையே. எல்லாம் வல்ல சிவபெருமானே. இந்தப் பெருந்தச்சக் குஞ்சரமல்லரின் குடும்பத்தை வாழ வை. இந்தப் பெருந்தச்சக் குஞ்சரமல்லரின் மனத்தை அமைதியாக்கு. திடப்படுத்து.

எனக்கென்னவோ இவர் குடும்பத்தில் ஒரு குழப்பம் வந்து விட்டுப்போகும் என்று தோன்றுகிறது. அதுவரும் முன்பு கருவூர்த் தேவரைப் பார்க்க வேண்டும், அவர் ஆசீர்வாதம் வேண்டும். அவர் ஏதேனும் பரிகாரம் சொல்ல முடிந்தால் உடனே செய்ய வேண்டும்.

விஸ்வநாத ஆச்சாரி பெருந்தச்சரை வீட்டுக்கு அனுப்பி விட்டுக் கருவூர்த்தேவரை நோக்கி நடந்தார்.

"என்னது சீராளன் இல்லையா. சீராளன் உமையாளை நேசிக்கிறானா. திருமணம் நடந்துவிட்டதா. எனக்கும், சீராளனுக் கும் திருமணம் இல்லையா."

பரமி தடுமாறினாள். முன்னும், பின்னும் அலைந்தாள்.

சட்டென்று எங்கேயோ முட்டிக் கொண்டாள்.

உண்மையிலேயே அவளுக்கு மயக்கம் வந்தது. சுருண்டு தரையில் விழுந்தாள்.

அவள் அம்மாவும், பெரியம்மாவும் அவளை வாரி மடியில் போட்டுக் கொண்டு அரற்றத் துவங்கினார்கள். முகத்திலே நீர் தெளித்தார்கள். சமாதானப்படுத்தினார்கள்.

"என்னடி, அவனுக்குக் கொடுப்பினை இல்லை. உன்னை ஆளுமை செய்ய அவனுக்கு ஒரு யோக்கியதை வேண்டாமா. ஒல்லியாய், பட்டையாய், பலகை போல் இருக்கிறான். உனக்கு அவன் சரியில்லையடி. இன்னும் வாலிபமான. இன்னும் வீர மான ஆள் இருந்தால்தான் உன் வாழ்க்கை வளமாக இருக்கும். கடவுளாகப் பார்த்து திசை திருப்பியிருக்கிறான். கவலைப் படாதே."

பெரியம்மா சொல்ல அவள் உள்ளுக்குள் துக்கம் பொங்கி யது.

தோழிகள் என்ன சொல்வார்கள். அடுத்த வீடு என்ன சொல்லும். என்னைக் கண்டு பலபேர் பொறாமைப் படுகிறார் களே. அவர்கள் எல்லோரும் என்ன செய்வார்கள். சீராளனோடு பரமிக்குத் திருமணம் என்று செய்தி பரவிவிட்டதே. இப்பொழுது இல்லையென்ற செய்தியும் அதே விதமாகத்தான் பரவும். அப்போது ஊர் எப்படிச் சிரிக்கும்? இவள் எப்படி நகைப்பாள். அவள் எப்படிச் சிரிப்பாள். என்னவெல்லாம் பேசுவார்கள். குண்டு கல்யாணம் விண்டு கொண்டது. என்றல்லவா வசனம் சொல்வார்கள். கல்யாணம் மட்டுமா நின்று விட்டது. வாழ்க்கை, மனசு கௌரவம் எல்லாம் நின்றுவிட்டதே.

அவள் தவித்தாள். தள்ளாடினாள்.

அம்மாவையும், பெரியம்மாவையும் உதறிக் கொண்டு கொல்லைப்புறம் ஓடினாள். பின்தொடர்ந்த அம்மாவை, பெருந்தச்சரின் மூத்த மனைவி தடுத்தாள்.

அவள் சிறுபெண் அதிர்ச்சியாகிவிட்டாள். கவலைப் படாதே, தானாகக் குமைந்து அழுது வெளியே வரட்டும், வந்த போது சொல். இந்த நாய் இல்லை யெனில் இன்னொரு நாய் என்று சர்வ சாதாரணமாகப் பேசி சமாதானப்படுத்து. அந்தச் சீராளன் நம்மிடம் சிக்காமலா போவான். இப்பொழுது அவளை விட்டு விடு." என்று அடிக்குரலில் உறுமலாகப் பேசினாள்.

சீராளன் வீட்டுக்கு வாசல் பக்கம் மட்டுமே காவல் இருந்தது. பெருந்தச்சர் வீட்டிற்கோ வாசல்பக்கமும், பின்பக்கமும் காவல் இருந்தது.

பரமி திரும்பத் திரும்ப யோசித்தாள்.

ஏன் மறுத்து விட்டான். எதனால். இவன் மறுத்ததனால் மற்றவர்கள் எப்படியெல்லாம் கேலி செய்வார்கள் என்று யோசித்தாள். யாரது உமையாள், அழகியாமே, மிகப் பேரழகி யாமே. தேவரடியாராமே அப்படியானால் நான் அழகில்லையா. நான் சற்று பூசின உடம்பு. இல்லை, குண்டு. அதனால்தான் வேண்டாமென்று சொல்லி விட்டானா. ஏன் குண்டாக இருந்தால் மறுத்து விடுவதா. என் தந்தை எவ்வளவு சொல்லிக் கொடுத்திருக்கிறார். எத்தனை கற்றுக் கொடுத்திருக்கிறார். அந்த நன்றி வேண்டாமா. என் வீட்டில் எத்தனை முறை சோறு தின்றி ருக்கிறான். அந்த நன்றி வேண்டாமா.

அவன் தங்கைக்கும், அவன் அம்மாவிற்கும் என் அம்மா எவ்வளவு நகைகள் கொடுத்திருக்கிறார். எத்தனை முறை அரிசி கொடுத்திருக்கிறார். நன்றி வேண்டாமா. என்ன குடும்பம் அது. கூடாது அவனைத் தண்டிக்க வேண்டும். பரமி மனமுடைந்து தற்கொலை செய்து கொண்டாள் என்ற பழி வர வேண்டும். அவன் துடிக்க வேண்டும். அவனை ஊர் பேச வேண்டும். என்ன ஓவியன் அவன் கையை ஒடிக்க என்று யாரேனும் சாபமிட வேண்டும். அதற்கு நான் நாணிட்டு சாகவேண்டும்."

செத்து விடுவோமா. செத்து விடுவோம். நிச்சயமாக அத்தனை தோழிகளும் கேலி செய்வார்கள். அவனது திருமணம் நடக்கும். அரசர் வருவார். மந்திரிகள் வருவார்கள். மிகப்பெரிய கோலாகலமான கொண்டாட்டங்கள் நடக்கும். நடக்கும் போது ஊர் என்னைப் பற்றி கேலி செய்யும். ஐயோ பாவம் என்று சொல்லும். இதைக் கேட்பதை விட சாவது உத்தமம்.

மேல் துணியை உருவினாள். மாமரக்கிளையில் வீசிப் போட்டாள். சுருக்கிவிட்டு இழுத்தாள். பிறகு மரக்கிளையின்

மீது தாவி ஏறி நின்று கொண்டாள். மறு நுனியை தன் கழுத்தில் சுற்றிக் கொண்டாள். இப்பொழுது கழுத்து இறுகி எலும்பு உடையும். எலும்பு உடைய அடுத்த நிமிடம் பிராணன் போய்விடும். கழுத்தில் சுருக்கிட்டுக் கொண்டாள்.

புதர் மறைவில் சிறுநீர் கழித்துக் கொண்டிருந்த காவற்காரன் சடடென்று எழுந்து பார்த்தான். அவள் சுருக்கிடுவது பார்த்து ஏதோ வேடிக்கை விளையாட்டு செய்கிறார் என்று நினைத்தான். திடீரென்று அவனுக்கு அவள் தூக்கிட்டுக் கொள்கிறாள் என்று உரைத்தது. ஏய், ஏய் என்று கத்தினான்.

அவள் மரக்கிளையைப் பிடித்தபடி அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

இதுதான் நான் பார்க்கின்ற கடைசி மனிதன். இதுதான் நான் பார்க்கின்ற கடைசி உயிர். இனி நான் உயிரற்ற பிரேதம் என்று சொல்லிக் கொண்டு தரையில் குதிக்க எத்தனிக்கும்போது அவன் சட்டென்று வாள் உருவினான். அவள் குதிக்கின்ற நேரத்தில் அவள் மரத்தோடு கட்டியிருந்த முதல் சுருக்கின் மீது வாளை வேகமாகப் பாய்ச்சினான். துணி இரண்டாகத் துண்டு பட்டது.

**தெ**ன்னை மரத்திலுள்ள வெள்ளை மடையான்கள் வெகு தூரம் போய் ஏரிகளில் மீன் கொத்தி மசித்து, மசித்து உண்டதை மறுபடியும் வாய்க்கு கொண்டு வந்து பசியோடு காத்திருக்கும் குஞ்சுகளின் அலகுகளில் அலகு வைத்து நாக்கு தள்ளி ஊட்டிக் கொண்டிருந்தது. இளஞ்சூடான அந்த மீன் உணவைக் குஞ்சுகள் ஆவலாக விழுங்கின. பேடையைத் தொடர்ந்து ஆண் வெள்ளை மடையான்களும் வானத்தின் உயரத்திலிருந்து தென்னைக்கு இறங்கி, சிறகுகளை அகல விரித்து சோம்பல் முறித்தபடி குஞ்சுகளுக்கு ஊட்டத் துவங்கின. குஞ்சுகளின் குதூகலச் சத்தம் அந்தப் பிரதேசம் முழுவதும் எதிரொலித்தது.

அந்த மறவன் பெயர் இடும்பன். ஒரே முறைதான் அவன் யுத்தத்திற்கு போயிருக்கிறான். அவன் போய்ச் சேருவதற்குள் யுத்தம் முடிந்து விட்டது. சோழர்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள் என்ற செய்தி வந்தது. நுளம்பபாடி முழுவதும் கொள்ளை யடித்துவிட்டு முன்னே போன படை திரும்பிக் கொண்டிருக்க இவன் அப்படையோடு சேர்ந்து கொண்டு நுளம்பபாடி போகாமலேயே ஊர் திரும்பினான். புலிக்கொடியை ஏந்தி வெற்றி வெற்றி என்று தஞ்சையின் எல்லை தொட்டான்.

அவன் ஊர் மக்கள் அவனுக்கு மாலை அணிவித்து, அவன் காலில் மஞ்சள் தண்ணீர் ஊற்றிக் கழுவி, எக்காளம் ஊதி,

பறை அடித்து வரவேற்றார்கள். கோட்டையைக் காக்கும் காவலனாக அவனுக்கு வேலை கிடைத்தது. ஆனால், அந்த இடத்திலும் அவனுக்கு வாசல் பக்கம் கிடைக்கவில்லை. இடக் கதவிலோ, வலக் கதவிலோ அல்லது ஆட்களே வராத புழக் கடைப் பக்கமோ அவனைப் போட்டு விடுவார்கள். அவன் தனியே உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பான். பாடிக் கொண் டிருப்பான். சோழதேசம் செழுமையாக இருந்ததால் மறவர்களி டம் காசு இருந்ததால் அவன் கையிலும் காசு நடமாடியது.

போருக்குப் போன பல நண்பர்கள், அவன் போய் நின்றதும் இரண்டு, மூன்று செப்புக் காசுகளோ அல்லது ஒரு பொற்காசோ கொடுப்பார்கள். அவர்கள் மடக்கி வந்திருந்த பத்து மாடுகளில் ஒரு மாட்டை அவனுக்குத் தருவார்கள். மறுபடியும் போர் வர "என் வீட்டைக் கவனித்துக் கொள். என் மாட்டை கவனித்துக் கொள். என் குழந்தைகளை கவனித்துக் கொள்" என்று பல நண்பர்கள் சொல்ல. எல்லாவற்றிற்கும் தலையாட்டு வான்.

அவ்வப்போது நண்பர்கள் வீட்டுக்குப் போய் ஏதேனும் வேண்டுமா என்று கேட்பான். போர் நிலவரம் பற்றிச் சொல் வான். போர் வீரர்கள் திரும்பியதும் இவன் வந்து கவனித்துக் கொண்டதை அந்த வீட்டுப் பெண்மணிகள் சொல்வார்கள். வாசலோடு நின்று மரியாதையாக விசாரித்ததைப் பெருமை யாகச் சொல்வார்கள். இதனால் சந்தோஷப்பட்டு அவனுடைய நண்பர்கள், அவர்கள் கொள்ளையடித்து வந்த பொருட்கள் சிலவற்றைக் கொடுப்பார்கள். இதனால் கீழே தாழாமலும், மேலே உயராமலும் அவன் வாழ்க்கை ஒரு மாதிரி ஓடிக் கொண்டிருந்தது.

பதினெட்டு வயதாகியும், அவனுக்குத் திருமணம் பேச எவரும் முன்வரவில்லை. கோட்டைக்காவல் கூட அல்ல, எடுபிடி, கோட்டைக் காவலுக்கு உதவியாள் இன்னும் கொஞ்சம் நல்ல நிலைக்கு வரட்டும். அப்பொழுது நல்ல பெண்ணாகப் பார்த்துத் திருமணம் செய்து கொள்ளலாம் என்று உறவினர்கள் அவனை அமைதிப்படுத்தினார்கள். அவனும் சிவனே என்று தலையாட்டினான். பிறகு பல யுத்தங்கள். போர் வீரர்கள் கையில் பொற்காசுகள் நடமாடின.

அவன் வீட்டுக்கொட்டடிலெல்லாம் விதம்விதமான ஆடு களும், மாடுகளும் வந்தடைந்தன. கோட்டைக் காவல் என்பது எடுபிடி வேலையாகி விட்டது. யுத்தம் போய்விட்டு வருகின்ற

வீரர்களுக்குக் கைகால் பிடித்து விடுவது அவன் கடமையாகி விட்டது.

செந்நெல்லுக்கு இறைத்த நீர் புல்லுக்குப் பாய்வது போல அவனும் வளர்ந்தான். ஆனால் புல்லில் நெல் முளைக்குமோ, கதிர் சாயுமோ, பெரிய தாவரமாகுமோ.

அவன் மெல்ல அவளை எழுப்பி உடகார வைத்தான். அவள் மேலாடை நெகிழ்ந்திருந்தது. அவள் கன்னங்களைத் தட்டினான். கழுத்தைத் தடவிப் பரிசோதித்தான் தலை சாய வில்லை நின்றது. செத்துப போய் விடுவோம் என்ற பயத்திலே அவள் மயக்க மடைந்திருக்கக்கூடும் என்பதாக அவனுக்குத் தோன்றியது. மெல்ல அவளை வாரி எடுத்துக் கொண்டு போய் பசுக்கொடடடைகக்கு ஓரத்தில் இருந்த நீண்ட மர ஆசனத் தில் படுக்க வைத்தான்.

அவளைப் பார்க்கும்போது உள்ளத்தில் பேய்த் தனமான ஆசை பரவியது. கைகளில் இருக்கின்ற வளையல்களும் காதுகளில் இருக்கின்ற நகைகளும், கழுத்துச் சங்கிலியும், இடுப்பு குரங்குச்சரியும் பல கழஞ்சுகள் பெறும். உருவிக் கொள்ளலாமா என யோசித்தான்.

இல்லை. நகையை எடுத்தால் முட்டியைப் பெயர்த்து விடு வார்கள். பெண்ணைத் தொட்டால் வெட்டி எறிந்து விடுவார்கள். பெருந்தச்சர் வீட்டுப் பெண் இன்றைய தேதிக்கு மிக மரியாதை யுள்ள குடும்பம். சொல்லிச் சொல்லி அடிப்பார்கள். எனவே விலகி நில். அவன் மனத்திற்குக் கட்டளையிட்டான். மனம் விலகி நின்றது. வெறித்துப் பார்க்கத் தொடங்கியது. என்ன செய்ய லாம் என்று யோசிக்கவும் ஆரம்பித்தது.

இக்கட்டான நேரத்தில் எவனுக்கு மனம் முற்றிலுமாய் விழித்துக் கொள்கிறதோ அவனுக்கு வாழ்க்கையில் வெற்றிகள் ஏற்படுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. வீட்டிற்குள் ஓடி போய் சொன்னால் அத்தனை பேரும் ஓடி வருவார்கள். உரக்கக் கத்து வார்கள். அண்டை அயலில் தெரியும். அது அந்தப் பெண்ணுக்கு அவமானம். இதைச் செய்வானேன். செத்துப் போயிருந்தால் கத்திக் கூவியிருக்கலாம். உயிரோடு இருக்கிறாள். எதற்கு அவமானப்படுத்துவது. இவ்வளவு வசதி இருந்தும், இத்தனை வசதி இருந்தும் என்ன கஷ்டமோ, எதற்கு இப்படி தூக்கிட்டு சாக வேண்டும். இரண்டு நொடிகள் தவறியிருந்தாலும் தொங்கி யிருப்பாள். கழுத்து முறிந்திருக்கும். அவன் மெல்ல வீட்டிற்குள்

எட்டிப் பார்த்தான். வீட்டில் விளக்குகள் ஏற்ற முயற்சித்தார்கள். விரைவில் இவளை அழைப்பார்கள் என்று தெரிந்தது.

உள்ளங்கையில் நீர் கொண்டு வந்து முகத்தில் அடித்தான். குவளையில் நீர் கொண்டு வந்து அருகே வைத்தான். மறுபடியும் உலுக்கினான். "எழுந்து கொள்ளுங்கள் அம்மணி" என்று காதோ ரம் கிசுகிசுத்தான்.

அவள் திடுக்கிட்டு எழுந்தாள். முகத்தைத் துடைத்துக் கொண்டாள். சட்டென்று துணியை வாரி நெஞ்சில் போட்டுக் கொண்டாள்.

"என்ன யார்." என்று தடுமாறினாள்.

"அமைதி எதற்காகத் தூக்கில் தொங்க முயற்சித்தீர்கள். உங்கள் துணியை இரண்டாக வெட்டி உங்களைக் கீழே சாய்த்து விட்டேன். நல்லவேளை பிழைத்தீர்கள். என்னம்மா எப்பேர்ப் பட்ட வீட்டினுடைய பெண் நீங்கள். எவ்வளவு மரியாதை எல்லாவற்றையும் க்ஷண நேரத்தில் உதறிவிடத் தீர்மானித்தீர்கள். அப்படி என்ன தாயே கஷ்டம்."

குரலில் குழைவை வரவழைத்துக் கொண்டு பேசினான்.

"ஆக, செத்துப் போகவில்லையா. நல்லவேளை. நல்ல வேளை."

'உள்ளுக்குள் கைகூப்பி இறைவனுக்கு நன்றி சொன்னாள். எதற்காகச் சாக முயற்சித்தோம். இந்தச் சீராளன் இல்லையெனில் இன்னொரு தேராளன். எதற்கு மரணத்திற்கு ஆசைப்பட்டோம்... சீராளனிற்கு இரண்டில் செவ்வாய், சனி நீச்சன். ஆயுசு கெட்டி இல்லை என்று சொல்லிவிட்டார்கள். அதனால் திருமணம் நின்று விட்டது. ஏதாவது காரணம் சொல்லி விடலாம். சீராளன் நடத்தை சரியில்லை என்று அப்பா சொல்கிறார். அதனால் நின்றுவிட்டது என்று சொல்லலாம். எனக்கு நடத்தை சரியுள்ள வன்தான் புருஷனாக வேண்டும். கண்டவளோடு சுத்துகின்ற கழுதையையெல்லாம் கணவனாக என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது என்று நாடகமாடலாம்.

ஆனால், சீராளன் போனது வருத்தமா.

வருத்தம்தான்.

இல்லை.

மனம் இரண்டு பக்கமும் மாறி மாறி யோசனை செய்தது.

வருத்தமா.

மனம் அமைதியாக இருந்தது.

வருத்தமில்லை. வருத்தம் இல்லாமலுமில்லை.

அபபா எவ்வளவு உயர்வாக இருந்தாலும், எத்தனை கெட்டிக்காரராக இருந்தாலும் அம்மாவின் பேச்சுக்குப பயப்படுவார். அம்மா அப்பாவுக்கு பயந்ததுபோல நடிப்பாளே தவிர, அபபாவை எபபடி மடக்குவது என்று அம்மாவுக்குத் தெரியும். இரண்டு பிள்ளைகள் பெற்ற பெரியம்மா இன்னும் கர்வியாக இருக்கிறார் எல்லா சிற்பிகளும் அவரைக் கண்டு பயபபடுகிறார்கள் வணங்குகிறார்கள்

காவிரிக்கரை ஓரத்தில் இவ்வளவு பெரிய வீடுமாளிகை போல ஒரு வீடு வேண்டுமென்று அவள் யோசனையில்தான் கிடைத்தது.

சொந்தபந்தங்கள் எல்லாமுமே பெரியம்மாவைத்தான் முதலில் நமஸ்கரிக்கின்றன. பிறகுதான் அப்பாவைப் போய் பார்க்கின்றன.

அப்படியொரு வாழ்க்கை எனக்கு அமையக் கூடாதா. இலத்தி சடையன். நித்தவினோதப் பெருந்தச்சன் என்று எவராவது கிடைக்க மாட்டார்களா. ஆளுமை செய்யக் கூடாதா. அப்படியெல்லாம் கூட தேவையில்லை. அம்மாதிரியான கர்விகளைக்கூட நாம் சந்திக்க வேண்டியதில்லை. நமக்கு அடங்கின, நம் சொல்படி கேட்கின்ற. நான் வந்து நின்றால் எழுந்து நிற்கிற புருஷன் எனக்குக் கிடைக்கக்கூடாதா. என் வீட்டில் இல்லாத காசா. என் அப்பாவிடம் இல்லாத செல்வமா, பசுக்களா, ஆடுகளா, ஆட்களா எது வேண்டும் சகலமும் அவரால் தரமுடியும். அப்படி யிருக்க கர்வமுள்ள ஒரு ஆண் பிள்ளையை நான் எதற்குக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். கடவுளே, கடவுளே... என்னைக் காப்பாற்றி விட்டாய்.

அவள் முகம் பொத்தி அழத்துவங்கினாள்.

அவள் மனம் வருத்தப்பட்டு அழுவதாக அவன் நினைத்துக் கொண்டான். அவள் தோளில் மெல்லத் தொட்டான். அவள் முழங்காலைப் பற்றிக் கொண்டான்.

"வேண்டாம் அழாதீர்கள்" என்று சமாதானம் செய்தான்.

அவள் நிமிர்ந்து அவனைப் பார்த்தாள்.

இந்த மாதிரி ஒரு தடியன் கிடைத்தால் கூடப் போதுமே என்று நினைத்தாள்.

அதுவரை குழைவாக, குழப்பமாக இருந்த அவள் மனம் சட்டென்று மாறி இறுகி விறுவிறுப்பாகியது.

தந்திரம்தான் வாழ்க்கை என்று அவளுக்குத் தெளிவாகத் தெரிந்தது. அவனை ஏறிட்டு நோக்கினாள். அவன் முகத்தில் ஒரு வெகுளித்தனம் தெரிந்தது.

சட்டென்று எழுந்து நின்றாள். அவளுடைய கிழிந்த மேல் துணி தரையில் விழுந்தது. விம்மின மார்பகங்கள், அழகான தோள்கள் அவன் எதிரே நின்றன.

"என்னை ஏன் காப்பாற்றினீர்கள்."

"அவனைப் பார்த்துச் சீறலோடு கேட்டாள்.

"யாரும் செய்ய நினைப்பதைத்தானே நானும் செய்தேன்."

உங்களுடைய நிம்மதி மரணத்திலா இருக்கும். மரணம் தான் நிம்மதியெனில் பலபேர் வேகமாக மரணத்தைத் தழுவி யிருப்பார்கள். ஆனால், இங்குள்ள எல்லா உயிர்களும் வாழ்வதற் குத்தானே ஆசைப்படுகின்றன. அப்படியானால், நிம்மதி, சந்தோஷம் திருப்தி, பூரணம் என்பதெல்லாம் வாழ்வில்தானே இருக்கிறது."

"பெரிய தத்துவவாதி போல் பேசுகிறீரே."

"இல்லை. உங்களைப் பார்த்தவுடன் எனக்குத் தத்துவம் வருகிறது."

"காவல் தொழில் செய்பவருக்குப் பெண்ணைப் பார்த்ததும் தத்துவம் வருமோ."

"நான் காவல் தொழில் செய்பவன்தான். ஆனால், அவர் களுக்குத் தத்துவம் வராது என்று எந்தச் சட்டமும் இல்லை."

"மனைவி கெட்டிக்காரி போலும். சொல்லிக் கொடுத்திருப் பாள் பேசுவதற்கு."

"எனக்கு இன்னும் திருமணமாகவில்லையே."

"ஏன். உங்களைப் போன்றவர்களுக்கெல்லாம் முறைப் பெண்கள் மூன்று பேர்கள் இருப்பார்களே. போட்டி போட்டுக் கொண்டு வருவார்களே."

"முறைப் பெண்கள் இருக்கிறார்கள். எல்லோரும் காசு எதிர்பார்க்கிறார்கள். நான் ஏழை. என்னிடம் காசு இல்லை. யார் வருவார்கள்."

"காசு இருந்தால் திருமணம் செய்து கொள்வீர்களா."

"அப்படித்தான் உலக வழக்கமாக இருக்கிறது. ஆணிடம் காசு இருந்தால்தான் பெண் அவளை நாடி வருகிறாள்."

"அப்படியொன்றும் அவசியமில்லை. காசுக்கு, ஆசைப் படாத பெண்களும் உண்டு."

"இருக்கலாம்"

"அப்படி எவளேனும் நாடி வந்தால் திருமணம் செய்து கொள்வீர்களா."

"ஆஹா, கரும்புத் தின்னக் கசக்குமா."

"நான் வந்தால் என்ன செய்வீர்கள்."

''அம்மணி, நீங்கள் சிற்பி, நான் மறவன். நமக்குள் சரிவருமா."

"ஏன் வராது."

"அம்மணி. நான் இரவானால் சற்று குடிப்பவன்"

"குடியுமேன். குடித்துவிட்டு உரக்கப் பாடுமேன். நானும் பாடுகிறேன்."

"நான் மாமிசம் விரும்பித் தின்பவன்."

"எனக்குச் சமைக்கத் தெரியுமே. கறியைக் கொத்தி உருண் டையாக்கி சோற்றோடு பிசைந்து பொரித்தெடுத்து குழம்பில் ஊற வைத்துக் கொடுப்பேன். சாப்பிட்டுப் பாரும். சொக்கி விடுவீர்கள்."

"கொஞ்சம் முரட்டு குணம் உண்டு."

"என்ன. அடிப்பீரா."

"அப்படியெல்லாம் இல்லை. பேச்சு கொஞ்சம் அதட்டலாக இருக்கும்."

"மாற்றிக் கொள்ளும்."

"உங்களைப் போல பெண் கிடைத்தால் தானாக மாறும் பேச்சு குழையும்."

"எதனால்."

"நீங்கள் அழகி. பெருந்தனக்காரர் வீட்டுப் பண். உங்களிடம் அதட்டிப் பேச முடியுமா."

"சரி. என்னை எப்போது எங்கே திருமணம் செய்து கொள்கிறீர்கள்."

"இப்போதே, இங்கேயே நான் தயார். ஆனால்."

"என்ன ஆனால்."

"என்னிடம் காசு இல்லை. பரம ஏழை. அதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்."

"காசு. என்ன காசு. என்னிடம் இருக்கிறது அது போதாதா. ஒரு குடித்தனம் செய்ய எவ்வளவு காசு வேண்டும்."

"பத்து கழஞ்சுகள் போதும். நன்றாகக் குடித்தனம் வைத்து விடலாம்."

"ஆனால் தஞ்சையில் குடித்தனம் வைக்க விடமாட்டார்கள்."

"ஆமாம், முதலில் தோலை உரித்தெடுத்து விடுவார்கள்."

"நாம் ஓடிவிடலாமா."

"எங்கே."

"நீர் சொல்லுமேன்"

"எனக்கு என்ன தெரியும்."

"திருமயிலைக்குப் போய்விடலாம். திருவல்லிக் கேணி போய் விடலாம். தொண்டைநாடுதான் வாழ்வதற்கு மிகமிக வசதியான இடம். எந்த விதமான கலவரமும் இல்லாமல், படையெடுப்பும் நடக்காமல் அமைதியாய் மக்கள் வாழ்கின்ற இடம்."

"அங்கே போனால் தேடமாட்டார்களா."

"தேடுவார்கள். ஆனால், தொண்டை நாட்டு மக்கள் விட்டுக் கொடுக்க மாட்டார்கள். அவர்கள் கணவன், மனைவிதானே இருந்து விட்டுப் போகட்டுமே என்று எவர் வந்தாலும் தடுத்து நிறுத்துவார்கள்."

"அந்த ஊர் ஏற்றுக் கொள்ளவில்லையெனில் திருவொற்றி யூர் போய் விடலாம்."

"திருவொற்றியூரில் ஏதேனும் தொந்தரவு இருப்பின் இன்னும் நகர்ந்து கீழைச்சாளுக்கியத்திற்கே போய் விடலாம்."

"அப்படிப் போவதற்கு எவ்வளவு காசு வேண்டும்."

"அதுதான் சொன்னேனே எங்கிருப்பினும் தனியே குடித்தனம் வைக்கப் பத்து கழஞ்சு காசாவது வேண்டும்."

"நான் இரண்டு படி பொற்காசுகள் கொண்டு வருகிறேன். போய் விடலாமா."

அவன் திகைத்தான், அவன் நாக்கு மேல் அண்ணத் தோடு ஒட்டிக் கொண்டது. உடம்பில் குப்பென்ற ஒரு அதிர்ச்சி பரவி யது. வியர்த்தது கால்கள் நடுங்கின. இரண்டு படி பொற்காசா. தொண்டை நாட்டில் நிலம் வாங்கலாம். மாடுகள் வாங்கலாம். அடிமைகள் வாங்கலாம். அடேய்.. அடேய்.. என்ன ஆயிற்றடா உனக்கு. வலக் கன்னத்தில் மச்சத்தோடு பிறந்தவன் என்று அம்மா அடிக்கடி சொல்வார்கள். தொடை மச்சமும், கன்னத்து மச்சமும் இப்படிக் கொண்டு வருமா. குண்டான அழகிய பெண். பெரும் குலம். இரண்டு படி பொற்காசு. அடேயப்பா.

அவன் தலையசைத்தான். அவர்கள் திட்டமிட்டார்கள். நல்ல நாள் பார்த்துப் போகலாம் என்று அவள் சொல்ல அதற்கும் அவன் சம்மதித்தான்.

இரண்டு முறை மாட்டுக் கொட்டகையில் அவளைத் தொட்டான். தொட்டுத் தழுவினான். முத்தமிட்டான்.

அவர்களுக்குள் பரஸ்பரம் பிடிப்பு வளர்ந்தது. அதை அன்பு என்றோ, காதல் என்றோ சொல்ல முடியாது. ஒருவர் மீது ஒருவர் சாய்மானமாக இருக்கத் தீர்மானித்தார்கள்.

ஐந்தாம் நாள் அழுத்திப் பின்னப்பட்ட ஒரு ஓலைக்கூடை நிறைய பொற்காசுகள் கொண்டு வந்தாள்.

"மொத்தம் எத்தனை." என்று கேட்டான்.

"எண்ணவில்லை. இரண்டு படி பொற்காசு. ஒரு பிடி கூட போட்டு வந்தேன்." என்று சொன்னாள்.

ஓலைக்கூடையத் திறந்து பார்த்தவனுக்குத் தலை சுற்றியது.

போகிற வழியில் குத்திக் கொன்றுவிட்டு அப்படியே எடுத்துப் போய்விடலாமா.

ஒரு கணம் யோசித்தான்.

இல்லை. தவறு. திருமணம் செய்து கொண்டு குடித்தனம் நடத்தி, குழந்தைகள் பெற்று மறுபடியும் வந்தால், இன்னும் பலபடி பொற்காசுகள் கிடைக்கும். எதற்கு இவளைக் கொல்வது. இவளுக்கு என்ன குறைச்சல். பெருந்தச்சரின் ஒரே செல்ல மகள். ஏகப் பட்ட காசு. நம்மைச் சட்டென்று சேனாதிபதியாக்கிவிட மாட்டார்களா. பெருந்தச்சரின் மகளைத் திருமணம் செய்து கொண்டதாலேயே நம்மைக் கோட்டைக் காவலில் தலைமைக் காவலானகச் செய்து விட மாட்டார்களா.

கழுத்தில் சங்கிலி, கையில் கங்கணம், காலில் வீரக்கழல், இடுப்பில் பட்டு, தோளில் சால்வை, நெற்றிச்சுழியோடு கூடிய பழுப்பு நிறப்புரவி, காராம்பசு, செவலைக்காளை, செம்மறி ஆடு என்று சுகபோகமாக இருக்கலாமே. இவளை விடக்கூடாது. இவளை மயக்கி நம் பக்கமே சுற்றும்படி வைத்துவிட வேண்டும். கொஞ்சிக் குலாவி, கட்டித்தழுவி, பல்வேறு சாகசங்கள் செய்து புருஷன் எங்கே, புருஷன் எங்கே என்று ஏங்கும்படி வைத்துவிட வேண்டும். அரச சபையில் இவனை விட மாட்டேன். இவனே புருஷன் என்று முழங்கும்படி வைத்துவிட வேண்டும்.

அவன் தெளிவானான். அவள் திடமானாள். அவர்கள் குதிரையேறி அந்த ஊர்விட்டு காணாமல் போனார்கள்.

அவள் வீட்டை விட்டுக் கிளம்பிப்போன ஆறு நாழிகைக்குப் பிறகுதான் அவள் காணோம் என்பது பெருந்தச்சருக்குத் தெரிய வந்தது. வேட்டியின் கச்சம் அவிழ்ந்து தொங்க அவர் தெருவுக்கு ஓடி வந்தார். எங்கே என் மகள், எங்கே என் மகள் என்று வாயிற் காவலனை அடித்தார்.

ஊர் கூடியது.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவருக்கு இந்தச் செய்தி போனது.

பெருந்தச்சர் மயக்கமடைந்து கிடப்பதாக, வைத்தியர் நாடி பிடித்துப் பார்த்துக் கொண்டிருப்பதாகச் செய்தி கொண்டு வந்தவன் விளக்கினான்.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் கவலை யானார்.

பதினாறு வயதுப்பெண் இன்னும் பூப்படையாதவள். அபரி மிதமான உணவால் வெறும் அங்கத் திரட்சி மட்டும் உடையவள், காவல் மறவனோடு ஓடிப் போயிருக்கிறாள். கொல்லைப்புறத்

தைக் காவல் காக்க வந்தவன் பெண்ணைக் கூட்டிக் கொண்டு போய் விட்டான்.

அவனை என்ன செய்ய. வெட்டிப் போட்டு விடலாமா.

இல்லை. பெண் சம்மதிக்காது ஆண் அத்துமீறியிருக்க முடியாது. இது கற்பழிப்பு அல்ல. கடத்தல். கடத்தல் கூட அல்ல களவுத் திருமணம். சோழதேசத்து நாகரிகத்தில் இதுவும் ஒன்றல் லவா. இதைத் தவறென்று எப்படிச் சொல்ல முடியும். எந்தச் சபையில் நிறுத்த வைத்தாலும் முறைப்படி திருமணத்தைத் செய்து விடுங்கள் என்று சொல்வார்களே தவிர, பிரித்துப் போட மாட்டார்களே. அப்படிப் பிரித்து போடுவது பாபம் என்பார்கள்

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் யோசித்துக் கொண்டிருந்த பொழுது இன்னொரு ஆள் ஓடி வந்து நின்றார்.

பெருந்தச்சர் குஞ்சரமல்லர் நாடி மிகவும் தளர்ந்திருக்கிறது என்றும், நெஞ்சு படபடப்பு அதிகமாக இருக்கிறதென்றும், வியர்த் துக் கொட்டுகிறது என்றும், நாக்கு ஒரு முறை இழுத்து கொண் டது என்றும், பற்கள் கிட்டிவிடாமல் இருக்க மரத்துண்டுகள் வாயில் கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும் சொன்னான்.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் கிழக்குப் பக்கம் பார்த்து கைகூப்பினார். கண் மூடினார்.

என்ன செய்ய நினைத்திருக்கிறாய் இறையே. நீ எது செய்தாலும் நான் ஏற்றுக் கொள்வேன். கட்ட வேண்டும் என்று நினைத்தாலும், போதுமென்று நினைத்தாலும் அதன்படியே நடக்கட்டும். ஏனென்றால் நானே என்ற எண்ணம் எனக்கு இல்லை. ஏதேனும் இருக்குமானால் துடைத்து விட நீ முயற்சி செய்கிறாய் என்பதும் புரிகிறது. உன் விருப்பம் எதுவோ அதுவே நடக்கட்டும் என்று சொன்னார். முகம் மலர்ந்தார்.

"பெருந்தச்சரைப் பார்க்கப் போகிறேன். ஏற்பாடு செய்யுங்கள்."

அவர் கை தட்டினார். முகம் கழுவிக் கொள்ளப் போகிறேன் என்று ஜாடையில் சொன்னார்.

அரண்மனை முற்றத்தில் அடுப்பு வைத்தார்கள். உடுத்திக் கொள்ள துணியும் முகத்தில் தேய்த்துக் கொள்ள வாசனைப் பொடியும் கொடுத்தார்கள்.

சக்ரவர்த்தி இடுப்புத்துண்டோடு நிற்க, அவரை ஆசனத்தில் உடகார வைத்து முகம் கழுவ நீர் கொடுத்தார்கள். அவர் கழுவிக் கொண்டதும் நிமிர்ந்து பணிப்பெண்களைப் பார்த்தார்.

"மேலுக்கும் விட்டு விடுங்களேன்." என்றார்.

சடடென்று வெந்நீரை அதிகப்படுத்தி சூடு போதுமா என்று கை வைத்துப் பார்த்து அரசருடைய முதுகிலும் தெளித்து, அவர் சரி என்று சொன்னதும் முதுகிலே நீர் வார்த்தார்கள். முதுகு தேய்த்தார்கள். நிற்க வைத்து கால்களிலும், தொடைகளிலும் வேகமாக எண்ணெய் தடவி பிறகு வாசனைப் பொடியை குழைத்து தடவினார்கள். இனிப்புப் பணியாரமும், வெற்றிலையையும் போட்டுக் கொள்ளக் கொடுத்தார்கள்.

உட்காரச் சொன்னார்கள். மடமடவென்று தலை வாரினார்கள். சிடுக்கு எடுத்தார்கள். கொண்டை போட்டு தங்கத் திருகைச் சொருகினார்கள். இரண்டு மூன்று ஊசிகளை அழுத்தி னார்கள். பிறகு மடமடவென்று நீர் ஊற்றிக் குளிப்பாட்டி னார்கள். மேல் துணியில் உடம்பு துடைத்தார்கள். தைலங்களை அங்கங்கே தடவினார்கள். பட்டுச் சால்வைகள் பலதும் நீட்டினார்கள். அவர் பச்சை சால்வையைத் தொட அதை அவர் மீது போடடார்கள்.

அவர் இடுப்புத் துண்டை அவிழ்த்து, நன்கு துடைத்து வேறு துணிக்கு மாறினார். இடுப்பு வேட்டியின் மீது அழுத்தமாய் ஒரு வர்ணத்துணியைச் சுற்றினார்கள். முத்து மாலைகளைக் கழுத்தில் போட்டார்கள். அரசர் கூடுதலான அலங்காரத்தோடு அரண்மனை விட்டு வெளியே வந்தார். மக்கள் ஆரவாரம் செய் தார்கள். கோட்டைக் கதவுகள் திறக்கப்பட்டன.

பெருந்தச்சர் வீடு வரை காவல்கள் பலப்படுத்தப் பட்டன. அங்கங்கே வீரர்கள் பாதுகாப்புக்கு நின்றார்கள். குதிரைப்படை யும் வில் ஏந்திய வீரர்கள் நிரம்பிய தேர்ப்படையும் பிறகு கறுப்பு உடை அணிந்த ஆபத்துதவிகள் படையும் அரசரைச் சுற்றி வளைத் துக் கொண்டு போக, பெருந்தச்சர் வீட்டு முன்பு சக்ரவர்த்தி தரையிறங்கினார்.

காவிரி ஆற்றில் வெள்ளம் சுழித்துக் கொண்டு ஓடியது. பார்த்துவிட்டுப் புன்னகை செய்தார். மெல்லப் படியேறி மாடியைச் சுற்றி காவிரிக் கரையைத் தொட்டுக் கொண்டு ஓடுகின்ற நீராழி மண்டபத்திற்கு அருகே நின்றார். பின்னால் ஆபத்துதவிகள் நின்றார்கள். கைக்கோளப்படை வீடு சுற்றி வளைத்துக் கொண்டது. கூடவே ஆடு மேய்க்கும் சிறுவர்களை

யும், கரையோரம இருந்த பெண்களையும் விரட்டியது. ஒரே ஒருவர் மட்டும் இருந்தால் போதும் மற்றவர்கள் விலகிக் கொள்ளலாம்.

அரசர் முணுமுணுப்பாகச் சொல்ல, அரசரின் மெய்க் காவல் படை வீரர்கள் ஒவ்வொருவராக நடந்தார்கள். அந்தப் படையின் தலைமைக் காவலன் அரசருக்கருகே நின்றான். அரசர் நகர்ந்து கூடத்திற்குள் போக, கூடத்திற்குள் உள்ள பெண்கள் எழுந்து நின்றார்கள்.

பெருந்தச்சரின் மனைவி அரசரை நோக்கி ஓடி வந்தாள். மெய்க்காவல் ·படைத்தலைவர் சற்று முன்னே வந்து அமைதி, அமைதி என்று எச்சரித்தான்.

அவள் தயங்கி நின்றாள். இரண்டடி தள்ளி நின்று அரசரைப் பார்த்து, "நாங்கள் என்ன பாவம் செய்தோம் என்ன பாவம் செய்தோம். எங்களுக்கு ஏன் இந்த இழிவு." என்று கதறினாள்.

அரசர் மௌனமாக அவளையே பார்த்துக் கொண்டிருந் தார்.

"என் நண்பர் எங்கே." என்று கேட்டார்.

உதவிச் சிற்பிகள் உமாபதி ஆச்சாரியும், விஸ்வநாத ஆச்சாரியும் அருகே நின்று கை கூப்பினார்கள்.

நண்பர் எங்கே என்று கேட்டது விஸ்வநாத ஆச்சாரிக்கு சந்தோஷமாக இருந்தது.

அவர் பெருந்தச்சர் படுத்திருக்கின்ற இடத்தைச் சக்ரவர்த் திக்கு சுட்டிக் காட்டினார். சக்ரவர்த்தி அறை வாசலில் நின்று எட்டிப் பார்த்தார்.

பெருந்தச்சர் குஞ்சரமல்லரின் கால்கள் தெரிந்தன. உள்ளே நுழைந்த உமாபதி ஆச்சாரியை நிறுத்தினார்.

"இப்போது என்ன நிலைமை."

"மன'ம் பேதலித்துப் போய்க் கிடக்கிறார். காரணம் மகளல்ல, இரண்டு மனைவிகள். குறிப்பாய் மூத்த மனைவி அதிகம் புலம்பி, அதிகம் இடித்துரைக்க அவருக்கு சட்டென்று ஒரு வெறுப்பு வந்துவிட்டது. எல்லாவற்றையும் வீசிப் போட்டுவிட்டு சுருண்டு படுத்து விட்டார். பிறகு நெஞ்சு வலிக்கிறது என்று சொன்னார். வைத்தியரை அழைத்து வருவதற்குள் ஒருமுறை மூக்கு வழியாக ரத்தம் வழிந்தது. பிறகு பலமாக இருமல் ஏற்பட்டது. மூச்சிரைத் தது. நாங்கள் பயந்து விட்டோம்.

வைத்தியர் உடனடியாகத் தூங்குவதற்கு மயக்க மருந்து கலந்த திரவத்தைக் கொடுத்தார். அதனால் உறக்கம் ஏற்பட்டிருக் கிறது. ஆனாலும் உடம்பு படபடப்புக் குறையவில்லை.”

“நான் பேசினால் அவரால் பேச முடியாதா.”

“முடியும் என்று நினைக்கிறேன். குறைந்த அளவு மருந்துதான் கொடுக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் வந்திருப்பதே அவரைத் தெளிவாக்கிவிடும். அவர்கள் இரண்டு பேரையும் அப்புறப்படுத்தி விட்டால் இன்னும் நிதானமாகி விடுவார். ஆனால், தன் மகள் இப்படிச் செய்வாள் என்று அவர் எதிர்பார்க்கவில்லை”

“அந்த மறவனைப் பற்றியொன்றும் புகார் இல்லையே. நல்ல கோட்டைக்காவலன் என்றுதானே சொல்கிறார்கள். பயந்தவன் என்றுதானே பேசுகிறார்கள்.”

“பயந்தவன் தான். அவள் உற்சாகப்படுத்தித்தான் அழைத்துப் போயிருக்க வேண்டும்.”

“எதனால் சொல்கிறீர்.”

“இரண்டு படிகளுக்கும் மேலே பொற்காசுகள் ஓலைக்கூடை யில் வைத்து எடுத்துப் போயிருக்கிறாள்.”

“இல்லை. அவனுக்குக் காசு செலவழிக்கத் தெரியாது என்று நண்பர்கள் சொல்கிறார்கள்.”

“சிற்பிகள் என்ன சொல்கிறார்கள்.”

“யாரும் வேலை செய்யவில்லை.”

“ஏன்.”

“பெருந்தச்சருக்கு உடல் நலம் சரியில்லை. சுருண்டு படுத்து விட்டார். வீட்டில் தகராறு என்றதும் அவர்கள் ஒடுங்கிவிட்டார் கள். பெருந்தச்சர் சுதாரித்துக் கொண்டால் வெகுவேகமாக வேலை நடைபெறும்.”

“பெருந்தச்சர் நாளை மாலை அல்லது அதற்கு மறுநாள் சகலமும் உதறிவிட்டு எழுந்து உட்கார்ந்து விடுவார் என்று எனக்குத் தோன்றுகிறது.”

“குறிப்பாய் நீங்கள் வந்திருப்பது தெரிந்தால் அவர் வேகமாக வேலைக்கு இறங்கி வந்து விடுவார்.” மெல்லிய குரலில் அமைதியாக விஸ்வநாத ஆச்சாரி, சக்ரவர்த்தியிடம் பேசினார்.

"அப்படியானால் இந்த மூன்று நாள் வேலைகளை யார் செய்வது. பெருந்தச்சர் படுத்துவிட்டார் என்றால் நீங்களெல்லாம் படுத்துவிடுகிறீர்களே. இது என்ன நியாயம்."

சக்ரவர்த்தி பேச்சில் மெல்லிய கோபம் இருந்தது. அவர்கள் இருவரையும் தாண்டி சக்ரவர்த்தி உள்ளே நுழைந்தார்; கண்மூடிப் படுத்திருந்த பெருந்தச்சர் குஞ்சரமல்லர் அருகே போய் அமர்ந்தார். நெஞ்சின் மீது கை வைத்தார்.

"இறையே இவனை எனக்குக் கொடு. இந்த மகா மனிதன் என் கனவுகளை நனவாக்கக்கூடியவன். இங்கு துவண்டு இருக்கிறான். இறையே இவனை நிமிர்த்து!"

உள்ளுக்குள் மன்றாடினார்.

வெளியே புன்சிரிப்பு மட்டும் எல்லோருக்கும் தெரிந்தது.

சட்டென்று பெருந்தச்சர் குஞ்சரமல்லர் கண் விழித்தார்.

யார் அமர்ந்திருக்கிறார்கள். யார் தொடுகிறார்கள் என்று முதலில் புரியவில்லை. அவர் பார்வையில் எந்த ஜீவனும் இல்லாமல் இருந்தது.

"என்ன ஆயிற்று பெருந்தச்சரே. எதற்குப் படுக்கை."

மெல்ல அமைதியான குரலில் சக்ரவர்த்தி கேட்க, பெருந்தச்சருக்கு அந்தக் குரல் நெஞ்சில் தைத்தது. மறுபடியும் கண் மூடித்திறக்க அந்தப் பார்வையில் ஜீவன் கூடியது.

முழங்கையை ஊன்றி மெல்ல எழுந்திருக்க முயல, சக்ரவர்த்தி அவர் நெஞ்சில் கை வைத்து மறுபடியும் படுக்கையில் தள்ளினார்.

"உமக்கு ஒன்றுமில்லை. ஆனாலும் ஓய்வெடுத்தல் அவசியம். உமது உடம்பு கற்பாறை போல உறுதியாகவும், திடமாகவும் இருக்கிறது. மனம்தான் பேதலித்துக் கிடக்கிறது.

குஞ்சரமல்லரே! உமக்கு நான் ஒரு கதை சொல்கிறேன். இன்று மாதேவடிகள் என்று அழைக்கப்படுகின்ற அந்தப் பெண் ஒரு காலத்தில் என் மகள். நான் சீராட்டி வளர்த்த குழந்தை, ஒவ்வொரு போர் முனையிலும் அவளை மறுபடியும் பார்க்க வேண்டும் என்ற ஆசையில் தான், அவளுக்கு ஏதேனும் கொண்டு வர வேண்டும் என்ற எண்ணத்தில்தான். உக்கிரமாகப் போர் செய்வேன்.

தஞ்சைக்குள் நுழைந்ததும் அவளைப் பார்க்கத்தான் பரபரப்பேன். ஆனால், வாழ்க்கை கொடூரமானது. பாசம் முட்டாள்தனமானது. கேவலமானது. போர் முனையில் தலையனும், தந்தையும் தவித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று தெரிந்தும் ஒரு சாதாரண இளைஞனோடு சல்லாபித்து என்னை விட்டுப் பிரிந்து போனாள். பிரபஞ்சம் இடிந்து என் தலையில் விழுந்தது. உலகத்திலுள்ள அத்தனை உயிரினங்களும் எனக்கு துரோகம் செய்யவே பிறந்திருக்கின்றன என்ற வெறுப்பு ஏற்பட்டது. உங்களுக்கும் அப்படித்தானே இருக்கிறது குஞ்சரமல்லரே."

குஞ்சரமல்லர் சக்ரவர்த்தியையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். மெல்ல ஆம் என்று தலைவசைத்தார்.

"ஆனால், உலகம் அவ்விதமில்லை. நமக்குத் துரோகம் செய்ய வேண்டுமென்று யாரும் நினைக்க வில்லை. தனக்கு நன்மை செய்து கொள்ள வேண்டும் என்று நினைக்கிறார்கள். அவர்கள் வழியே போகிறார்கள். நான் வளர்த்தது என் பின்னே வரவேண்டும் என்பதுதான் என் கட்டளை. என் விருப்பம் மீறப்படும்போது மனம் நோகிறது. ஆனால், நான் யார் பின்னே போனேன். எவருக்கு அடங்கி நடந்தேன். என் முரட்டுத்தனங்கள் என்னென்ன. என் அத்துமீறல்கள் என்னென்ன என்று பட்டியலிடும்போது நான் என் மகளை விட மிகப்பெரிய அயோக்கியன் என்று தெரிந்தது.

என்னுடைய அத்துமீறல்களை நான் சுதந்திரம் என்று பெயரிட்டழைக்கும்போது அவளுடைய அத்து மீறல்களை அயோக்கியத்தனம் என்று சொல்வது எப்படிப் பொருந்தும். நீங்கள் உங்கள் மகளுக்கு மணமுடிக்க ஆசைப்பட்டீர்கள். அவளே தன் கணவனைத் தேடிக் கொண்டாள். சிறிய வித்தியாசம்தான். உங்களுக்கு என்ன வேண்டும் என்று சொல்லுங்கள். ஒரு சிறு படையை அனுப்பி அந்த மறவனைப் பிடித்து இழுத்து வந்து மாறுகால், மாறுகை வாங்குவது பெரிய விஷயமல்ல. பாதிக்கப்படப்போவது உங்கள் பெண். உங்கள் பெண் பாதிக்கப் பட்டால், நீங்கள் பாதிக்கப்பட்டால், இந்த கோயில் வேலை பாதிக்கப்படும். இந்தக் கோயில் வேலை பாதிக்கப்பட்டால் நான் பாதிக்கப்படுவேன். நான் பாதிக்கப்பட்டால்."

குஞ்சரமல்லர் சட்டென்று கை நீட்டி அரசரின் வாய் பொத்தினார்.

"சோழ சக்ரவர்த்தியை விட, சோழ மக்களை விட மிகப் பெரிய விஷயம் எனக்கு ஏதுமில்லை."

அடிக்குரலில் நாக் குழறப் பேசினார்.

சக்ரவர்த்தி அவரையே இமைக்காது பார்த்தார். இன்னும் நெருங்கி அமர்ந்து கொண்டார். தோளில் கை போட்டுக் கொண்டார்.

"இவருக்குத் துணியால் உடம்பை நன்றாகச் சுத்தம் செய்து விடு. யாரது வெளியே. குடிப்பதற்குச் சூடாக இரண்டு குவளை பால் வேண்டுமென்று சொல். கோயில் மெல்ல வளர்ந்து வருகிறது. இவர் இருக்கின்ற இடத்திற்கும், கோயிலுக்கும் பெரிய தூரம் இருக்கிறது. வைத்தியர் எங்கே."

சக்ரவர்த்தி உரத்துக் கேட்க, வைத்தியர் உள்ளே வந்தார்.

"உடம்பு வலி போக ஒரு தைலம் வைத்திருப்பீரே. அதைக் கொண்டு வாரும்."

இடுப்பிலிருந்து வைத்தியர் ஒரு சிறு பளிங்குக் குப்பியை எடுத்தார். மூன்று சொட்டுகள் குவளை நீரில் விட்டார். கலக்கினார். ஒரு துணியில் அந்த நீரை நனைத்து சக்ரவர்த்தியின் மெய்க்காவல் தலைவன் பெருந்தச்சரின் உடம்பைத் துடைத்து விட்டான். கழுத்து, தலையின் பின்பக்கம், முதுகு என்றெல்லாம் நன்றாகச் சுத்தம் செய்தான். அறையில் சுற்றும் முற்றும் போய், ஒரு மாக்கல் ஜாடியிலிருந்து விபூதி வாசனை வருவதை அறிந்து, அந்த விபூதியை எடுத்து உள்ளங்கையில் வைத்து, அந்த வீரனை நீர் விடச் சொல்லி, குழைத்து கிழக்குப் பார்த்து, பெருந்தச்சரை நிற்க வைத்து, நெற்றியிலும், மார்பிலும், வயிற்றிலும், புஜங்களிலும் சக்ரவர்த்தி ஸ்ரீ உடையார் இராஜராஜத்தேவர் விபூதி அணிவித்தார். தன் மேல் துண்டால் உள்ளங்கை விபூதியை துடைத்துக் கொண்டார். உதிரியான விபூதியை மறுபடியும் எடுத்துத் தன் நெற்றியில் இட்டுக் கொண்டார்.

"பெருந்தச்சக் குஞ்சரமல்லரே நான் ஒரு சிறுபடையை ஒரு உதவி சேனாதிபதியோடு அனுப்பி உங்கள் மகள் இருக்கும் இடத்தை அறிந்து, அவர்கள் மனோநிலை தெரிந்து, மெல்ல மறுபடியும் தஞ்சைக்கு வரவழைக்க விரும்புகின்றேன். நீங்கள் அவளைப் பார்த்ததும் மனம் கொதித்துவிட வேண்டாம். நம்மைப் போன்றவருக்கு உற்றார், உறவினர் என்று யாரும் இல்லை. எல்லாம் இறைவனே. வாழ்க்கையின் கஷ்டம் தெரியாமல் குழந்தைகளை வளர்க்க வேண்டும் என்று நாம் ஆசைப் படுகிறோம். அதுவே நமக்குப் பிரச்சினையாகப் போய் விடுகிறது. வாழ்க்கை என்பது என்ன, அதை எப்படி எதிர் கொள்வது என்று அவர்களுக்கு இறைவன் தெரிவிக்கட்டும். சற்று ஓய்வு

எடுத்துக் கொண்டு கோயில் பணிக்குத் திரும்புங்கள். நாலைந்து நாட்களானாலும் பரவாயில்லை. நல்ல ஓய்வு தேவை."

"எனக்கா.. ஓய்வா. எனக்கு. எனக்கு வேலையும் இது தான். ஓய்வும் இதுதான். நித்த வினோதப் பெருந்தச்சனோடு பேசுவது வேலை. அடுத்த சிற்பியோடு பேசுவது ஓய்வு. அதற்கு அடுத்த சிற்பியோடு பேசுவது வேலை. வேலைகளை மாற்றி மாற்றி செய்து கொண்டிருக்கும் போது எதுவேலை, எது ஓய்வு என்று எண்ணமே இல்லாமல் போகிறது. சக்ரவர்த்தியிடம் நான் விடை பெறுகிறேன். தற்சமயம் எனக்கு வேலைகள் இருக்கின்றன."

பெருந்தச்சர் கை கூப்பினார்.

மெல்ல எழுந்து விலகினார். சக்ரவர்த்திக்கு உள்ளுக்குள் பெருமிதம் பூத்து மலர்ந்தது. மிகுந்த காதலோடு பெருந்தச்சரை பார்த்துக் கொண்டிருந்தார். திரும்பி வாசலுக்கு நடந்த பெருந்தச்சர் வாசற்படியில் நின்று மறுபடியும் மன்னரை திரும்பிப் பார்த்தார்.

"சிவபெருமான் யார் என்று எனக்குத் தெரியரது. அதைத் தேடுகின்ற எண்ணமும் எனக்கு இல்லை. எனக்குத் தெரிந்தவரை நீரே சிவன். என் சிவன். தென்னாடுடைய சிவன்" என்று குரல் கம்ம விழிகளில் நீர் பொங்க தொலைவிலிருந்து கை கூப்பினார்.

அந்த மெய்க்காவல் படைத் தலைவன் வியப்போடு பெருந்தச்சரைப் பார்த்தான்.

அவன் மனமும் நெகிழ்ந்தது. அவன் கண்களிலும் கண்ணீர் கோர்த்துக் கொண்டது. திரும்பி சக்ரவர்த்தியின் முகம் பார்த்தான்.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் மெல்லிய புன்முறுவலோடு நின்று கொண்டிருந்தார். அவர் கண்கள் மிக ஆழமாய். மிக அகலமாய், வேறெங்கோ நிலைத்திருப்பது போலவும், தன்னையே நோக்குவது போலவும் இருப்பதை அந்த மெய்க்காவல் படைத்தலைவன் கவனித்தான்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் வெறும் சக்ரவர்த்தி அல்லர் என்று அவனுக்குத் தோன்றியது.

# 149

**ந**ன்கு வெளிச்சம் வந்த பிறகு நெய்விளக்கு ஏற்றி அதைப் புடைவைத் தலைப்பில் அணையாத வண்ணம் அணைத்தபடி அவள் எடுத்து வந்தாள்.

"நிதானமா செய் மகளே. நிதானமா செய். நீ வைக்கிற விளக்கு நெடுநாள் எரியோணும்" என்று அவர் உரத்த குரலில் வேண்டுதல் போலச் சொன்னார்.

அவள் உலைக்கு அருகே போனதும் பெண்கள் குலவை யிட்டார்கள். சங்கு முழங்கியது. சிறுபறை ஒலித்தது நட்சத்திரக் கோலம் போல் அடுக்கப்பட்டிருந்த சுள்ளிகளுக்கு நடுவே அந்த நெய் விளக்கை மெல்ல கீழிறக்கி ஒரு கை ஆழத்திற்கு கீழே இருக்கின்ற ஒரு கருப்பு வட்டப்பாறை மீது அந்த அகலை வைத்தாள்.

சுற்றியிருந்த சருகுகளில் நெருப்பு பிடித்தது. சருகுகளிலிருந்து சிறு குச்சிகளுக்கு நெருப்பு தாவியது. சிறு குச்சிகளிலிருந்து பெரும் உலர்ந்த குச்சிகளுக்கு நெருப்பு பரவியது. காற்று மெல்லியதாய் வீச அறுபது வினாடிகளில் குப்பென்று சுள்ளிகளில் நெருப்பு பிடித்துக் கொண்டு தகதகவென்று எரிந்தது. நெருப்பு நன்கு எரிந்த தும் ஒரு கை நீள விறகுகளைக் கொண்டு வந்து அந்த நெருப்பில் நெடடுக்குத்தலாய்ச் சொருகினார்கள். அந்தக் கடடைகளிலும் தீப்பிடித்துக் கொள்ள உலைக்கு அருகே போக முடியவில்லை. போக முடிந்த வெகு சிலர் மட்டும் அந்த இரும்புக் கம்பிகளுக்கு அருகே போய் கட்டைகளை அசைத்து உலையை வகைப்படுத் தினார்கள்.

நல்ல உயரத்தில் இரும்புக்கட்டை நீண்டிருந்தது. அந்த இரும்புக் கட்டையை இரண்டு பக்கமும் கனமான இரும்புக் கால்கள் தாங்கியிருந்தன. அந்தக் காலின் ஓரத்தில் உலையி லிருந்து சற்றுதள்ளி மிகப்பெரிய ஆள் உயரத்திற்கும் அதிகமான வெண்கல உருளி கொக்கி போட்டு மாட்டப்பட்டிருந்தது. உறுதி யான படிகளையுடைய மர ஏணியை இரும்புக்கால் மீது சாய்த்து, அதன் மீது இரண்டு பேர் நின்றிருந்தார்கள். வெண்கலம், பித்தளை, தாமிரம், ஈயம் என்று பல்வேறு உலோகப் பொருட்கள் அங்கு குவித்து வைக்கப்பட்டிருந்தன. எடை போட்டு தனித்தனியே வைத்திருந்தார்கள்.

உருளிக்குள் முதலில் பித்தளைப் பாத்திரங்கள் இறக்கப் பட்டன. எங்கேயோ போருக்குப் போய் ஊருக்குள் நுழைந்து கொள்ளையடித்துக் கொண்டு வந்த பாத்திரங்கள் அவை. ஏதோ மண்டபத்திலிருந்து பிய்த்தெடுத்த பித்தளைத் தகடுகள் அவை. தட்டுகள், கிண்ணங்கள், அகல் விளக்குகள் அவை. பெரிய குடங்கள் எல்லாவற்றையும் கொண்டு போய் அந்த வெண்கல உருளியில் போட்டார்கள். அதில் வெண்கலச் சாமான்களை இட்டார்கள். பிறகு தாமிரக்குடங்களும், தகடுகளும், போணி

களும், மண்டைகளும் (ஒரு வகை உலோகப் பாத்திரம்) போடப் பட்டன. கொக்கியிலிருந்த உருளி ந்கர்த்தப்பட்டு மேலே கொண்டு வரப்பட்டது. அப்போதும் பெண்கள் குலவையிட்டார்கள்.

கழுத்தில் மாலை அணிவிக்கப்பட்டிருந்த ஒரு செம்மறி ஆட்டை ஒரு உலோகச் சிற்பி முன்னே அழைத்துப் போனான். ஆட்டின் முதுகைத் தடவினான் கீழே பசும்புற்களை போட்டான். ஆடு குனிந்து புற்கள் தின்ன, இடுப்பிலிருந்து வாள் உருவி ஒரே வீச்சில் ஆட்டின் கழுத்தைத் துண்டித்தான். ரத்தம் பீய்ச்சி தரை முழுவதும் பரவியது.

சடேரென்று ஒரு முதியவள் உக்கிரமானாள்.

"அடேய்.. சம்முதி." என்று உரக்கக் கூவினாள்.

கூட்டத்திலுள்ள பெண்கள் அவளைத் தாவிப் பிடித்துக் கொண்டார்கள். அவள் மிகவும் பலம் வாய்ந்தவளாக அவர்களை உதறித் தள்ளினாள்.

என் தாயே... என் தாயே என்று மெல்ல அவள் தோள் தொட அப்படிக் கெஞ்சித் தோள் தொட்டவர்களை அனுமதித் தாள். ஆனாலும் ஆவேசமாக ஆடிக் கொண்டிருந்தாள். மறுபடி யும் அடேய் சம்முதி என்று கூவினாள்.

அந்த உலோகச் சிற்பிகளின் தலைவனான சக்கடி சமுதியன் தலைப்பாகையை உருவி உதறி இடுப்பில் கட்டிக் கொண்டு நேரே போய் அந்த மத்திம வயதுப் பெண்ணின் காலில் விழுந்தான்.

"ஆத்தா வரம் தரணும். ஆத்தா வரம் தரணும்" என்று கை கூப்பினான்.

"கொடுத்தேனடா." என்று அவள் பதிலுக்குக் கத்தினாள்.

சிறுபறை வேகமாக முழக்கப்பட்டது. மறுபடியும் சங்கு பலமாக ஊதப்பட்டது.

"வந்த பொண்ண நல்லா நடத்து. வளக்கற பொண்ண நல்லதா நடத்து. இருக்கற பொண்ண நல்லா நடத்து. இல்லாத பொர்ண்ண நல்லா நடத்து. எல்லாம் நல்லா நடக்கும். எது செஞ்சாலும் நல்லா நடக்கும். எது செஞ்சாலும் நல்லா நடக்கும்."

அவள் உரக்கச் சொன்னாள். எதிரே கறுப்புச் சாம்பலை தட்டில் வைத்து நீட்டினார்கள். அதை எடுத்து உயரப் பார்த்து தரையில் வேகமாக அடித்தாள், சாம்பல் தூள் புகை போலும்

கிளம்பியது. சட்டென்று சக்தி முழுவதும் தரைக்குக் கீழே நழுவ விட்டவள் போல் துவண்டு சரிந்தாள்.

"அப்பா... நிம்மதி. நிம்மதி."

சக்கடி சமுதியன் என்கிற அந்த முதியவன் நெஞ்சில் கை வைத்துக் கொண்டு சந்தோஷப்பட்டான்.

"இதுவரையிலும் ஒரு குரலும் வரலியே ஆத்தா பேசலை யேன்னு நினைச்சேன். சரியான நேரத்துல, சரியான வாக்கு."

சக்கடி சமுதியன் உரத்துச் சொல்ல எல்லோரும் சந்தோஷப் பட்டார்கள். உள்ளே உலோகச் சாமான்கள் உருகத்துவங்கின. மர ஏணியின் மேல் ஏறி நின்று குழம்பைப் பார்த்து விட்டு, அவன் பித்தளையில் மூணு மடங்கு என்று சொல்ல, பித்தளை யைக் கொக்கியில் மாட்டி உள்ளே கொட்டினார்கள். கால் நாழிகைக்கு ஒரு முறை உலைக்கு அருகே போய் உருளியில் இருக்கும் குழம்பைப் பார்த்து, சில சமயம் கிளறிவிட்டு, அவன் விதம்விதமாய் உலோகங்கள் பெயர் சொல்ல, அவர்களும் அதற்கேற்ற வண்ணம் உலையில் இறக்கிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு ஆள் உயரமுள்ள மரப்பீடத்தின் மீது ஏறி நின்று அந்தக் கலவையைக் கிளறிக் கிளறி அங்கு உற்றுப் பார்த்துக் கொண் டிருந்தார்.

"அச்சு நல்ல நிலையா"

"நல்ல நிலை"

குரல் கொடுத்தார்கள்.

"தூக்குச்சட்டி நல்ல நிலையா."

"நல்ல நிலை"

குரல் கொடுத்தார்கள்.

"கலவை பதம் நல்ல சுத்தமா."

"சுத்தம்." என்று குரல் கொடுத்தார்கள்.

தூக்குப்பானை கொண்டு வாருங்கள் என்று உரக்க உத்தரவிட, வெள்ளி போல அமைப்பிருந்த ஒரு பானையின் இரண்டு பக்கமும் நீண்ட கழிகள் கட்டி, இரண்டு இளைஞர்கள் தூக்கி வந்தார்கள். அதேபோல இன்னொரு பானையை வைத்துக் கொண்டு அடுத்த இளைஞர்கள் காத்திருந்தார்கள் உலோகம் சுடு குழம்பாய் முதல் சட்டியில் வழிந்தது. விழுந்து எகிறி தெறித்து

நாலாபுறமும் ஓடியது காலில் தேக்குமரப் படைகளைச் சுற்றிக் கொண்டிருந்த அவர்கள் அந்த உருகல் தங்கள் மீது வழியாமல் இருக்க, கால்களை மாற்றி மாற்றி வைத்துக் கொண்டு ஓடினார்கள். நீளமாய் வைத்திருந்த களிமண் அச்சில் மெல்ல ஊற்றினார்கள். ஒரு சீராக அந்தக் குழம்பு அந்த அச்சில் விழுந்து மறு ஓட்டையை அடைந்து அதில் தளும்பி, மீண்டும் உள்ளே நுழைந்தது, அடுத்த ஓடடையில் நிரம்பி மறுபடியும் உள்ளே நுழைநது முட்டிக் கொண்டு நின்றது. அந்த ஓடடையால் அச்சு நின்றதும் அவர்கள் அடுத்த இடத்திற்கும் போய் மீதியை ஊற்றி னார்கள். அங்கேயே இன்னொரு சட்டியை எடுத்துக் கொண்டு இன்னொருவர் வர அங்கும் அச்சில் ஊற்றப்பட்டது.

“கொப்புளங்கள் அதிகம் வருகின்றன.”

“வரட்டும். இதில் கொப்புளங்கள் வந்தால் தவறில்லை” என்று மூத்தோர்கள் சொன்னார்கள்.

சிறு குழந்தைகள் உடகார்ந்து உன்னிப்பாய் வேடிக்கை பார்த்தார்கள். பெண்கள் மருந்து வகையறாக்களோடு கவனமாக இருந்தார்கள். யார் காலிலும் எதுவும் விழுந்து எவரும் தீப்புண் ணால் தவிக்கக் கூடாது என்ற கவலையோடு இருந்தார்கள். கடைசி உலோகமும் கவிழ்க்கப்பட்டது. குழம்பு அச்சுக்கு கொண்டு போகப்பட்டது. மெல்ல அவர் கீழ் இறங்கி அச்சுக்களை நோக்கிப் போனார். உருளியை அவர்கள் அவிழ்த்து தூக்கிக் கொண்டு போய் ஒரு ஓரமாகப் புரட்டி விட்டார்கள். அதிலுள்ள வண்டல் உலோகம் தரையில் விழுந்தது.

பெண்கள் வேகமாக நீண்ட குச்சிகளால் அந்த அடுப்பை அணைத்தார்கள். நீர் தெளித்தார்கள். பெரிய அடர்த்தியான புகை மேலே எழுந்தது. அந்த இடம் முழுவதும் பரவியது. பலபேர் இருமினார்கள். ஆனால், வேகமாக ஒரு காற்றடித்து அந்தப் புகையைக் கரைத்தது. புகை மேலெழுந்தது. சிறிது நேரத்தில் அந்த இடம் சுத்தமாகியது. புகை அடங்கியதும் அவர் உற்று அச்சுக்களைப் பார்த்தார்.

நாளை காலை அல்லது நாளை மாலை மேலேயிருக்கிற களி மண்ணைச் சுத்தியலில் அடித்து எடுத்துவிட்டால் உள்ளுக் குள்ளே இந்த பித்தளைத் தடிகள் பளபளப்பாக இருக்கும். இது தான் விக்ரஹங்கள் செய்கின்ற மூல உலோகம். தங்கம் மட்டும் இதில் கலப்பில்லாமல் இருக்கிறது. மறுபடியும் இதை உருகச் செய்து அந்த அச்சுகளில் கவனமாக ஊற்ற வேண்டும். இவ்வளவு

பெரிய உலை தேவையில்லை. இத்தனை பேர் கும்பலாகப் பணி புரிய வேண்டியதில்லை. அது இன்னும் நுணுக்கமான வேலை.

உருளியிலிருந்து பெரிய அகப்பைகளில் அச்சு மொண்டு சிறிய ஓட்டைகளில் மிகச் சீராக ஊற்ற வேண்டும். அச்சுகளில் இடித்துவிடக்கூடாது. வேகமாக ஊற்றக்கூடாது. நிதானமாகவும் ஊற்றக்கூடாது. ஒரே சீராக இடைவெளி இல்லாமல் ஊற்ற வேண்டும். சூடு ஆறுவதற்குள் ஊற்ற வேண்டும். புகை அதிகமாக இருந்தால் பெண்களை விசிறச் சொல்ல வேண்டும். வேகமாக விசிறினால் குழம்பு ஆடி வெளியே வரும். மெல்ல விசிற வேண்டும். புகையைப் போக்கும் வண்ணம் விசிற வேண்டும்.

சிலை செய்வது ஒரு உயிர் கொடுக்கும் வேலை சல்லியக் கிரியை செய்யும் மருத்துவர்கள் எப்படி கையை அறுத்து கட்டியை எடுத்துவிட்டு உள்ளுக்குள் மருந்து வைத்து தோலைத் தைப்பார்களோ, மயக்கமுற்றவர் கண்விழிக்கும் வரை எப்படி பதறிப்பதறி அவனையே பார்த்துக் கொண்டிருப்பார்களோ, அது போன்ற நிலைமைதான் உலோக ஆசாரிக்கும் இருக்கும். எத்தனை பார்த்துச் செய்தாலும் உள்ளுக்குள் கொப்புளம் வந்து விடும். எதனாலோ அந்தக் கொப்புளம் உருவாகும். சிலையின் மார்பில், புஜத்தில், கழுத்தில், முகத்தில், இடுப்பில் என்று எந்த இடத்தில் வேண்டுமானாலும் அந்தக் கொப்புளம் இருக்கலாம். சுத்தியால் மெல்லத் தட்டும்போது அங்கு கொப்புளம் இருப்பது தெரிந்துவிடும்.

நகாசு வேலை செய்கிறபோது சிலை உடைந்து விடுவதும் உண்டு. பதினைந்து நாள் அச்சு செய்து ஒரு நாள் முழுவதும் அடுப்புக்கடியிலே வெந்து, நிதானமாக மூச்சுப் பிடித்து அச்சு ஊற்றியும் அந்த வேலை முழுவதும் பாழாய்ப் போகும். என்ன காரணமென்று கண்டு பிடிக்கவே முடியாது. இது உயிர் கொடுக்கிற வேலை. சிலை சரியாக வந்துவிட்டால் தெய்வத்தைப் பார்ப்பது போல உலோக ஆச்சாரியைப் பார்ப்பார்கள். நன்கு சிலை வந்துவிட்டால் அடுத்து மறுபடி மூன்று நான்கு சிலைகளுக்கு நிச்சயம் அச்சாரம் கிடைத்து விடும்.

கோயில் வேலை ஆரம்பித்து விட்டது. சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் மிகப்பெரிய கற்றளி எழுப்புகின்ற பணியிலே இருக்கிறார். ஆனால் உலோகச் சிலை குறித்து இதுவரை யாரும் பேச வில்லை. ஒரு சின்ன கவலையோடு பெருந்தச்சர் குஞ்சரமல்லரைக் காணும் போது அவர் அருகே அமர்த்திக் கொண்டார்.

“நீயில்லாமல் ஒரு கோயில் நிறைவாகுமா. அஸ்திவாரமே முடிந்தபாடில்லை. எனவே, உன்னுடைய வேலை பின்னால் தான் வரும். ஆனாலும், உலோகக் கட்டைகளைத் தயார் செய்து கொள். அதே நேரம் நல்ல உயர்ந்த நிலையில் மென்மையாய் இருக்கும்படி சொர்ணம் கலக்கும்படி வைத்திரு. சொர்ணம் கலந்தால் அது விலை மதிப்பற்றதாகி விடும். எனவே, களவு போக வாய்ப்புண்டு. பித்தளைக் கட்டைகள் என்றால் வீட்டுத் திண்ணையிலேயே அடுக்கி வைக்கலாம். கட்டைகளைத் தயார் செய்து கொள்.”

“உத்தரவிட்டார். நூறு பொற் கழஞ்சுகள் கொடுத்தார். கீழைச்சாளுக்கியத்திலிருந்தும், திருவொற்றியூரிலிருந்தும், திருமயிலையிலிருந்தும், திருவலிதாயத்திலிருந்தும அவனுடைய ஆட்கள் பித்தளைப்பட்டைகளும், உருக்குகளும் வாங்கி வர, பஞ்சலோக சிலைக்கான உலோகக்கலவை தயாராகி விட்டது. அவருடைய மகள் குடத்தோடு வந்து நின்றாள். மற்ற பெண்களும் இடுப்பில் தவலையோடும், பானையோடும் நிற்பது பார்த்து மெல்லியதாய் புன்முறுவல் செய்தாள். செய்யுங்கள் என்று தலையசைத்தார்.

அந்தப் பெண்கள் மெல்ல அச்சுக்கருகே போனார்கள். காற்றில் ஆறிய அச்சின்மீது மிக்க கவனமாக நீர் தெளித்து ஆற்றினார்கள். அங்கிருந்தும் புகை எழுந்தது. அச்சைச் சுற்றியும் தண்ணீர் ஊற்றினார்கள். அந்தக் குளுமையிலும் அச்சு இறுகியது. கடைசி அச்சுக்குப் போனதும் இரண்டு. மூன்று சிற்பிகள் அச்சுக் கருகே உட்கார்ந்து கொள்ள, அவர்கள் நீர் வார்க்க கையேந்தி கவனமாக அச்சுக் களிமண்ணில் நீர் ஊற்றினார்கள். அச்சு கரும்புகையைக் கக்கியது. அடியில் மொத்த கம்பியைக் கொடுத்து மெல்ல அச்சைப் புரட்டிப்போட மறுபடி நீர் வார்க்கப்பட்டது.

“உடைத்து விடலாமா”

ரகசியமாக அவரது மகள் கேட்டாள்.

“உள்ளே நீண்ட இரும்புக்கம்பி கொடுத்திருக்கிறேன். அதைத் தட்டினால் அச்சு அப்படியே விலகி விடும் இன்னும் கொஞ்சம் குளிரட்டும்.”

“மறுபடியும் அதன் மீது நீர் வார்த்தாள். அவர் தொலைவில் இருந்தபடியே ஒரு அச்சை அவர்கள் நோண்டிக் கொண்டிருப்பது பார்த்து முகம் வேறு பக்கம் திருப்பிக் கொண்டார்.

"சிறு பொம்மைகள் செய்து கொள்ளட்டுமா." என்று அவர் மாப்பிள்ளை கேட்க, சரி என்று தலையசைக்க, ஒரு நீண்ட அச்சில் பல்வேறு பொம்மைக்கான உருவங்களைப் பதித்து கொஞ்சம் தெளிவற்ற கடைசிக் குழம்பை அதில் ஊற்றியிருந்தார்கள்.

இப்போது அச்சு உடைந்தால், அது என்ன என்று தெரிந்து விடும். அவை எப்படி வந்திருக்கின்றன என்பது புரிந்து விடும். அவருடைய வீட்டில் எல்லா அங்கத்தினர்களும் அந்த அச்சு உடைப்பதிலேயே ஆவலாக இருந்தார்கள். குறிப்பாய் அவருடைய மகள் அம்மங்கை பொம்மை அச்சு உடைப்பதில் மிக ஆவலாக இருந்தாள். அவள் புருஷனை உள்ளங்கையில் அமரக் கூடிய அளவுக்கு தவழக்கூடிய கிருஷ்ணர் பொம்மையைச் செய்யச் சொல்லியிருந்தார்கள்.

அம்மங்கையின் கணவர் கணபதி, ஒரு கையில் வெண்ணெய் ஏந்தி இன்னொரு கையைத் தரையில் ஊன்றி இரண்டு முழங் காலில் ஒன்றை இலேசாக மடித்து இந்தா என்று வெண்ணெ யைத் தரும் வண்ணம் ஒரு கிருஷ்ணரின் வடிவத்தைச் செய்து அவளிடம் காண்பித்தான்.

அவள் ஆச்சரியத்தில் மூழ்கிப் போனாள். அந்த சிறிய உருவத்தில் கிருஷ்ணருடைய பெரும் சிரிப்பும், வளைவான தொந்தியும், மெத்மெத்தென்ற பிருஷ்டமும், தொடையும், முழங் காலும், உள்ளங்கால் பாதமும் அற்புதமாக வந்திருந்தன. மண்ணில் செய்த மிகப்பெரிய வட்டிலில் நீர் நிரப்பி அந்த மெழுகு பொம்மையை இறக்கியிருந்தார்கள்.

நாலு விரல் உயரமும், பாதி உள்ளங்கை அகலமும் உள்ள அந்த தவழும் கிருஷ்ணர் பொம்மை அவள் வயிற்றை கிளறி விட்டது. குழைய வைத்தது. அவளுக்குப் பதின்மூன்று வயதில் திரு மணம். இப்பொழுது பதினேழு வயது. ஆயினும் பிள்ளைப்பேறு என்று எதுவும் நடக்கவேயில்லை. அம்மா கவலைப்படத் துவங்கினாள். அக்கம்பக்கத்தில் கேட்கத் துவங்கினார்கள். அவளுள்ளும் மெல்ல ஒரு வேதனை புகுந்தது. குழந்தை. பிறக் குமா, பிறக்காதா. தவறு என்மீதா இல்லை அவர் மீதா மருவூர் வைத்தியர் ஒருவர் நாடி பிடித்து உடனே சொல்லி விடுவார். அங்கு போங்கள் என்று வற்புறுத்தினர். அவள் போக பயந்தாள் தனக்கு அந்தத் தகுதி இல்லை என்று சொல்லிவிட்டால் அந்த வைத்தியர் முகத்திற்கு நேரே பளிச்சென்று சொல்பவராமே. அவர் எதிரிலேயே அவரைப்பற்றி பளிச்சென்று பேசிவிட்டால் அது குமைந்து போகுமே. உடைந்து போகுமே. உறவுகளினால்

தலை குனிந்து நிற்குமே. எனக்குக் குழந்தை வேண்டுமென்ற ஆத்திரத்திற்காக நான் அவருக்கு இந்த வேதனையைத் தரலாமா. கூடாது.

அவள் புருஷன் அழைத்தபோதும் போக மறுத்து விட்டாள். அவள் ஏன் வரமறுக்கிறாள் என்று புரியாமல் ஒருமுறை அவள் புருஷன் கோபித்துக் கொண்டான்.

"வரப்போறியா இல்ல, அடிச்சு மிதிச்சு கொன்னுடட்டுமா." என்று உரக்கக் கத்தி கை ஓங்கிய போது, சட்டென்று ஏதோ புரிபடத் திகைத்து நின்றான். யாரோ காதோரம் சொன்னது போல தீவிரமாய்" யோசித்தான்.

"என்னைத் தப்பா சொல்லிடுவாங்கன்னு பயந்து வரமாட்டேன்றியா." என்று கனிவாகக் கேட்டான்.

அவள் நொடிப்பொழுது 'ஆம்' என்று தலையை அசைத்து விட்டு உள்ளே போய் விட்டாள். அவன் பாசி வழுக்கி சேற்றில் விழுந்தது போல் திகைப்புற்றான். மனைவியைப் பற்றி நெகிழ்ந்தான். அவளை அடிக்கப் போனோமே என்று வெட்கப்பட்டான். மன்னிப்பு கேட்க வேண்டும் என்று பரபரத்தான். ஆனால், மன்னிப்பை வார்த்தையாக்கினால் அவள் மேலும் வெட்கப்படுவாள் விலகிப் போவாள். என்ன செய்வது என்று யோசித்தான்.

அவளை எது சந்தோஷப்படுத்தும் என்று யோசித்தான். அவனைப் பல பேர் பாராட்டினால் குறிப்பாக அவள் தந்தை பாராட்டினால் அவள் குதூகலமாகி விடுகிறாள் என்பதை தெரிந்து வைத்திருந்தான்.

வீட்டிலிருந்த தேன்மெழுகைப் பானையில் மாற்றிக் கொண்டு, தலையில் சுமந்து வெளியே போனான். எங்கே போகிறாய் என்று கேட்க பயந்தாள்.

அவள் வீட்டில், அவன் எங்கே போகிறான் என்று அவளை விசாரித்தார்கள். தெரியாது என்று சொன்னாள்.

"நல்லா குடித்தனம் பண்ற போ. புருஷன் எங்க போறான்னு தெரியாதா." என்று கடிந்து கொண்டார்கள்.

"அவனுக்கு முகம் வேற நல்லாயில்ல. சண்டையாடி.

அம்மா உரக்கக் கேட்டாள்.

அது நாலு பேர் காதில் விழுந்தது. அவளுக்கு வெட்கமாக இருந்தது. அவன் மீது கோபம் வந்தது. பல் கடித்தாள்.

“வா... வருவ. நீ வந்து கொஞ்சுவ இல்லே. அப்போ உன்னை அழ வைக்கிறேன் பார்’ என்று மனதில் கறுவிக் கொண்டாள்.

எங்கே போயிருப்பான் என்று மனத்தில் சிந்தித்தாள். ஒரே நாழிகையில் அவன் திருவெண்காடு கோவில் மண்டபத்தில் காலபைரவர் சன்னதியில் உட்கார்ந்து மெழுகு அழுத்திக் கொண்டிருப்பதாகச் செய்தி வந்தது.

‘என்ன. இங்க பண்ணா ஆவாதா. சோத்துக்கு வருவேயில்ல’ என்று பொருமினாள். ஆனால், உணவுக்கு வரவில்லை. உணவு நேரம் முடிந்த பிறகும் வரவில்லை. அவளுக்குப் பசி குடலைப் பிடுங்கியது. ஒரு சட்டி நிறைய சோறும், குழம்பும், தேங்காய் இட்ட வாழைக்காய்க் கறியும் தனித்தனியே எடுத்துக்கொண்டு கோவில் நோக்கிப் போனாள்.

திருவெண்காடு மிகப்பெரிய கோயில். மூன்று குளங்களுடைய கோவில் பிரகாரத்திற்குள் நடப்பதற்குள்ளேயே சுருண்டு விழுந்து விடுவோம் என்று தோன்றியது. எதனாலோ நேற்று இரவும் நன்றாகச் சாப்பிடவில்லை. ஏதேதோ சிந்தனையில் சட்டென்று கையலம்பி விட்டோம். இன்றைக்குக் காலையிலிருந்து ஒன்றும் தின்னவில்லை. இவன் வேறு அழிச்சாட்டியம் செய்கிறான் என்று வெதும்பிக் கொண்டே அவள் அவனிருக்குமிடம் போனாள். அவன் தேன்மெழுகைப் பதப்படுத்திக் கொண்டிருந்தான். உருட்டி உருட்டி அடித்துக் கொண்டிருந்தான். பின் பக்கத் தூணுக்குப் போய் மெல்லத் திரும்பினாள். அவன் திரும்பிப் பார்த்தான். பிறகு நிதானமாக வேலை செய்ய ஆரம்பித்தான்.

அவள் வருவாள் என்று அவனுக்குத் தெரியும். அவனுடைய பசியைக் காண அவள் பொறுக்க மாட்டாள்.

ஆனால் அவன் வரும்போது இரண்டு செப்புக் காசு கொடுத்து ஒரு முழுச் சாப்பாடு அனுப்பு என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

தேன் மெழுகை அடித்துப் பட்டையாக்கி துகள்கள் நீக்குகிற போது சாப்பாடு வந்து விட்டது.

கத்தரிக்காய் எண்ணெயிட்ட காரக் குழம்பு, பருப்புத் துவையல் பொரித்த கீரை. கருணைக்கிழங்கு மசியல் என்று கெட்டித் தயிரோடு அனுப்பியிருந்தார்கள்.

சாப்பிட்டு முடித்து மெல்ல சிறிதுநேரம் கண்மூடி அமர்ந்து விட்டு திரும்பவும் தேன்மெழுகை உருண்டையாக்க உட்கார

அவள் சோற்றுப் பானையோடு உட்கார்ந்து விட்டாள். மறுபடியும் திரும்பிப் பார்த்தான்.

அவள் சோர்வாக இருப்பது தெரிந்தது.

'அடடே... இவள் சாப்பிட்டிருக்க மாட்டாளே." என்று உறைத்தது.

இந்த நாடகதத்தை வேகமாக முடிக்க விரும்பினான்.

"உன் தொல்லை பொறுக்காமதான் இங்க வந்தேன்." இங்கேயும் வந்து தொல்லை பண்ணா எப்படி. போ..." என்று உரக்கக் கத்தினான்.

அவள் எட்டிப்பார்த்தாள். கண்களில் நீர் கட்டியது. சரக்கென்று அழுதாள்.

"இந்த அழுது பண்ற மாய்மாலமே வேணாம். வீட்டைப் பார்க்கப் போ."

பொய்யாய்ச் சீறினான்.

ஆனால், அவளுக்கு அது நிஜமாக இருந்தது.

அவள் ஒற்றை வரியில் அழைத்தாள்.

"முடியாது. எனக்குத் தேவையில்லை."

அவன் தொடர்ந்து கடுமை காட்டினான்.

"நான் என்ன சொல்லிட்டேன்னு இப்படி" அவள் முகம் பொத்தி அழத் துவங்கினாள்.

அவனுக்குள்ளே வேதனை பொங்கியது. போய்த் தலையைத் தடவி முகத்தில் முத்தமிட்டு இறுக்கி அணைத்துக் கொள்ள வேண்டுமென்று ஆசை வந்தது ஆனாலும் மௌனமாக உட்கார்ந் திருந்தான். தேன் மெழுகை அழுத்தி அழுத்திப் பிசைவதில் தீவிரம் காட்டினான்.

அவள் மறுபடியும் துவங்கினாள்.

"நான் என்னா சொல்லிட்டேன்னு இப்படி."

"இங்க வாடி"

அவன் அதட்ட, அவள் பயந்து அவன் எதிரே வந்து உட்கார்ந்து கொண்டாள்.

அடிப்பானோ என்ற மிரட்சி அவள் கண்களில் இருந்தது. அவன் முகத்தைச் சாதாரணமாக்கிக் கொண்டான்.

“உனக்கும், எனக்கும் நடுவுல ஒளிவு மறைவு ஏன். நீ பக்கத்துல படுத்துட்டு தூங்கும்போது காதோட காதா நான் ஏன் வரமாட்டேன்னு சொல்றேன்னா அப்படின்னு இதைச் சொல்லியிருக்கலாமில்லை.”

“இதைச் சொல்லணுமா. நீயா புரிஞ்சுக்க மாட்டியா.”

“அறிவு கெட்ட முண்டம். ஆம்பளைக்கு அவ்ளோ சூட்சுமம் கிடையாது. நேரடியா வாய் வார்த்தையா பேசினாதான் ஆம்பளைக்குப் புரியும். என் புத்தி முழுக்க தேன் மெழுகுலயும், பொம்மை பண்றதுலேயும் இருக்கே தவிர, நீங்க காட்ற சூட்சு மத்தைப் புரிஞ்சுக்கறதுல இல்லை. அது எனக்குத் தேவையில்லாத விஷயம் நல்ல பொண்டாட்டியா இருந்தா தனியா கூப்டு நான் ஏன் வரமாட்டேன். உன்னைத் தப்பா சொல்லிட்டாங்கன்னா எனக்கு வேதனைப்படும்னு சொல்லு. அவ்ளோதான். நான் அதுக்கேத்தபடி நடந்துக்க மாட்டேனா சரி, இப்போ சொல்றேன். நாம மருவூர் போயிட்டு வரது நல்லது.”

“ஏன், உன்னைத் தப்பா சொல்லிட்டாங்கன்னா. எனக்குக் க்ஷ்டம்.”

“நீயும் நானும் மருவூர் போறோம்னு சொல்லிட்டாப் போவோம். தஞ்சாவூர் போறோம், குடந்தை போறோம்னு சொல்லி மருவூர் வைத்தியர்கிட்ட போவோம். என்னான்னு தெரிஞ்சுக்குவோம். யாரையாவது கூட்டிகிட்டு போனா தானே இந்தப் பிரச்சினை அவரு நான் சரியில்லைன்னு சொன்னாலோ, நீ சரியில்லைன்னு சொன்னாலோ, சரின்னு ஒத்துகிட்டு வந்து தொடர்ந்து நாம குடித்தனத்தைப் பண்ணுவோம்.”

“நான் சரியில்லைன்னா நீ வேற கல்யாணம் பண்ணிக் கணும்.”

“கோயில்னு பார்க்காம ஒரே அடியில கொலை பண்ணிடு வேன் உன்னை. நிறுத்துடி.”

அவன் தேன் மெழுகை நசுக்க வைத்துக் கொண்டிருந்த கட்டையை ஓங்கினான். அவள் தலை குனிந்து கொண்டாள். மெல்லச் சிரித்தான்.

“சரி. அதை அப்புறம் பேசிக்குவோம். சாப்பிட வா.” சாப்பிட்டாகிவிட்டது என்று சொன்னால் மறுபடியும் சண்டை வந்துவிடும். சாப்பிட மாட்டாள். இன்று, முழுவதும்

கொலைப் பட்டினி இருப்பாள். இவளைச் சாப்பிடச் செய்ய வேண்டும். என்ன செய்வது.

அவன் சரியென்று தலையசைத்தான். கையலம்பினான். பசிக்குது சோறு போடு என்றான்.

அவள் இலையைப் போடுவதற்கு முன், "சீக்கிரம் போடுடி" என்று உரக்கக்கத்தி பல் கடித்தான்.

"அப்போ கோவிச்சுகிட்டு போன, இப்போ என்னவோ மிரட்டற"

"சோறு தின்னணுமில்ல வேளாவேளைக்கு." என்று அவன் பழிப்புக் காட்டினான். சோற்றை அள்ளி இலையில் வைத்தாள். வாழைக்காய் கறியைச் சரித்தாள். குழம்பு ஊற்றினாள்.

அந்த மூன்றும் பார்த்தபோது அவனுக்கு மறுபடியும் பசித்தது. குழம்பு பிசைந்து நன்றாகச் சாப்பிட்டான். வாழைக்காய் கறியைச் சாப்பிடச் சாப்பிட ருசியாக இருந்தது.

"ஏய். நீ சாப்டியா" என்று பதிலுக்குக் கேட்டான்.

"ஆச்சு" என்றாள்.

"என்ன ஆச்சு. நான் சாப்பிடாத நீ என்னிக்கு சாப்பிட்டிருப்ப. இரு. இன்னும் சோறு போடு" என்று சோற்றுப் பானையை அருகில் இழுத்தான் அதைக் கவிழ்த்தான்.

அதில் குழம்பு ஊற்றினான். அவன், தான் சாப்பிடத்தான் ஆசையாக இருக்கிறானென்று அவள் கறி வைக்க, அவளை இழுத்து எதிரே உட்கார வைக்க, இதை நீ சாப்பிடு என்று அவளிடம் காட்டினான். அவள் சுற்றும் முற்றும் பார்த்தாள். கோவில் வெறிச்சோடி இருந்தது. மெல்லப் பிசைந்து சோறு சாப்பிட்டாள். விக்கினாள். அவன் தலையில் தட்டினான். நீர்க்குவளையை நீட்டினான். அவள் நீர் குடித்துவிட்டு வேகமாக குழம்பு சாதத்தைப் பிசைந்து பிசைந்து சாப்பிட்டாள். அவன் வெறுமே கை வைத்து அவள் சாப்பிடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"ஏம்பா. நீ சாப்பிடலை."

அவள் ஆதுரத்தோடு கேட்டாள்.

"எனக்கு போதும். வயிறு நிறைஞ்சுடுச்சு. நீ சாப்பிடு."

ரெண்டு சாப்பாடு சாப்பிட்ட சந்தோஷத்தில் தள்ளாடி வந்தான். தன் கைச் சோற்றினால் தான் அவன் அப்படி நடக்கி

றான் என்று அவள் சந்தோஷமடைந்தாள். இன்னும் வேகமாகச் சாப்பிட்டாள். இலையை மடித்து கன்றுக்குட்டியிடம் போட்டாள். கையலம்பினாள். முகம் துடைத்துக் கொண்டாள். மடியிலிருந்து வெற்றிலையும், பாக்கையும் எடுத்து ஒரு கட்டை வாங்கி பாக்கை உடைத்து அவனிடம் நீட்டினாள். அவன் வாயில் போட்டுக் கொண்டான். அவளும் வெற்றிலை போட்டுக் கொண்டாள்.

"நிஜமாகவே மருவூர் போகலான்றியா."

"ஆமாம், நிஜமாகவே போகலாம். இந்தக் காரணம்னு சொல்லாத கும்பகோணம் நாகநாத சுவாமி கோயிலுக்குப் போறதா சொல்லிட்டு திருவலஞ்சுழியில நம்ம உறவுக்காரங்க இருக்காங்க அவங்களப் பார்க்கலாம்னு சொல்லிட்டுப் போனா என்ன."

"திருவலஞ்சுழி போனோம்னா நம்மள பத்துப்பேர் சுத்திப் பாங்க. நானும் வரேன். நானும் வரேன்று அவர் வீட்டுக்குக் கிளம்பிடு வாங்க. எனக்கு மூட்டுவலி, நெஞ்சுவலின்னு நம்மள சாக்கு வச்சு பின்னாடி வருவாங்க. அதுக்குத்தான் நான் என்ன சொல்றேன்னா" என்று அடிக்குரலில் பேசத் துவங்கினாள்.

"உன் தகப்பனாரிடம் மட்டும் மிக ரகசியமாக இதைச் சொல். உன் தாயாரிடமும் இதைச் சொல்லாதே. மற்றபடிக்கு சுவாமி தரிசனம் செய்யவும். என் உறவுக் காரர்களைப் பார்க்கப் போவதாகவும் சொல்லிவிடு."

"நாம் எப்படிப் போகப் போகிறோம்."

"நடந்துதான்."

"மாட்டு வண்டியில் போனால் என்ன."

"மாட்டு வண்டியில் போனால் வண்டியில் இடமிருக்கிறதே, ஏறிக்கொள்கிறேன் என்று அங்கேயே யாராவது வரத்துவங்கு வார்கள். நானும் வருகிறேன் என்று லஜ்ஜையில்லாமல் பேசு வார்கள். நம் தனிமையைப்பற்றி அவர்களுக்கு அக்கறையில்லை. அப்படியெல்லாம் ஆணும், பெண்ணும் தனியாக இருந்துவிடக் கூடாதென்றும், தனியே பயணப்படக் கூடாதென்றும் சொல்கிற வர்கள்தான் இவர்கள்."

"எனக்கு நம்பிக்கை இல்லை. இவர்கள் நம்மை அனுமதிப் பார்கள் என்று"

"இவர்கள் என்ன அனுமதிப்பது. நாம் போகிறோம். உன் தந்தை சரியென்று சொன்னால் மட்டும் போதுமானது. அவரை மீற என்னால் முடியாது" என்று அவன் சொன்னதும், அவள் அவனையே உற்றுப் பார்த்தாள்.

அவளுக்குச் சந்தோஷமாக இருந்தது. அவள் தந்தைமீது அவனுக்கு மிகப்பெரிய மதிப்பு இருந்தது. அதே மதிப்பு தன் புருஷனிடம் தந்தை வைத்திருக்கிறார் என்றும், அவளுக்கு உடம்பில் ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது. மிகப்பிரியத்தோடு அவன் தலையைத் தடவி விட்டாள். எழும்பி அவன் உதடடில் முத்த மிட்டாள்.

"நான் பேசிக்கொள்கிறேன். நான் காரணம் சொல்கிறேன்" என்று அவள் காதோரம் கிசுகிசுத்தான்.

அவன் சொன்னவுடன் அவள் தந்தை யோசித்தார். ஒரு கால் நாழிகை பொறுத்து வந்து கேள். இப்பொழுது உடனே பதில் கேட்காதே என்று அவனைப் புறந்தள்ளினார். அவனை வெகு நாழிகைக்குப் பிறகு அருகே அழைத்தார்.

"நீங்கள் இரண்டு பேருமே போக வேண்டுமென்று ஆசைப்படுவது எனக்குப் பிடித்திருக்கிறது. சந்தோஷம்தான். ஆனால், எவ்வளவு தூரம் நடப்பீர்கள். ஏன் அப்படி நடக்க வேண்டும். வண்டி ஏற்பாடு செய்கிறேன்."

"இல்லை. அப்பா...

அவள் ஆட்சேபனை சொல்லத் துவங்க அவர் கையமர்த் தினார்.

"இங்கிருந்து வண்டியில் போனால் பின்னால் நிச்சயம் தொடருவார்கள் என்று எனக்குத் தெரியும். அடுத்த ஊலிருந்து வண்டி கிளம்பும், வழியில் எந்த பயமுமில்லை எனினும் உங்களுக் குத் துணையாக இரண்டு மறவர்கள் வருவார்கள். ஒருவர் வண்டி ஓட்ட, ஒருவர் வண்டியைப் பின் தொடர்ந்து ஓடி வருவார். கீழைச் சாளுக்கியத்திலிருந்து கொண்டு வந்த உயரமான எருதுகள் பூட்டிய வண்டி ஏற்பாடு செய்கிறேன்.

அதை யாரிடமிருந்து வாடகைக்கு எடுப்பது என்று எனக்குத் தெரியும். நான் ஏற்பாடுகள் செய்துவிட்டுச் சொல்லியனுப்பு கிறேன். பிறகு நீங்கள் வந்தால் போதும். ஆனால், மருவூர் வைத்தியர் என்ன சொல்கிறார் என்று எதையும் மறைக்காமல் என்னிடம் சொல்ல வேண்டும். இது மட்டுமே என் கோரிக்கை."

என்று மிருதுவாகச் சொல்ல, அவன் சரியென்று தலை யசைத்தான்.

தேன் மெழுகைப் பதப்படுத்தி அவன் மாடும், கன்றுமாக காமதேனு சிலையைச் செய்தான். ஒரு சாண், மூன்று விரற்கடை நீளம். பத்து விரற்கடை உயரம், அந்த மெழுகிலேயே புடைப்புச் சிற்பமாக சிவனையும், லக்ஷ்மியையும், பிரம்மாவையும், முனிவர்களையும், இந்திரனையும், அங்கங்கே வரைய, அது காமதேனுச் சிலையாக உருவெடுத்தது. கிளம்புகிற நாளுக்கு முதல்நாள் மாலை அவள் அப்பா வந்தபோது அந்தச் சிலையை அவன் காட்டினான்.

அவர் கத்தியை எடுத்து சில திருத்தங்கள் செய்தார். கொம்பு உயரம் அதிகம். பசுவின் கொம்பு இவ்வளவு அதிகம் இருத்தல் கூடாது. கொம்பு உயர பசு முரடாகி விடும். காமதேனு சாது வான பசு. அதன் மீது சிவன் வாசம் செய்கிறார். இருப்பினும் நெத்திச்சுட்டி அணிவித்து விடு. கழுத்தில் நவரத்தின மாலை செய்வதற்காக ஒரு அமைப்பு ஏற்படுத்து. இந்தப் பக்கம் நாலு. அந்தப் பக்கம் நாலு என்று கழுத்தைச் சுற்றியுள்ள வளையத்தில் குழிகள் ஏற்படுத்து. நடுவே ஒரு ஊசலாட்டமாக முத்து தொங்கட்டும். நவரத்னங்கள் தரித்த காமதேனு என்று தனித்த புகழோடு இது விளங்கும்."

"நன்றாக இருக்கிறதா மாமா."

அவன் தயங்கிக் கேட்டான்.

"உனக்கு என் பெண்ணைக் கொடுத்தது உன் அழகு கருதியோ, உன் அந்தஸ்து கருதியோ, உன்னுடைய குடும்ப பாரம் பரியம் கருதியோ அல்ல. உன்னுடைய கைத்திறமையைக் கண்டு மயங்கித்தான் என் பெண்ணைக் கொடுத்தேன். அந்தத் திறமை யெல்லாம் காணாமல் போய்விடக்கூடாது. இதற்கு ஒரு நல்ல வாரிசு வேண்டுமென்றும் ஏங்குகிறேன். அதனால்தான் என் மகள் நீ கூறிய திட்டத்தைச் சொன்னதும் சம்மதித்தேன். நீ அற்புதமான கலைஞன். கவலைப்படாமல் போய்வா. திருவெண் காடு காலபைரவர் துணையிருப்பார். மருவூர் மாயா உங்களை வரவேற்பாள்."

அவர் அவர்களை வழியனுப்பி வைத்தார். நானும் வருகிறேன் என்று கிளம்பிய இரண்டு, மூன்று பேரை ஒரே அதட்டலில் நிறுத்தினார். அவர்கள் நடந்து போவதாக ஊருக்குச் சொல்லிவிட்டு அடுத்த ஊருக்குப் போனார்கள். அங்கு வில்

வைத்த மூடி போட்ட அற்புதமான மாட்டு வண்டி இருந்தது. காளைகள் திமிறியிருந்தன. பணிவான மறவர்கள் இருந்தார்கள்.

வண்டிக்குக் கீழே புல்போட்டு அதன் மீது மெத்தை போட்டு அதன் மீது வெள்ளைத் துணி விரித்து வண்டி பிரகாசமாக இருந்தது. குலுக்கலே தெரியாமல் ஓடிற்று. அவள் குதூகலத்தோடு கணவனுடைய கைகளைப் பிடித்துக் கொண்டாள். பாட்டுப் பாடினான் அவளும் பாடினாள். மறவர்கள்அவர்களோடு அதிகம் கலந்து கொள்ளாமல் வண்டி ஓட்டுவதிலேயே கூர்மை யாக இருந்தார்கள். விலகி நின்று பாதுகாத்தார்கள்.

கோவில் தரிசனம் முடிந்து புருஷனும், மனைவியும் ஒரு சத்திரத்தில் தங்கினார்கள். பிரயாணக் களைப்பால் விடிந்து வெகுநேரம் வரை அயர்ந்து தூங்கினார்கள். சத்திரத்திலேயே உணவருந்தினார்கள். வெயில் தாழ மறுபடியும் ஊர் விட்டுக் கிளம்பினார்கள். வழியில் பல தலங்களைத் தரிசித்துக் கொண்டு குடந்தை வந்தடைந்தார்கள். மூன்று நாட்கள் ஒரு வீட்டில் தங்கி கோவில் கோவிலாக ஏறி இறங்கினார்கள். அந்த வீட்டாரின் மகள்அப்பொழுதுதான் புக்ககம் போயிருந்தாள். எனவே, அம் மங்கையைத் தன் மகளாக நினைத்து சீராட்டிக் கொண்டா டினார். பட்சணங்களோடு வழியனுப்பி வைத்தார்கள். ஒரு பொற் காசு கொடுக்க முன் வந்தபோது வாங்க மாட்டேன் என்றார்கள்.

“உங்களிடம் நிஜமாக ஏதேனும் இருக்க வேண்டுமல்லவா.”

அவன் குடந்தையின் காவேரிக்கரைக்குப் போய் ஒரு பொற்காசுக்குப் பசுவும், கன்றுமாக வாங்கி வந்து. புல்லுக்கட்டும் சுமந்து வந்து அவர்கள் வீட்டு வாசலில் கட்டினான்.

அவர்கள் நெகிழ்ந்து போனார்கள்.

“எதை மறுக்க முடியாதோ அதைக் கொடுத்து விட்டுப் போகிறாய். வீட்டிற்கு வந்த லட்சுமியை நான் வேண்டாமென்று எப்படிச் சொல்வேன், மிகவும் களையான பசு. நாங்களே வாங்க வேண்டும் என்று விரும்பினோம். என் மரணபரியந்தமும் உன் நினைவு இருக்கும். இவள்நினைவு இருக்கும்” என்று வீட்டுக்காரர் நெகிழ்ந்து போனார்.

“அந்த வீட்டு அம்மாள் நெய் விளக்குக் கொண்டு வந்து. பசுவுக்குகாட்டி, அவனையே கொண்டு வந்து வீட்டுக் கூடத்தில் விடச் சொன்னாள். வீட்டுக் கூடத்தில் வந்து நின்ற பசு சிறுநீர் கழித்தது. சிறுநீரைத் தொட்டு எல்லோரும் தலையில் தரித்துக் கொண்டார்கள். மிகுந்த, சந்தோஷமடைந்தார்கள்.

குடந்தையிலிருந்து பாபநாசம் வந்தார்கள். பாபநாசத்திலிருந்து சுந்தர சோழ விண்ணகரம் அடைந்தார்கள். அங்கும் சுவாமி தரிசனம் செய்தார்கள். உடம்பு முழுவதும் விபூதி மணந்தது. சந்தனம் கமகமத்தது. பிறகு நல்லூர் வந்தார்கள். நல்லூர் சிவன் கோவிலைப் பஞ்சவன்மாதேவிச்சுரம் என்று அந்த ஊர் மக்கள் அழைத்தார்கள்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரின் நான்காவதுமனைவி பஞ்சவன் மாதேவி. அந்த நல்லூர்ச் சிவன் கோயிலுக்குபல நிவந்தங்கள் கொடுத்திருக்கிறாராம் திருமணம் முடித்து அரண்மனைக்கு வந்து. அங்கு அவர் செல்வாக்கு அதிகரிப்பதைப் பார்த்து மற்றுமுள்ளோர் கவலைப்பட, மெல்லியதாய் பொறாமைப்பட, இவர் மனச்சாந்திக்காக நல்லூர் வருவார் என்று சொல்லப்பட்டது.

அரசருக்குப் பிறந்த இராஜேந்திரருக்குப் பாதி சோழ தேசமும், ஒரு வேளை இவருக்குஆண்குழந்தை பிறந்தால் அந்தக் குழந்தைக்குப் பாதி சோழ தேசமும் பிரித்துக் கொடுக்கப்படும் என்று ஜோசியர்கள் சொல்ல, இதனால் அதிகாரிகள் கவலைப்பட, எதிரிகள் கொக்கரிக்க சோழ தேசம் துண்டு படும் என்று பலரும் உறுதியாய் இருக்க, நல்லூர் சிவனைப் பார்த்து வேண்டிக்கொண்டு தன்னுடைய கருப்பையின் பாதையைக் குழந்தை பெறாத வண்ணம் மாற்றி விட்டாராம்.

நீ என் குழந்தை. உனக்கெதற்குக் குழந்தை என்று இறைவன் இங்கே கேட்டதாக ஒரு பேச்சு இருக்கிறது. தன்னை நல்வழிப்படுத்திய நல்லூர் சிவன் பஞ்சவன் மாதேவியை இறுக்கப் பிடித்திருக்கிறார் என்றும் சொல்லப்படுகிறது.

"நீங்கள் யார்."

நல்லூர் சிவன் கோவிலில் விசாரித்தார்கள்.

அவன் விஷயம் சொன்னான். தன்மாமனாரின் பெயரைச் சொன்னான்.

"அப்படியா, அவர் மருமகனா. உனக்கு வேலை தெரியுமா." என்று கேட்டார்கள்.

"ஏதோ தெரியும்"என்று சொன்னான்.

"ஒரு நாதாங்கி செய்ய வேண்டும். பித்தளை நாதாங்கி உடைந்து விட்டது. கருவறைக் கதவு சார்த்த முடியாமல் கிடக்கிறது" என்று சொன்னார்கள்.

அவன் கருவறைக் கதவை சோதித்துப் பார்த்தான். நாதாங்கி செய்தபோது உள்ளுக்குள் கொப்புளம் தங்கி விட்டது. அதனால் அந்த இடம் பலவீனப்பட்டு அந்த இடம் உடைந்து விட்டது.

“இதையே உருக்கி வேறு விஷயம் செய்து விடுகிறேன்”என்று சொல்லி அளவெடுத்துக் கொண்டான். மெழுகு வேண்டுமென்று கேட்டான். பதினைந்து நாழிகையில் மெழுகு அச்சு தயார் செய்தான். தண்ணீரில் நனைய வைத்தான்.

அந்த கிராமத்தைச் சேர்ந்த வேறு ஒரு உலோக ஆச்சாரி களிமண் கலவையைத் தயார் செய்ய, அவள் வேறு அச்சுகள் தயார் செய்ய ஆரம்பித்தான். அவன் கொண்டையுடன்கூடிய கிளி பொம்மை செய்தாள். அவன் தன்னுடைய சார்பாக அடுக்கு தீபம் கொடுக்க விரும்பினான். இலை இலையாய் அகல் விளக்கு மடமடவென்று செய்தான். மொத்தம் நாற்பத்தோரு அகல் விளக்குகள் இருக்கும்படி பார்த்துக் கொண்டான். பிறகு தண்டுகள் செய்தான். செய்த மெழுகு பொம்மையைக் களி மண்ணால் மூடினான். அது ஒரு நாள் வேலையாயிற்று.

அதற்குள் நல்லூர் கிராமத்து மக்கள் சூழ்ந்து கொண்டு அவனை உற்சாகமூட்டினார்கள். நிறைய கோவில் சாமான் களையே மறுபடியும் உருக்குவதற்காக எடுத்துக் கொண்டான். ஊர் ஓடி வந்து சிறு சிறு பித்தளை விஷயங்களைக் கொடுத்தது. உடைத்து நசுக்கி மறுநாள் உலையில் ஏற்றி இரும்புச் சட்டியை மேல் வைத்து அச்சுக்களைக் கடைசி முயற்சியாகச் சரி பார்த்து பதம் வரும் வரை காத்திருந்து கணபதியும் அம்மங்கையும் அச்சு தூக்கிக் கொண்டு ஓடினார்கள். உருகுகின்ற பித்தளைக் குழம்பை இரும்புச் சட்டியில் ஏந்தி தோளில் தூக்கிக் கொண்டு ஓடுகிற பெண்ணை எல்லோரும் வியப்போடு பார்த்தார்கள். மிகக் கவன மாக அவர்கள் ஊற்றுவதைக் கண்டு சுற்றி சுற்றி வந்தார்கள்.

நல்ல அச்சு ஊற்றி முடித்து வண்டலைத் தரையில் கொட்டிவிட்டு, இரும்புச்சட்டியை நீரூற்றி குளிர வைத்தாள்.

ஈரமாக இருந்த களிமண் சற்று வெடித்து அவன் புறங்கையில் தெறித்திருந்தது. அதற்கு ஊர் மக்கள் களிம்பு தடவினார்கள். குளிக்கப் போகும்போது பெண்கள் சூழ்ந்து கொண்டு அவனை விதம்விதமாகக் கேள்வி கேட்டார்கள்.

அவன் தண்டுகளை இறுக்கி பொடி வைத்துப் பற்ற வைத் தான். அங்கங்கே அகல் விளக்குகளை வைத்தான். முழங்கால் உயர அந்த அடுக்கு தீபம் பார்த்து எல்லோரும் பரவசப்பட் டார்கள். கையில் தூக்கிச் சுற்ற முடியுமா என்று கேட்டபோது,

எப்படிச் சுற்ற வேண்டும் என்று அவன் தூக்கிப் பிடித்துக் காட்டினான். அதை மாலை வரை புருஷனும், மனைவியும் உட்கார்ந்து மெருகு ஏற்றினார்கள்.

அவள் கிளியைத் தங்கக் கிளிபோல் பளபளபாக்கிக் கொடுத்தாள். ஏற்கனவே இருந்த அம்பாள் சிலையில் அந்தக் கிளியை உட்கார வைத்த போது மிகச்சரியாகப் பொருந்தியது. பாண்டிய தேசத்திலுள்ள மதுரையில் மீனாட்சி என்கிற அம்பாளின் கையில் கிளிஇருக்குமாம் என்று சொல்ல, நாம் அப்படி வைக்கலாமா என்று கேட்க, அம்பாளுக்குப் பாண்டிய தேசமாவது, சோழ தேசமாவது எல்லாம் ஒன்றுதான். வையுங்கள்ளய்யா என்று கட்டளையிட்டார்கள். அன்று ஊர் முழுவதும் கூடியிருக்க அவனை முன்னால் நிற்க வைத்து எல்லா அகல் விளக்குக்கும் நெய் போட்டு, திரி போட்டு ஏற்றி நல்லூர் சிவனுக்குக் காட்டினார்கள்.

ஊர், தென்னாடுடைய சிவனே போற்றி என்று பிளிறியது.

கூலி வாங்கிக் கொள் என்று கெஞ்சியபோது, இல்லை இது என்னுடைய நினைவாக உங்கள் கோவிலுக்கு என்று அவன் மறுத்து விட்டான்.

ஊர் என்ன அநியாயம் இது என்று முனகியது. சந்தோஷப்பட்டது. மறுநாள் தங்கச் சொல்லி விருந்து கொடுத்து உபசரித்து அவளுக்குப் புடைவையும், அவனுக்கு வேட்டியும், மேல் துண்டும் தட்டில் வைத்துக் கொடுத்தது. மாட்டு வண்டியில் வாழைப்பழத் தார் ஒன்றனை ஏற்றி வைத்தது.

சின்னச் சின்னதான பூவன்பழம் தேனில் தோய்த்தது போல இனித்தது. போகும் வழியில் மறவர்களுக்குப் பிய்த்துக் கொடுக்க அவர்கள் உற்சாகமடைந்தார்கள்.

எந்த ஊரிலும் இப்படியொரு சாப்பாடு சாப்பிட்டதில்லை ஒரு வீட்டில் சாப்பிட கொஞ்ச நேரத்திலெல்லாம், இன்னொரு வீட்டில் சாப்பிடக் கூப்பிடுவார்கள்.

"உங்களுக்கு வண்டி ஓட்டுகிறோம். உங்களுக்குத் துணையாக வருகிறோம் என்றதும் எங்களுக்கு மிகப் பெரிய மரியாதை ராஜ குடும்பத்திற்குப் பாதுகாப்பாக போகும்போது கூட இத்தகைய மரியாதையை நாங்கள் அனுபவித்ததில்லை எங்களுக்குப் புரிந்து விட்டது." இனிமேல் கலைஞர்கள் காலம்தான்"

"அடேயப்பா...என்ன மரியாதை. என்ன மதிப்பு நீங்களும் அற்புதம் காட்டுகிறீர்கள். சமைக்கத் தெரிந்த ஒரு சிறு பெண்

என்று நான் உங்களை நினைத்திருந்தேன். அதிகப்படசமாய் வாசலில் கோலம் போடுவீர்கள் என்று கருதியிருந்தேன். எவ்வளவு அழகாகக் கிளி செய்தீர்கள். பித்தளையை உருக்கி ஊற்றியதும் அந்தக்கிளி எப்படி பளபளப்பாய் வெளியே வந்தது!

அரசர் கோயில் கட்ட ஆரம்பித்து விட்டாராம். அப்படியென்றால் உங்களுக்கெல்லாம் நிரம்ப வேலையிருக்கும். உங்களுக்கு நிரம்ப வேலை வந்து நீங்கள் செல்வம் கொழித்தால், எங்களை வேலைக்கு வைத்துக்கொள்ள மாட்டீர்களா.

பாதுகாப்பாக எப்பேதும் உங்களோடேயே இருந்து விடலாம் என்று தோன்றுகிறது. ஆடு காவல், மாடு காவல், கோவில் காவல், அரண்மனைக் காவல் என்றெல்லாம் அவஸ்தைப் படுவதைவிட தனிப்பட்டோருக்கு ஆயுதம் ஏந்தி காவல் காப்பது எளிதானது. இதமானது எங்கள் சேவையில் உங்களுக்கொன்றும் குறையில்லையே. உங்கள் தந்தையிடம் சொல்லி எங்கள் இருவரையும் வேலைக்கு வைத்துக் கொள்ளுங்கள். நாங்கள் குடும்பத்தோடு உங்கள் வீடு நோக்கிக் குடிபெயர்ந்து விடுகிறோம்."

ஒரு மத்திம வயது ஆள் உற்சாகத்தோடு சொன்னான்.

அவர்கள் சிரித்தபடி கேட்டுக் கொண்டார்கள்.

நல்லூரிலிருந்து திருவலஞ்சுழி திருவலஞ்சுழியிலிருந்து திருப்பூந்துருத்தி. திருப்பூந்துருத்தியிலிருந்து திருக்காட்டுப்பள்ளி திருக்காட்டுப்பள்ளியிலிருந்து மருவூர்.

மருவூர் சிறிய கிராமம். ஆனால், எதிரும் புதிருமாய் ஓடுகள் வேய்ந்த கல் கட்டிடங்கள் அதிகமிருந்தன. அகரஹாரத்தையும், வேளாளர் குடியிருப்பையும் இணைக்கும் ஒரு தெருவில் வைத்தியர் இருந்தார். அவர் வீட்டு வாசலில் கையில் கதையோடு ஒரு சிவகணம் போல் ஒரு உருவம் வரையப்பட்டு, கீழே மருவூர் சாம்பான் என்று எழுதப்பட்டிருந்தது.

புருஷனும், மனைவியும் இதையே பார்த்துக் கொண்டிருக்க வைத்தியர் வரவேற்றார். மருவூர் சாம்பான் கிராமத்து தேவதை என்று சொன்னார். மருவூர் மாயா அக்கம்பக்கமுள்ள எல்லா கிராமங்களுக்கும் உண்டான அதிதேவதை என்று விளக்கினார். வந்த காரியத்தைக் கேட்டார்.

"திரு வெண்காட்டிலிருந்தா இங்கு வருகிறீர்கள். வழியே பல ஊர்கள் பார்த்திருப்பீர்கள். எல்லா ஊர்களிலும் சிறந்த வைத்தியர்கள் இருக்கிறார்களே இங்கு வரச் சொன்னது யார்."

"என் அத்தை ஒருத்திக்கு பிள்ளைப்பேறு. சம்பந்தமாக ஒரு பிரச்சினை இருந்தது."

அதை நீங்கள் எளிதாகத் தீர்த்தீர்கள் என்று என்று வீட்டிலுள்ளோர் சொல்வதுண்டு. என் அத்தையோடு இந்த வீட்டிற்கு நான் மூன்று. நான்கு முறை சிறு பையனாக இருந்த போது வந்திருக்கிறேன். பிள்ளைப் பேறு இல்லையென்று அத்தையினுடைய வாழ்க்கை கேள்விக்குறியாக இருந்தது. விலக்கி வைத்து விடுவார். வேறு திருமணம் செய்து விடுவார் என்றெல்லாம் பேசப்பட்டபோது, நீங்கள் மருந்து கொடுத்து அத்தையினுடைய வயிற்று வலியையும் சரிசெய்து, அவளுக்குக் குழந்தைப்பேறு ஏற்படுவதற்கும் மருந்து கொடுத்தீர்கள். உங்களைத்தான் தெய்வம் என்று அத்தை இன்னமும் கொண்டாடிக் கொண்டிருக்கிறார். அவர் மகனுக்குப் பதினோரு வயது. துடிப்பான பயலாக இருக்கிறான்."

"வைத்தியர் சிரித்தார்.

"மனிதர்கள் என்ன செய்துவிட முடியும். நோய் வருவதும் இறைவனுடைய ஆணை, நோய் தீர்வதும் இறைவனுடைய ஆணை. வைத்தியன் என்போன் ஒரு கருவிதான். வைத்தியனைத் தெய்வம் என்று கொண்டாடுவது, பெண்ணைத் தேவதை என்று சொல்வது போல, ஒரு உணர்ச்சிப் பிரவாகம்தான் அதீதமான பாராட்டுதான். சொல்லுங்கள் உங்கள் பிரச்சினை என்ன."

அவர்கள் இரண்டு பேரும் வெட்கப்பட்டார்கள்.

கணபதி மறுபடியும் பேசத் துவங்கினான்.

"திருமணமாகி ஐந்து வருடங்களாகக் குழந்தை. இல்லை" என்று சொன்னான்.

"அடேய், இதற்கா ஓடி வந்தீர்கள். உங்கள் இருவருக்கும் என்ன முப்பது நாற்பது வயதாகி விட்டதா. அவளுக்கு பதினேழு வயது. உனக்கு இருபத்திரண்டு வயது. இன்னும் பல காலம் இருக்கிறதய்யா."

"நான். அவ்விதம் எண்ணவில்லை. எனக்கு விரைவில் ஒரு மகன் பிறக்க, அவனுக்கு என்னுடைய வேலைகளைக் கற்றுக் கொடுத்து என்னிலும் பெரிய சிற்பியாக்க வேண்டும். சோழ தேசத்தில் இன்று இருக்கின்ற சூழ்நிலைக்குச் சிற்பியாக இருப்பது மிகப் பெரிய சிறப்பைக் கொடுக்கும். நல்ல கோயில்களுக்கு நல்லவிதமான சிலைகள் செய்ய. அவன் கற்றுக் கொள்ள வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். மூன்று நான்கு பையன்

பிறந்தால் அத்தனை பேரையும், மிகச் சிறந்த உலோகச் சிற்பியாக மாற்றுவேன். கடைந்தெடுத்த ஆச்சாரிகளாகச் செய்வேன். ஒரு குலம் தழைக்கும். குடும்பம் விளங்கும்”

குரல் கம்மச் சொன்னான். முடிக்கும்போது அவன் கண் களில் நீர் தங்கி சரக்கென்று கன்னம் வழிந்து விட்டது. மெல்ல அம்மங்கை அவனுக்கருகே போய் அவன் முதுகு தடவினாள்.

“இதற்காக எந்தத் துன்பத்தையும் சகித்துக் கொள்ளத் தயாராக இருக்கிறோம்” என்று வைத்தியரிடம் சொன்னாள்.

“சர்வேஸ்வரா இது என்ன பேச்சு. இதற்காகத் தலையில் பாறாங்கல்லை வைத்து நடக்கவா சொல்வார்கள். உணர்ச்சி வசப்பட்டிருக்கிறீர்கள். இரண்டு பேரும் சற்று ஓய்வாக உட்காருங்கள்.”

அவர் பால் கொண்டு வரப்போக, இவன் மீதமிருந்த வாழைப்பழச் சீப்புகளை அடுக்கி அதிலே வெற்றிலையும், பாக்கும் வைத்து அதன்மீது மூன்று பொற்காசுகளையும் வைத் தான். திரும்பி வந்தவர் பொற்காசுகளைப் பார்த்தார்.

“எதற்கு இவ்வளவு? நான் சில செப்புக்காசுகள் தான் வாங்கு வேன்.”

“இல்லை ஐயா. உங்களைப் போன்றவர்கள் வளமாகவும், பலமாகவும் இருக்க வேண்டும் எந்தக் கவலையும் இல்லாமல் இருக்க வேண்டும். அதன் பொருட்டே உங்களுக்கு மனமுவந்து கொடுக்கிறோம்.”

“நல்ல பேச்சு. நல்ல சிந்தனை. எனக்கு ஒரு காசு போதும்.”

“இல்லை. மூன்றும் வைத்துக் கொள்ளுங்கள். யாரேனும் முடியாதவர்கள் வந்தால் அவர்களுக்கு இலவசமாக எங்கள் பெயர் சொல்லி வைத்தியம் சொல்லுங்கள். பெயரை நீங்கள் உரக்கக்கூடச் சொல்ல வேண்டாம். மனசுக்குள் சொன்னால் போதும். அந்தப் புண்ணியம் எங்களை வந்து சேர்ந்துவிடும்.”

“நான் பல பேருக்கு இலவசமாக வைத்தியம் செய்கிறேன். எப்படித் தெரியுமா. உன்னைப்போல நல்ல மனிதர்கள் பலபேர் வருகிறார்கள். அவர்களெல்லாம் ஒரு செப்புக்காசு கொடுக்க வேண்டிய இடத்தில் பத்து செப்புக்காசுகள் கொடுத்துவிட்டுப் போகிறார்கள். அதைத்தவிர அதிகாரிகள் உதவி செய்கிறார்கள். அரச குடும்பத்தினர் உதவி செய்கிறார்கள். சோழதேசத்தில் இந்த நேரத்தில் எந்தக் கவலையும் இல்லையப்பா. நல்ல ஆட்கள்

இல்லாமல்தான் கொஞ்சம் அலைக் கழிப்பாய் இருக்கிறது பாண்டிய தேசத்தின் ஊடாக நடந்து போய் சேர தேசத்திலுள்ள எல்லைகளிலுள்ள மலைகளில் ஏறி, காய்களும், கனிகளும், மரப் பட்டைகளும், இலைகளும் பறித்துக் கொண்டு வருவதற்குத்தான் சரியான ஆட்கள் இல்லை. மறுபடியும் இரண்டு வாலிபர்களைத் தயார் செய்து அனுப்பியிருக்கிறேன். ஒரு நடை போய் விட்டு வந்து நல்ல மூலிகைகள் கொண்டு வந்து கொடுத்திருக்கிறார்கள். பால் குடித்து ஆசுவாசப்படுத்திக் கொள்ளுங்கள்." சொல்லிவிட்டு எதிரே உட்கார்ந்தார். வெற்றிலை போடத்துவங்கினார்.

"ஐயா, சோழதேசம் எப்படி இருக்கிறது."

"நீதான் சொல்ல வேண்டும், ஊர் ஊராக நீதான் போய் வந்திருக்கிறாய்."

"நான் எங்கோ திருவெண்காட்டில் இருக்கிறேன். ஒவ்வொரு ஊரிலும் அரைநாள், ஒரு நாள் தங்கினேன் தஞ்சையில் மட்டும் சற்று ஓய்வெடுத்துக் கொண்டு கோயில் பணியில் சிலது செய்து முடித்தேன் மற்றதெல்லாம் தெரியாது. உங்களைத் தேடி மனிதர்கள் வருவார்கள். பெரிய மனிதர்கள். சாதாரணமானவர்கள். குறிப்பாய் மறவர்கள் வருவார்கள். அவர்களிடமிருந்து பல்வேறு தேசச் செய்தி அறியலாமே."

"கணபதி இந்த ஊர் பற்றி உனக்கு என்ன தெரியும்?"

"மருவூர் உங்களைப் போன்ற நல்ல மனிதர்கள் இருக்கும் ஊர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்."

"இது வெறும் புகழ்ச்சி. மருவூர், அந்தணர்கள் ஆட்சி செய்கின்ற ஊர். அக்ரஹாரம் மிகக் கட்டுமானமுடையது. ஒற்றுமை மிக்க அந்தணர்கள் இருக்கிறார்கள். கணக்கில் வல்லவர்கள், மொழியில் தேர்ச்சியுள்ளவர்கள். சூட்சும புத்தியுடையவர்கள். அதேநேரம் அதிகம் ஆசைப்படாதவர்கள். அதிகம் அலட்டிக் கொள்ளாதவர்கள். மருவூரிலுள்ள அந்தணர்கள் அதிகம் பேர் அரசாங்கத்தில் வேலை செய்கிறவர்கள். குறிப்பாய் அரசருடைய படையில் இருப்பவர்கள். இன்னும் குறிப்பாகச் சொல்லப் போனால் ஒற்றர்கள் அதிகம்."

"அந்தணர்களில் ஒற்றர்களா."

"வேறு யார், ஒற்றர்களாக இருக்க முடியும். ஒரு புதிய தேசத்தின் எல்லா இடங்களுக்கும் போய்வர யாருக்கும் உரிமை உண்டு. உனக்கா. எனக்கா"

"உங்களுக்கில்லாத உரிமையா."

அவன் மறுபடியும் வைத்தியரைப் புகழ்ந்து பேசினான்.

"இல்லை. நோயுற்றால்தான் நம்மை அரண்மனைக்கு அழைப்பார்கள். எந்த அழைப்புமில்லாமல் ஒரு அந்தணன் அரண்மனை வாசலில் நின்று ரிக்வேதமோ, யஜுர் வேதமோ சொன்னால், உள்ளே அழைத்து உட்கார வைத்து அரிசியும், காய்கறிகளும் தருவார்கள். களறிப் பயிற்சி கற்றுக் கொண்டால், வெறுமே துண்டு போர்த்தி அந்தணனாகவும் இருக்கலாம். சட்டென்று வீரம் காட்டி தப்பித்தும் போகலாம். மருவூரில் உள்ளவர்கள் அப்படிப்பட்ட அந்தணர்கள்.

"பிறகு என்னை நாட்டு நடப்பு கேட்கிறீர்கள்."

"ஆனால், மருவூர் அந்தணர்கள் வாய் திறக்க மாட்டார் களே. குரல்வளையை அறுத்தாலும் சொல்ல மாட்டார்களே."

"அக்ரஹாரம் அமைதியாகவல்லவா இருக்கிறது."

அம்மங்கை கேட்டாள்.

"ஆமாம், பகலில் ஒரு ஈ, காக்கை வெளியே வராது. இரண்டு கட்டுக்களை தாண்டிப் போனால்தான். மனிதர்களையே பார்க்க முடியும். அதேநேரம் யார் வீட்டுக்கு யார் வருகிறார்கள். கிராமத் துக்குள் நுழைபவர் என்ன காரணத்திற்காக வருகிறார்கள் என்றெல்லாம் தெரியும். உங்கள் வருகை இந்நேரம் எல்லா அந்தணர் வீட்டுக்கும் தெரிய வந்திருக்கும்."

"ஆனால் அந்தணர்களுக்கும், அரசவைக்கும் ஆகவில்லை யென்று திருவெண்காட்டில் பேச்சு இருக்கின்றதே, அந்தணர்கள் கூடிக்கூடி பேசிக் கொள்கிறார்களே."

"ஆமாம், ஆனால் மருவூர் அந்தணர்களுக்கும், அரசருக்கும் எந்தப் பிணக்கும் இல்லை. நான் அரசாங்க உத்தரவின் பேரில்தான் மருவூரில் குடியிருக்கிறேன்."

"மருவூரை விடப் பெரிய ஊர் திருக்காட்டுப்பள்ளி திருக் காட்டுப்பள்ளியைவிடப் பெரிய ஊர் திருவையாறு. திருவை யாற்றைவிடப் பெரிய ஊர் குடந்தை. ஆனால் அங்கெல்லாம் குடிபெயர முடியாதா."

"ஆமாம். ஆனால் தங்களுக்கு நல்ல வைத்தியர் வேண்டு மென்று கேட்க, சேனாதிபதி கிருஷ்ணன்ராமன் உத்தரவின் பேரில் இங்கு வந்து விட்டேன். மாதத்திற்கு இத்தனை கலம்

நெல். ஒரு கழஞ்சு பொன் என்று பங்கு நிர்ணயித்திருக் கிறார்கள்.”

“இவர்களுக்கு ஏன் தனித்த முறையில் வைத்தியர் வேண் டும்.”

“ஒற்றர்களல்லவா. விஷக்கடியும், கத்தி வெட்டும் அவர் களுக்கு இருப்பது இயல்பல்லவா. அந்நேரம் வைத்தியத்திற் கென்று வேறெங்கும் ஓடக்கூடாது என்பதற்காக என்னை இங்கே நியமித்திருக்கிறார்கள். தஞ்சையை விட்டு நான் வரமாட்டேனோ என்ற பயத்தில் எனக்கு நல்லபடியாய்ப் பங்கு பிரித்துக் கொடுத் திருக்கிறார்கள். என் குடும்பத்திற்கு இது மிக அதிகம். ஆயினும், வைத்தியத்திற்கு மக்கள் வரவில்லையென்றால் வைத்தியனுக்குச் சோம்பல் தானாகவே வரும். மெல்ல மெல்ல சோம்பல் என் னைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. ஆனாலும், நான் விடவில்லை. விதம்விதமான மருந்துகள் தயாரித்துக் கொண்டுதான் இருக்கிறேன். பழமர் நேரியிலிருந்து வடக்கே திருவையாறு வரை பல கிராமங்களுக்குத் தானாகவே போய் வருகிறேன் கணபதி இப்பொழுது உன் கையைக் கொடு.”

அவர் மெல்ல கணபதியை அருகே உட்கார வைத்து அவன் வலக்கையில் பட்டு போர்த்தி நாடி பிடித்துப் பார்த்தார். கண்களின் இமைகளை இழுத்துப் பார்த்தார் வாய் திறக்கச் சொல்லிப் பார்த்தார். முழங்கால்களைத் தட்டிப் பார்த்தார். காதோரம் போய் சில கேள்விகளைக் கேட்டார்.

அரைஞாண் கொடி கட்டியிருக்கிறாயா என்றும் விசாரித்தார். உருவிப் போட்டு விடாதே. அரைஞாண் கயிறு அடி வயிற்றில் ஊறுத்துவது உன்னுடைய வீர்யத்தை அதிகப் படுத்தும் கழுத்துச் சூடு நன்றாக இருக்கிறது விலாப் பக்கத்தில் தான் மெல்லிய கரபுரா சத்தம். எல்லா உலோக ஆச்சாரி களுக்கும் இது இருக்கத்தான் செய்யும்.

வா. அம்மங்கை நீ வா. அவளையும் அருகே உட்கார வைத்து வெகுநேரம் நாடிபிடித்துப் பார்த்தார். அவள் காதோரமும் சில கேள்விகள் கேட்டார். ஒரு வாயகன்ற மண் சட்டியில் எண் ணெயை வைத்து அந்த எண்ணையில் இரண்டு, மூன்று சொட்டு சிறுநீர் கணபதியை விடச் சொன்னார் உட்புறத்தில் கணபதி அவ்விதம் செய்துவிட்டு வந்ததும் போய் அந்த சட்டியைப் பார்த்தார். காலால் எத்தி கலயத்தைச் சாக்கடையில் கவிழ்த்தார்

“கணபதி எந்தக் குறையும் இல்லை. உங்கள் இரண்டு பேர் உஷ்ணமும் சற்று அதிகமாக இருக்கிறது. நெருப்பில் வேலை

செய்வதாலா அல்லது உங்கள் இயல்பே அப்படித்தானா என்று தெரியவில்லை. இந்த உடம்பு சூடு. தணிந்தால்தான் உன் விந்துவிலுள்ள அணுக்கள் அவளுடைய கருப்பையைச் சென்று அடையும். இல்லையெனில் உடம்பு சூட்டிலேயே சுருங்கி விட வாய்ப்புகள் அதிகமிருக்கின்றன. தினமும் காலையில் ஒரு நெல்லிக்காய் உருண்டை பசு நவநீதம் உண்டு வா."

"நவநீதம் என்றால்"

அம்மங்கை கேட்டாள்.

"வெண்ணெய். அதுவும் தவிர முழு நெல்லிக்காய் தினமும் ஒன்று அல்லது இரண்டு சாப்பிடு. அந்தி சாயும் போது இரண்டு பேருமே குளித்து விடுங்கள். தலைக்குக் குளிக்க வேண்டா தலைக் குக் குளிப்பதைக் காலையில் வைத்துக் கொள்ளுங்கள். நன்றாகக் கால் கழுவுங்கள். உறங்குவதற்கு முன்பு நான். சொன்னது போல சில மூச்சுப் பயிற்சிகள் செய்யுங்கள். உடம்பில் குறையென்று எதுவும் இல்லாததால் வெகு நிச்சயமாய் உங்களுக்குக் குழந்தை பிறக்கும். உடல் சூடு குறைய வேண்டியதுதான் பாக்கி."

"கூடலுக்கென்று ஏதேனும் நேரமிருக்கிறதா."

"அப்படியல்லாம் ஒன்றுமில்லை. தினமும் கூடுங்கள் மாதவிலக்கான அந்த நேரங்கள் தவிர மற்ற எல்லா நாட்களிலும் கூடுங்கள் பகலில் வேண்டாம். பின்னிரவில் வேண்டாம். முன்னிரவில் வேண்டாம். சந்திரன் உதயமான ஓரிரு நாழிகையில் சூரியன் அஸ்தமித்ததிலிருந்து இரண்டு நாழிகைக்கு அப்பால் எப்பொழுது வேண்டுமானாலும் கூடுங்கள். உன் தாது விருத்திக் கென்றும் தனித்தனியே மருந்துகள் தருகின்றேன்.

என் மருந்துகள் கிடக்கட்டும். சோழ சாம்ராஜ்ஜியம் நல்ல படியாக வரவேண்டுமென்று, உன் குலம் தழைக்க வேண்டு மென்றும், உன் குடும்பம் விளங்க வேண்டுமென்றும், குழந்தை பெற வேண்டுமென்றும் ஆசைப்படுகிறாயே உன்னுடைய கலையைக் கைமாற்றித் தர வேண்டும் என்று விரும்புகின்றாயே. இதற்காகவாவது நிச்சயமாய் உங்களுக்குக் குழந்தைகள் பிறக்கும். மருவூர் மாயாவிடம் குழந்தைகள் பிறந்தால் குழந்தையை இங்கு அழைத்து வருகிறேன் என்று வேண்டிக் கொண்டு போ. அவள் நிச்சயம் வரம் தருவாள்."

"மருந்து கேட்டால் கோயில் குளம் பற்றியெல்லாம் சொல் கிறீர்களே."

அம்மங்கை இழுத்தபடி கேட்டாள்.

"ஆமாம் அம்மா. மருந்து பாதி. தெய்வம் பாதி. மனித முயற்சி பாதி. தெய்வத்தின் கருணை பாதி இதுதானம்மா வாழ்க்கை முயற்சியே அல்லாதவருக்குக் கிடைப்பதில்லை. முயற்சி செய்தவரெல்லாம் பார்த்தவரில்லை. சோழதேசத்திற்கு இப்போது இறையருள் இருக்கிறது. மனிதருடைய முயற்சியும் இருக்கிறது. அதனால் பிரகாசமாக இருக்கிறோம். சோழ தேசம் எப்படியிருக்கிறது என்று கேட்டாயே, இதோ பதில் தருகிறேன். சோழதேசம் செல்வத்தில் மிதக்கத் துவங்கி விட்டது. ஒரு உலோகச் சிற்பி மூன்று பொற்காசுகள் வைத்தியருக்குக் கொடுக்க முடிகிறது என்றால் இது மிகப்பெரிய வளர்ச்சி. உன்னிடம் காசு எப்படி வந்தது உனக்குத் தொழில் நன்றாக நடக்கிறது. என்பதால், உனக்குத் தொழில் ஏன் நன்றாக நடக்கிறது. உன்னிடம் வாங்கு வோர்கள் அதிகமிருப்பதால் உன்னிடம் ஏன் அதிகம் வாங்கு கிறார்கள். எல்லோரிடமும் செல்வ வளம் இருப்பதால் எல்லோ ரிடமும் செல்வ வளம் எப்படி வந்தது.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் நடத்திய படையெடுப்பால். இது மனித முயற்சி.

இதை வேறொரு கோணத்தில் பார்ப்போம். அப்படி அவர் செய்கிற முயற்சியெல்லாம் பலிதமாகி மாற்றரசர் ஆநிரைக ளெல்லாம் நம் ஊர்க்கு வந்து நம்மை வளங்கொழிக்க வைக்கும் பலம் மிக்க மனிதர்களாகச் செய்து கொண்டிருக்கின்றன.

அது மட்டுமா மிகச் சரியான நேரத்தில், மிகச் சரியானபடி மழை பொழிகிறது. காவிரியில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது. எல்லா நீர்நிலைகளும் நிரம்பியிருக்கின்றன. பசும்புற்கள் எல்லா இடங்களிலும் பரவியிருக்கின்றன. ஆநிரைகள் நல்ல பால் கொடுக்கின்றன. நிலங்களில் விளைச்சல் அதிகமாயிருக்கின்றது. கால்வாய்களில் தண்ணீர் போய்க் கொண்டேயிருக்கிறது. பூம்புகார் வரை காவிரி சுழித்துக் கொண்டு ஓடுகிறது. பறவைகள் தாக்காமல், பூச்சிகள் தாக்காமல் நல்ல விளைச்சல் ஏற்படு கின்றது. முன்பெல்லாம் வேலிக்கு அறுபது எழுபது கலம்தான் காணும். இப்பொழுது நூற்று ஐந்து, நூற்று இருபது கலம் காணுகின்றன. எல்லா இனத்தாரும் அரிசிச்சோறு உண்கிறார்கள். நல்ல காய்கறிகள் விளைவித்து நன்றாகச் சாப்பிடுகிறார்கள்.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் கோயில் கட்டுவதால், பணம் முடக்கப்படாமல் பல் வேறு விதமாக புரண்டு கொண்டிருக்கிறது. மக்களிடம் செலவழிக்கக் காசுகள்

இருக்கின்றன. அதனால்தான் ஆட்டம் பாட்டங்கள் அதிகமாகி விட்டன.

திருக்காட்டுப்பள்ளியில் ஒரு பெண் இராஜராஜரைப் பற்றி ஒரு முழு நீள நாடகத்தைத் தயார் செய்து கொண்டிருக்கிறாள். அதற்குண்டான கவிதைகள் எழுதிக் கொண்டிருக்கிறார். அவர் தேவரடியார்தான். ஆனால், மாளிகை போல வீடு. ஆறேழு வேலை யாட்கள். போக வர பல்லக்கு. குதிரை வண்டி என்று பல சௌகரியங்கள் இருக்கின்றன. அவளுக்கே மூன்று வேலி நிலம் சொந்தமாக இருக்கிறது. ஆனால், அந்தணரோடு சண்டை என்பது உண்மை. திருக்காடடுப்பள்ளி அந்தணர்களும், திருவை யாறு, திருப்பூந்துருத்தி, ஒன்பத்து வேலி, வரகூர் அந்தணர்களும் ஒன்றுகூடி வேதம் சொல்லத்தான் பிறந்திருக்கிறோம் வேறு எதற்குமில்லை என்று சொல்ல, அதற்குண்டான கடுமையான விளைவுகளை ஒரு கிராமம் வாங்கிக் கொள்ள மற்றவர்கள் என்ன செய்வது என்று விழித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், மருவூர் கிராமம் மிக அமைதியாய் மதில் மீது பூனை யாய் அமர்ந்திருக்கிறது. வேதம்தானே நமக்குத் தொழில் என்று திருக்காட்டுப் பள்ளி அந்தணர்கள் உரக்கச் சொன்ன போது. மருவூர் அந்தணர்கள் மறுத்து விடடார்கள்.

ராமர் காலத்தில் அப்படியிருந்தது. ஆனால், கிருஷ்ணர் காலத்தில் அவ்விதமில்லை. வில் வித்தையை விற்க துரோணர் முன் வந்த காலத்திலிருந்து நாம் பல்வேறு தொழில்கள் செய்ய ஆரம்பித்து விட்டோம் என்று இவர்கள்- மருவூர் அந்தணர்கள் குறிப்பிட்டுச் சொன்னார்கள். திருக்காட்டுப்பள்ளி அந்தணர்கள் வாயடைத்துத் திரும்பிப் போய்விட்டார்கள்.”

**“எது சரி, எது தவறு. வேதம் மட்டும் சொல்லத்தான் அந்தணர்களா. வேறு எதுவும் செய்யக்கூடாது என்று நியமம் உண்டா. வேறு ஏதேனும் செய்வதால் வாழ்க்கை பாதிக்கப்படுமா. எது சரி. எது தவறு.”**

**கணபதி ஆவலாகக் கேட்டான்.**

**“சரி, தவறு என்ற பிரச்சினையே இல்லை. காட்டாற்று வெள்ளம் போல் வாழ்க்கை ஓடிக் கொண்டிருக்க, அதில் கால் வைத்தாரெல்லாம் மூலைக்கு ஒன்றாக இழுக்கப்படுகிறார்கள் வேதம் சொல்வது மட்டுமே வாழ்க்கை என்றிருந்த காலம், ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்பே போய் விட்டது என் குழந்தை அஸ்வத்தாமனுக்குப் பால் இல்லை. ஓரேயொரு பசு வேண்டும். கன்றோடு கூடிய ஒரு பசு வேண்டும் என்று பசுவைச்**

சம்பாதிக்க ஒரு அந்தணன் கிளம்பினான். தன்னுடைய வில் வித்தையை அரசர்களுக்கு விற்றான். பலனின் பொருட்டு என்று வித்தையை விற்கத் துவங்கினானோ அன்றைக்கு சகலமும் போயின.

அந்தணன் பிச்சை எடுக்கலாம். வித்தையை விற்கக் கூடாது. வித்தை அறிந்த க்ஷத்திரியர்கள் வெறுமே இருப்பார்களா. அடுத்த வரை வம்புக்கு இழுக்கத்தானே." செய்வார்கள். வம்புசண்டைக்கு வலிய போகத்தானேசெய்வார்கள். வேகம் கொண்ட க்ஷத்திரியர்களுக்கு விற்பதற்கும், வாங்குவதற்கும் வைசியர்கள் உதவி செய்வார்கள். உண்பதற்கும், உறங்குவதற்கும், தங்குவதற்கும், ஓட்டுவதற்கும் விதம்விதமான விஷயங்களை நான்காவது வர்ணத்தார் செய்துதான் தருவார்கள். பிறகு குழப்பபடிதான் அமைதி என்பது காணாமல் போகும். அதுதான் இப்போதும் தொடர்கிறது. யாரும் வலுவாகிவிடக்கூடாது. ஒருவரையொரு வர் சார்ந்து இருக்க வேண்டும் என்பதுதான் அடிப்படையான விதி. இந்த விதிகள் மீறப்படும் போதெல்லாம், பிரச்சனைகள் ஏற்படத்தான் செய்யும். இப்போது வளமாக இருக்கிற சோழ தேசத்தில் அடுத்த தலைமுறைக்கு அடுத்த தலைமுறை அதாவது உன் பேரப்பிள்ளையின் வாழ்க்கை மிக அலட்டலாகத்தான் இருக்கும்."

"கருமார்கள் கூடுதலாகச் சலுகைகள் கேட்பது தவறா."

"சரியா தவறா என்பது முக்கியமில்லை. அவர்கள் கேட்டு விட்டார்கள். அரசரும் தருகிறேன் என்று சம்மதம் தெரிவித்து விட்டார். அப்படியானால் நாம் கேட்கக் கூடாதா. என்று அத்தனை பேரும் கிளறி எழுந்திருக்கப் போகிறார்கள். யாருக்கு என்ன தரப்படும் என்பதைப் பொறுத்து வாழ்க்கையின் சுகதுக் கங்கள் அமையும்."

"வைத்தியர்கள் என்ன கேட்பார்கள்."

அம்மங்கை கண்சிமிட்டியபடி வைத்தியரை நோக்கிக் கேட்டாள்.

வைத்தியர் வாய்விட்டுச் சிரித்தார்.

"ஒன்றும் கேட்கமாட்டோம். அதேபோல நான் குயவர் களைக் கேட்டேன். என்ன கேட்கப் போகிறீர்கள் என்று. நான் ஒன்றும் கேட்கப் போவதில்லை என்று சொன்னார்கள். இதே போல நான் வேளாளரைக் கேட்டேன். என்ன கேட்கப் போகிறீர் கள் என்று கேட்பதற்கு என்ன இருக்கிறது. எல்லாமே கொடுக்கப்

பட்டிருக்கிறதே என்று வேளாளர்கள் பதில் சொல்லி விட்டார்கள்.

மண்ணில் வேலை செய்கின்ற குயவர்கள் மரணம் பற்றி நன்கு அறிவார்கள். வயலில் வேலை செய்யும் வேளாளர்கள் வாழ்வினுடைய அடிப்படை விஷயம் உணவுதான். எனவே பயிர்த்தொழில் திரும்பத் திரும்ப செய்வது தவிர, வேறு எதுவும் முக்கியமில்லை என்ற முடிவுக்கு வந்து விட்டார்கள். மரணத்தை தினம் தினம் விதம்விதமாக வைத்தியர்களாகிய நாங்கள் சந்தித்துக் கொண்டிருக்கிறோம்.

ஆஜானுபாகுவாய் ஒரு மறவர் வந்துவிட்டுப் போனார். இருமினால் ரத்தம் வருகிறது. மெல்ல மூச்சு வாங்குகிறது. நாடி பிடித்துப் பார்த்தேன். ஒரு மாதத்திற்கு மேல் உயிர் வாழ மாட்டார். பத்து நாட்களில் கண்கள் பழுதாகிவிடும் என்று தெரிந்தது. என்ன செய்வது. கடவுளைப் பிரார்த்தனை செய்யுங்கள். நிச்சயம் வியாதிகள் தீரும் என்று நோய் எதிர்ப்புச் சக்தியைத் தூண்டுகின்ற மருந்தைக் கொடுத்திருக்கிறேன். சிறு வயதிலிருந்தே அந்த மறவரைத் தெரியும். மத்திய வயது போர்க்களத்தில் இறந்திருந்தால் கூட புகழ் வந்திருக்கும். அவர் வெறுமே வீட்டுத் திண்ணையில் சாகப் போகிறார். இதுதான் வேதனையாக இருக்கிறது. இம்மாதிரி நூற்றுக்கணக்கான வேதனைகள் இருக்கும் போது நான் யாரிடம் போய் என்ன சலுகை கேட்க, அந்தச் சலுகைகளுக்கு என்ன அர்த்தம்."

"நாங்கள் தஞ்சை சென்று பார்க்கலாம் என்றிருக்கிறோம். நீங்கள் போய் பார்த்தீர்களா?" அம்மங்கை ஆவலாகக் கேட்டாள்.

"மதில் சுவர் எழும்பி விட்டது. விமான வேலைகளுக்காகக் கருங்கற்கள் செதுக்கிக் கொண்டிருக்கிறார்கள். வாசல்புறத்து நுழைவு வாயிலை எழுப்பிக் கொண்டிருக்கிறார்கள்."

"சுற்றி மதில் சுவர் எழுப்பி விடுவார்களோ."

மறுபடியும் அம்மங்கை கேட்டாள்.

"இல்லை. மதில் சுவர் இப்போதைக்கு வருவதாகத் தெரிய வில்லை. உள்ளே நாலாபக்கமும் எளிதாக நுழையும்படி இருக்க வேண்டுமல்லவா. கட்டிவிட்டுத் தடுமாறுவானேன். கருங்கற்கள் எல்லாப் பகுதிகளிலிருந்தும் உள்ளே நுழைந்து கொண்டிருக் கின்றன. அங்கங்கே உருட்டி விடப்பட்டு வேலைகள் நடை பெறுகின்றன."

"மிகப் பிரம்மாண்டமான கோயிலா."

"நீதான் பார்த்துச் சொல்ல வேண்டும். இதுவரை பொது மக்கள் பார்க்க அனுமதியில்லை. ஆனால், தேவரடியார்களும், சிற்பிகள் பலரும் பார்த்திருக்கிறார்கள். நீங்கள் உலோக ஆச்சாரி என்பதால் ஒரு வேளை உங்களுக்கு அனுமதி கிடைக்கக்கூடும். போய்ப் பார்த்துவிட்டு வாருங்களேன். நம் வாழ்நாளில் படிப்படியாக ஒரு கோயில் வளருவதை பார்க்கக் கொடுத்து வைக்க வேண்டுமல்லவா."

"தஞ்சையில் எங்கு தங்குவது."

"எங்கு வேண்டுமானாலும் தங்கலாம். தஞ்சையில் தங்குவதற்கென்று ஆற்றங்கரையோரம் பல குடிசைகள் கட்டிப் போட்டிருக்கிறார்கள். சமைப்பதற்கு உங்களுக்குப் பானையும், அடுப்பும், தானியமும் தருகிறார்கள். உள்ளேயே கடைத் தெரு இருக்கிறது. காய்கறிகள் வாங்கிக் கொள்ளலாம். ஆட்டுக்கறியோ மீனோ வாங்கிக் கொள்ளலாம். காவிரி ஆற்றிலிருந்து தஞ்சைக்குள் நுழைந்து கோவில் பார்க்கலாம். குடமுருட்டி, அரசலாறு பக்கமும் இம்மாதிரி தரையைச் சமன் செய்து அழுத்தமாய் குடிசைகள் போட்டு ஒரு நாளைக்கு ஒரு செப்புக்காசு என்று வாடகைக்கு விடுகிறார்கள். நல்ல பால் கிடைக்கிறது. நீங்கள் தஞ்சை எல்லைக்குள் நுழைந்தால் போதும். ஆட்கள் ஓடி வந்து உங்கள் கையைப் பிடித்துக் கொண்டு எங்கள் வீட்டிற்கு வா. உங்கள் வீட்டிற்கு வா என்று கூப்பிடுவார்கள். விருந்தோம்பல் அல்ல. காசு. எல்லாமும் காசு."

"விருந்தோம்பல் கொண்டதுதானே சோழதேசம்."

"அதுவொரு காலம். இப்பொழுது ஒரு சாரார் சம்பாதிக்க ஆரம்பித்து, செலவழிப்பதைப் பார்த்த பிறகு, எல்லோருக்கும் சம்பாதிக்க வேண்டும் என்றும், செலவழிக்க வேண்டும் என்றும் ஆசை வந்து விடடது. எனவே, விதம்விதமான யோசனைகள் காசு சம்பாதிப்பதில் ஏற்பட்டுவிட்டது. வேளாளப் பெண்கள் யாரும் வயலுக்குப் போவதில்லை. தட்டை முறுக்கு சீடை, வெல்ல அப்பம் என்று விதம்விதமாகத் தயாரித்து விற்கிறார்கள். முன்பெல்லாம் இளநீர் சீவி எடுத்துப் போனால் அந்த இளநீரை வேளாளன் குடித்து விட்டு அந்த இளநீருக்குள் காய்ச்சுகின்ற வெல்லப் பாகை ஊற்றித் தருவார். அதற்கு பிறகு தேங்காயோடு துருவித் திங்கலாம் இப்போது இனமாக எதுவும். கிடைப்பதில்லை. ஒரு காசுக்கு ஒரு வெல்ல உருண்டை."

"வேறென்ன கடைகள் இருக்கின்றன."

"தஞ்சையிலா. நகைக்கடைகள், துணிக்கடைகள், பாத்திரக் கடைகள். திருமயிலையிலிருந்து விதம் விதமாக" பாத்திரங்கள் வந்து இறங்குகின்றன. நகைகள் செய்வதற்கு உங்களவர்கள் மிக முனைப்போடு இருக்கிறார்கள். முலாம் பூசிய நகைகள், முலாம் பூசாத நகைகள் என்று செய்கிறார்கள். துணிகளுக்குக் கடும் போட்டி இருக்கிறது. ஒரு பொற்காசுக்கு கொசுவம் வைத்துத் தைத்த இடுப்புப் பாவாடை விற்கிறது. வளையல்கள் விற்கி றார்கள். இடுப்புப் பாவாடை மீது போட்டுக் கொள்கின்ற வெள்ளி ஆபரணங்கள் விற்கிறார்கள். நகைதான் விதம்விதமாகச் செய்கிறார்கள். அதை வாங்க ஒரு பெருங் கூட்டமே இருக்கிறது."

"யாரைச் சொல்கிறீர்கள்."

"வெளியூரிலிருந்து வந்த தேவரடியார்கள் நகைகள் வாங்குவதில் மிக ஆவலாக இருக்கிறார்கள். அவர்கள் வாங்குவ தைப் பார்த்து குடும்பப் பெண்களும் வாங்குகிறார்கள். அரசவைப் பெண்களும், அந்தணப் பெண்களும் வாங்குவதைப் பார்த்து வேளாளப் பெண்களும் அப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள்."

"எது மலிவு."

"ஆட்டுக்கறி. மீன்"

"ஏன்"

"ஒரு செப்புக்காசுக்கு மூன்று பெரிய மீன்கள். ஒரு செப்புக் காசுக்கு ஒரு குட்டி ஆடு. இரண்டு செப்புக் காசுக்கு ஒரு பெரிய ஆடு."

"ஐயா, நாங்கள் விடை பெறுகிறோம்."

கணபதி மெல்ல எழுந்து கை கூப்பினான்.

அம்மங்கை அவரை நமஸ்கரித்தாள். அவர் தன் மனைவி யைக் கூப்பிட, அவள் மஞ்சள் கிழங்கும், பூசணி விதைகளும், அவரை விதைகளும் தனித்தனியாக மரப்பெட்டிகளில் போட்டுக் கொடுத்தாள். அவைகளை வண்டிகளுக்குக் கீழே உள்ள பையில் வைத்து இறுக்கக் கட்டினாள்.

வண்டியை ஓட்டி வந்த மறவர்கள் அக்ரஹாரத்தில் எல்லோரும் விசாரித்ததாகவும், இருந்து வேலை செய்ய முடியுமா என்று கேட்டதாகவும் சொல்ல, இல்லை வேலை இருக்கிறது என்று சொல்லி வண்டியை ஊர் விட்டு நகர்த்தி மேடேற்றி திருவையாறு நோக்கிப் போகச் சொன்னான். திருவையாற்றி

லிருந்து தெற்கே திரும்பி வண்டி தஞ்சை நோக்கிப் போயிற்று. தஞ்சையை நோக்கி மக்கள் கூட்டம் கூட்டமாகப் போவது பார்த்து புருஷனும், மனைவியும் வியந்தார்கள்.

புடைவைக்கடைகளில் அவள் திகைத்துப் போனாள். சிகப்பும், நீலமும், பச்சையும், பழுப்பும், மஞ்சளும், அரக்கு வர்ணமுமாய் பல புடவைகள் தொங்க விடப் பட்டிருந்தன. மர அச்சுகளில் பூக்கள் செய்து சிகப்புப் புடைவையில் மஞ்சள் பூக்களை அச்சிட்டிருந்தார்கள். ஒரு புடைவை முனையில் பெரிய மயில் வரைந்திருந்தார்கள். பலகாரக் கடைகளில் அப்பம் தயாராகி நிறைய செய்யப்பட்டுக் கொண்டேயிருந்தது. நகைக் கடையில் விதவிதமான நகைகள் செய்து பளபளப்பாக்கி, புடவைகள் மீது எப்படி அணிவது என்று சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

கும்பல் கும்பலாய்ப் பெண்கள் இடுப்பில் சுருக்குப்பை, தொங்க, வாயில் வெற்றிலைப் பாக்கு குதப்பிக் கொண்டு கடைகடையாய் ஏறி இறங்கிக் கொண்டிருந்தார்கள். ஆறேழு விதமான அரிசிகள் வைக்கப்பட்டிருந்தன. உளுந்தும், துவரையும், பச்சைப் பயிறும் குவியல் குவியலாக இருந்தன. வேர்க் கடலையை வறுக்கின்ற மணம் மூக்கை நிமிண்டிற்று. பசியைத் தூண்டிற்று. கருத்தட்டான்குடி தாண்டி, பள்ளி அக்ரஹாரம் தாண்டி புறம்படிகள் தாண்டி, அங்குள்ள சேவகர்களிடம் தங்களின் விலாசங்களையும், வந்த காரணத்தையும் சொல்லி, தஞ்சையில் யாரைத் தெரியும் என்ற கேள்விக்குப் பெருந்தச்சர் குஞ்சரமல்லர் என்று சொல்ல, அவர்கள் வியந்து பார்க்க, தன்னுடைய தந்தை பெயரை அவள் சொல்ல, தன் புருஷனும் ஒரு உலோகச் சிற்பி என்று சொல்ல மரியாதையாக வழிவிட்டார்கள்.

பெருந்தச்சரைப் பார்க்க போகிறீர்களா என்று கேட்க, ‘ஆமாம்” என்று அவன் பதில் சொன்னான்.

“பெருந்தச்சருக்கு உன்னைத் தெரியுமா.” என்று அடுத்த கேள்வி வந்தது.

“நீங்கள் தான் போய் விசாரித்து வர வேண்டும். என் மனைவியின் தகப்பனார் பெயரைச் சொல்லிப் பாருங்கள்.” என்று சொல்ல, வேறு சிலர் உடனடியாக அவனை மேற் கொண்டு விசாரிக்க வேண்டாமென்று தடுத்ததோடு, “தஞ்சைக்கு உங்கள் வருகை நல்வரவாகட்டும்” என்று வாழ்த்தவும் செய்தார்கள்.

ஆட்டு மந்தைகள் மடக்கி நிறுத்தப்பட்டு அந்த வியாபாரமும் நடந்து கொண்டிருந்தது. இரண்டு காசுக்கு மூன்று பெண் ஆடு என்று விற்றுக் கொண்டிருந்தார்கள். பிறகு குதிரைகள் விற்றுக் கொண்டிருந்தார்கள். அதைத்தாண்டி யானைகள் விற்பதும் நடந்து கொண்டிருந்தது. அதையும் தாண்டி யானைகளைப் பழக்குகின்ற கொட்டாரமும் இருந்தது.

பெரிய பெரிய கொட்டகைகள் போட்டு உள்ளுக்குள் நாற்பது, ஐம்பது யானைகள் இருப்பதைப் பார்த்துப் பார்த்து அவள் வியந்தாள். குழந்தை மாதிரி யானைகளைப் பார்த்து குதூகலித்தாள். புருஷனைக் கட்டிக் கொண்டு கொஞ்சினாள். பிறகுதான் உடைகள் விற்கும் கடைகளுக்குள் நுழைந்தார்கள். அம்மாவுக்கும், மாமியாருக்கும் புடைவைகள் வாங்கினாள். தந்தைக்கும், மாமனாருக்கும் வேட்டிகள் வாங்கினாள். கொஞ்சம் தடித்த நூலில் குளிர் தாங்குவது போல பெரிய சால்வை இருந்தது அதைக் காசு கொடுத்து வாங்கப் பெரிய பேரம் பேச வேண்டியிருந்தது.

"யாருக்காக இத்தனை பேரம் பேசுகிறாய்." என்று அந்தக் கடைக்காரன் அலுப்போடு கேட்க, "என் புருஷன் அவர் ஒரு உலோகச் சிற்பி. தினமும் காலையில் எழுந்து மெழுகு. பிசைய தனியிடத்திற்குப் போவார். அவர் போகும்போது கடும் குளிராக இருக்கும். அதற்காகத் தான் இந்தச் சால்வை வாங்குகிறேன்." என்று சொல்ல, "சிற்பியா, உலோகச் சிற்பியா. சௌக்கியமாக இருக்கட்டும். நீ கேட்ட விலைக்குத் தருகிறேன்."

சட்டென்று பேரத்தை முடித்துக் கொண்டு அவள் கேட்ட விலைக்கு சால்வையை மடித்துக் கொடுத்தான். காசு வாங்கிக் கொண்டான்.

எங்கே போனாலும் சிற்பிகளுக்கு மரியாதை இருப்பதை அவள் தெரிந்து கொண்டாள். கொஞ்சம் கர்வமானாள்.

மர விளையாட்டுச் சாமான்களும், வெள்ளி நகைகளும் வாங்கினாள். தவழுகின்ற கிருஷ்ணர் பொம்மைகள் பலதும் அடுக்கி வைத்திருந்தார்கள். வர்ணம் அடித்து உதடும், கண்ணும் எழுதி மிக நேர்த்தியாகச் செய்திருந்தார்கள். ஒன்று வாங்கிக் கொள்ளட்டுமா என்று கணவனைக் கேட்க, மெல்லிய குரலில் அவன் வேண்டாம் என்று சொன்னான். அவளுக்குக் கோபம் வந்தது.

"உனக்காக நான் சால்வை வாங்கியிருக்கிறேன். எனக்காக ஒரு கிருஷ்ணர் பொம்மை வாங்கிக் கொள்ளக்கூடாதா." என்று முறைப்பாகப் பேச அவன் கையமர்த்தினான்.

"அது மண் பொம்மை. உடைந்து விடும் உடைந்தால் மனசு சங்கடப்படும். தொலைதூரம் அதை எடுத்துக் கொண்டு போக முடியுமா. ஏன் உடைகின்ற விஷயத்திற்கு ஆசைப்படுகிறாய். நான் ஐம்பொன்னில் அழகாகச் செய்து தருகிறேன்" என்று சொல்ல சட்டென்று சமாதானமானாள்.

"ஆமாம். இவ்வளவு அழகான பொம்மையை வாங்கி திருவெண்காடு வரையில் தூக்கிப் போக முடியுமா. உடைந்து விட்டதென்றால் மனசு சங்கடப்படாதா. எவ்வளவு அழகாகச் சொல்கிறாய்."

அவன் தோளைப் பிடித்துக் கொண்டு திரும்பினாள். நாற்சந்திக்கு வந்தார்கள்.

கூட்டம் அங்கே பரபரத்துக் காணப்பட்டது. குதிரையிலிருந்த வீரர்கள் ஒருவனைக் கயிற்றால் கட்டி இழுத்து வந்தார்கள்.

இன்றைக்கு மூன்றாம் நாள். இன்றைக்கு மூன்றாம் நாள் என்று ஜனங்கள் உரக்கப் பேசிக் கொண்டார்கள். கூட்டி வந்தவனை நாற்சந்தியில் நிறுத்தி கம்பத்தில் இறுக்கக் கட்டினார்கள். முதலில் தண்ணீர் ஊற்றினார்கள். ஊற்றிய பிறகு யாரோ ஒருவன் உள்ளங்கையில் விளக்கெண்ணெய் எடுத்து அவன் முதுகு முழுவதும் தடவினான். அவன் வலிதாங்காமல் அலறினான். ஏற்கனவே அவன் முதுகில் அடிபட்ட தழும்புகள் பல இருந்தன. இப்போது குதிரையிலிருந்த வீரர்கள் கீழேயிறங்கிக் கொண்டார்கள். நீண்ட மெல்லிய பிரம்புகளை எடுத்துக் கொண்டார்கள். வெள்ளைத் தலைப்பாகையும், வெள்ளை வேட்டியும், மஞ்சள் துண்டுமாய் ஒரு அதிகாரி வர, அவருக்கு நாற்காலி போடப்பட்டது. அவர் அமர்ந்து கொள்ள கை உயர்த்த வீரர்கள் பிரம்புகளை வீசி சரி பார்த்துக் கொண்டார்கள். அவன் அருகே நெருங்கினார்கள்.

"என்ன செய்யப் போகிறார்கள்." என்று ஆவலாய் புருஷனைக் கேட்டாள்.

"அடிக்கப் போகிறார்கள்." என்று நிதானமாய் புருஷன் பதில் சொன்னான்.

அவன் பதில் சொல்லி முடித்ததும் சுளீர் சுளீர் சுளீரென்று பிரம்புகள் வேகமாகப் பாய்ந்து அவன் முதுகில் இறங்கின.

அவன் கதறினான். அவள் திகைத்துப் போனாள். அவளுக்கு உடம்பு பதறியது. மிகப் பலமான அடி சில இடங்களில் தசை பிய்ந்து ரத்தம் கொட்டிற்று. அவன் முகத்தைப் பல்வேறு விதமாக வைத்துக் கொண்டு அழுதான். கழுத்திலிருந்து பிருஷ்டம் வரை அவர்கள் இடம் சொல்லிச் சொல்லி அடித்தார்கள். கூட்டத்தில் விதம்விதமான குரல்கள் எழும்பின. போடு, போடு என்று பல பேர் ஆத்திரத்தோடு கூவிக் கொண்டிருந்தார்கள்.

"என்ன நாகரிகம் இது. என்ன காட்டு மிராண்டித்தனம் இது. ஒருவனைக் கட்டி வைத்து மாடு அடிப்பது போல அடிக் கிறார்களே என்ன நியாயம் இது."

அவள் உரக்கக் கத்தினாள்.

புருஷன் தோளை உலுக்கினாள். புருஷன் சும்மாயிரு என்று அதட்டினான்.

"ஏன் சும்மாயிருக்க வேண்டும். இது மோசமான விஷய மல்லவா. சக்ரவர்த்தி உடையார் இருக்கக்கூடிய காலத்தில் இப்படிப்பட்ட அநாகரிகமான தண்டனை நிகழலாமா. நாகரிகமான இடம் என்று தஞ்சையை நீங்கள் சொன்னீர்களே. இதுவா தஞ்சையின் நாகரிகம். என்ன கேவலம் இது. காட்டு மிராண்டிகள் விஷயமாகவல்லவா இருக்கிறது."

அவள் மறுபடியும் கத்தினாள்.

"தவறு. இப்படிப் பேசுவது மிகத்தவறு."

அவன் மனைவியை எச்சரித்தான்.

"இல்லை. அவளைத் தடுக்காதே. அவளுக்கு உலகம் தெரிய வில்லை. வாழ்க்கை தெரியவில்லை. இவனை எதற்கு அடிக் கிறார்கள் என்று தெரியவில்லை. அம்மா வா..." என்று வயசாளி ஒருவர் சொல்ல அவர்கள் அடிப்பதை சட்டென்று நிறுத் தினார்கள்.

யாரோ ஒருவன் உப்பு கலந்த நீரை கொண்டு வந்தான். அடிபட்ட இடத்தில் வேகமாக தோய்த்துத் தடவினான். அவனுடைய அலறல் ஊரைக் கிழித்தது. அவள் காதைப் பொத்திக் கொண்டாள். முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"வா தாயே வா. இதைக் காட்டு மிராண்டித்தனம் என்று தானே சொல்கிறாய். வேறு ஒரு விஷயம் காண்பிக்கிறேன். அதை என்னவென்று நீ சொல்கிறாய் என்று கேட்பதற்கு ஆசைப்படு கிறேன் வா."

வயசாளி அவள் புருஷனின் தோளைப் பிடித்தபடி இழுத்தார். அவர்கள் இருவரும் தயங்கியபடியே அவர் பின்னால் போனார்கள்.

கூட்டத்தை விலகிக் கொண்டு சில தப்படிகள் கடந்து போக ஒரு வீட்டுத் திண்ணையில் சிலபேர் உட்கார்ந்திருந்தார்கள். அதில் ஒரு பெண் நடுநாயகமாக உட்கார்ந்து தலைவிரி கோல மாய் அழுது நின்றாள். அவள் முன் பற்கள் உடைந்திருந்தன. உதடு கிழிந்திருந்தது, கன்னம், மூக்கு, காது எல்லாம் வீங்கி யிருந்தது. கையை மடக்கி கட்டுப் போட்டிருந்தார்கள்.

"இது இவன் மனைவி. குடித்துவிட்டு மனைவியை எப்படி அடித்திருக்கிறான் பார். மனைவியை மட்டுமல்ல. மனைவியி னுடைய தாயாரை, மனைவியினுடைய தம்பியின் மனைவியை யாரை எல்லாம் அடித்திருக்கிறான் பார். தடுக்க வந்த நண்பர் களையெல்லாம் அடித்திருக்கிறான். பார். குடிவெறி, உடம்புத் திமிர், தான் என்ற அகந்தை, இறுமாப்பு இவள் அறுபது வயது கிழவி. இவள் முதுகைப் பார்." அந்தக் கிழவி அந்தப் பெரியவர் காட்டியதும் முகத்தைப் பொத்திக் கொண்டு அழத்துவங்கினாள்.

அவள் முதுகு பட்டை பட்டையாய் ரத்த விளாறாய் கிடந்தது. முட்கள் நிறைந்த கருவேலங்குச்சியால் அடித்திருக்க வேண்டும். ஒவ்வொரு முள்ளும் குத்தும் போது உயிர்போகும் வலி ஏற்பட்டிருக்கும்.

அம்மங்கை பயத்தில் வெளிறினாள். எதிர்பட்ட அத்தனை பேரையும் பார்த்தாள்.

என்ன கொடுமை இது என்றாள். அங்கே தொடர்ந்து பிரம்படி நடந்து கொண்டிருந்தது. துவண்டு மயங்கி விழ அவன் முகத்தில் தண்ணீர் தெளித்து குடிக்கத் தண்ணீர் கொடுத்து, வெல்லமும், கரும்புச்சாறும் கொடுத்து நிமிர வைத்து மறுபடியும் அடித்துக் கொண்டிருந்தார்கள்.

மீண்டும் சலசலப்பு அதிகமாயிற்று. கறுப்பு உடை அணிந்த வீரர்கள் குதிரைகளில் வேகமாக உள்ளே வந்தார்கள். ஜனங்களை விரட்டினார்கள். ஜனங்கள் நாலாபக்கமும் அலைந்தார்கள். பெரிய வட்டமாக விலகி நின்றார்கள். நடுவே பழுப்பு நிறக் குதிரையில் சக்ரவர்த்தி உடையார் இராஜராஜத்தேவர் சிகப்பு உடை அணிந்து, தலையில் பெரும் முண்டாசு கட்டி, அதன் மீது முத்து மாலை சுற்றிக் கம்பீரமாய் அமர்ந்திருந்தார்.

குதிரையின் மீது அமர்ந்தபடியே அடிபட்டவனைச் சுற்றி வந்தார்.

'என்ன' என்று ஒற்றை வார்த்தையில் வினவினார்.

வெள்ளைத் தலைப்பாகை அணிந்த அதிகாரி கைகூப்பினான். விழுந்து வணங்கினான். அவருக்கருகே போய் மிக ரகசியமாகத் தாழ்ந்த குரலில் அவன் செய்த குற்றத்தையும், தான் அளித்த தண்டனையையும் தெரிவித்தான்.

"வலி என்றால் என்ன என்று அவனுக்கத் தெரியவில்லை. வலியைப் பற்றி அவனுக்குப் போதிக்க அவனைப் பிரம்பால் அடிக்கிறேன்."

"இதுவரை எத்தனை ஆயிற்று."

"இப்பொழுதுதான் முப்பத்திரண்டு அடிகள் முடிந்திருக்கின்றன. இன்னும் பதினெட்டு பாக்கியிருக்கிறது. நீங்கள் சொன்னால் நிறுத்தி விடுகிறேன்."

"ஏன் நிறுத்த வேண்டும். உத்தரவிட்டது நீ. அதை முடி. உன்னுடைய உத்தரவுக்கு மறு உத்தரவு நான் அளிக்கப் போவதேயில்லை. உனக்குத் தெரியாதா இவன் என்ன குற்றம் செய்திருக்கிறான். அதன் தன்மை என்ன யார் யாரெல்லாம் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று தெரிந்த பிறகு உன்னுடைய உத்தரவுகள் சரியாகத்தானே இருக்கும். நான் எதற்கு குறுக்கீடு செய்வது. தொடர்ந்து நடக்கட்டும்."

அவர் கையசைத்தார். குதிரையிலிருந்தபடியே பார்த்தார். மிக வேகமாக இரண்டு குதிரை வீரர்கள் அவன் முதுகில் பளீர் பளீர் என்று பிரம்பால் அடித்தார்கள். மிகப்பெரிய நிசப்தம் அங்கு நிலவியது. அதுதான் கடைசி அடி என்று பிரம்பை எடுத்து உயர்த்தி காட்டினான். விலகி நின்றான். ஓடி வந்து முழு பலத்தோடு அவன் முதுகில் அடித்தான். சதை பிய்ந்து ரத்தம் பீறிட்டது. ஓடிப்போய் அவன் முதுகில் ஈரத்துணியால் ஒரு வைத்தியன் ரத்தத்தை நிறுத்தினான். களிம்பு தடவினான். அடிபட்டவன் கயிற்றை அவிழ்த்து அவனைக் குப்புறக் கிடத்தினார்கள். அவன் மீது குளிர் நீர் ஊற்றினார்கள்.

சக்ரவர்த்திக்கு அருகே அவன் குடும்பத்தினர் அனுமதிக்கப்பட்டார்கள். அந்தப் பெண் காலில் விழ திரும்ப அந்தப் பெண்ணை உற்றுப் பார்த்தார்.

முகம் கோரமாக வீங்கிக் கிடப்பதைப் பார்த்து திருப்பிக் கொண்டார்.

சரி, சரி என்று தலையசைக்க, அவர்களைக் காவற்படை விலக்கியது. கவலையோடு கீழே விழுந்தவனைப் பார்த்துக் கொண்டிருந்தார். ஊரிலுள்ள பெருந்தனத்து அதிகாரிகளோடு பேசினார்.

"மறவன் தானே எதற்குக் குடிக்கிறான்."

"சில மறவர்களிடம் போர் வெறி இருக்கிறது. அது குறைய வில்லை. குடிக்கும்போது போர் வெறி அதிகமாகிறது. அப்போது யார் எதிர்பட்டாலும் அடிக்கத் துவங்கி விடுகிறார்கள். தங்களுடைய வலிமையை அப்பாவி மக்கள் மீது காட்டுகிறார்கள். குடித்துவிட்டுச் செய்து விட்டேன் என்று சாக்குச் சொல் கிறார்கள். மது அருந்தும் பழக்கம் அதிகமாயிருக்கிறது. அதுவும் குறிப்பாய் மறவர்கள் இப்படி மது அருந்திவிட்டு மிகப்பெரிய கலவரம் செய்வது இயல்பாகி விட்டது."

"அப்படியானால் அடிப்பதோடு நிறுத்திவிடாதே. இவனை வைத்தியம் செய்து கோவேறு கழுதையில் ஏற்றி எல்லைப் புறத்துக்கு கொண்டு போ. சாளுக்கியப் படைகள் எங்கு வந்து தாக்குமோ அந்த இடத்தில் இவனை நிற்கவை. இவன் கையில் வாளைக் கொடுத்து எல்லைப்புறத்தைக் காக்க வை. சாளுக்கிய வீரர்கள் தாக்கினால் எதிர்ச் சண்டை போடச் சொல் எப்பொழுது வேண்டுமானாலும் மரணம் நேரலாம் எதிரியால் குத்தப்பட்டு, வெட்டப்பட்டு சாகலாம் என்ற நிலை வந்தால், வாழ்தல் பற்றிய ஆசை வரும். குடித்துவிட்டு கலவரத்தில் ஈடுபடுபவர்களை அப்புறப்படுத்தி எல்லைக்கு அனுப்புங்கள் அல்லது கடற்படையில் சேர்த்து வேறு நாடுகளுக்கு அனுப் புங்கள். ஒவ்வொரு க்ஷணமும் மரணத்தோடு போராட்டம் என்ற நினைவு வந்தால்தான் பெற்றவர்கள் மீது அன்பு ஏற்படும்."

சக்ரவர்த்தி குதிரையைத் திருப்பினார். ஜனங்களிடம் கையசைத்தார். ஜனங்கள் நெருங்கி வர சில பேரை பெயர் சொல்லி விசாரித்தார்.

கணபதியும், அம்மங்கையும் திகைத்துப் போய் நின்றிருந் தார்கள்.

சக்ரவர்த்திக்கு அருகே போகலாமா என்று கணபதி ஆசைப் பட, வேண்டாமென்று அவன் புஜம்பிடித்து அம்மங்கை நிறுத்தி விட்டாள்.

மெல்ல புருஷனும், மனைவியும் கும்பலிலிருந்து விலகி கடைத் தெருக்களைத் தாண்டி கோயில் கட்டும் இடத்திற்கு

வந்தார்கள். கோயில் கட்டும் இடத்தில் இருக்கின்ற கற்களையும் சிற்பிகள் அதைச் செதுக்கிக் கொண்டிருப்பதையும் பாரத்துத் திகைத்தார்கள். கோவில் வரைபடம் காட்ட முடியுமா என்று ஒரு சிற்பியிடம் விசாரிக்க, அவன் பதிலுக்கு அவர்களிடம் விசாரித்தான்.

அம்மங்கையின் தகப்பனார் பெயர் சொன்னதும், "அடடே... ஞாபகம் இருக்கிறது. உங்கள் திருமணத்திற்கு வந்திருக்கிறேன்" என்று உரக்கக் கூறினார். ஓலைக் குடிசைக்கு அழைத்துப் போனார். அங்கிருந்த துணிச்சுருளை எடுத்து பிரித்துக் காட்டினார். கோவிலின் குறுக்கு வெட்டுத் தோற்றம் வரையப்பட்டிருந்தது. கீழே யானையும் பனைமரமும் வரையப் பட்டிருந்தன.

கணபதிக்கு மூச்சு அடைத்தது. அம்மங்கை திகைத்துப் போனாள்.

கணபதி பாய்ந்து அந்தச் சிற்பியைத் தழுவிக் கொண்டான்.

"உடையார் பணி வெற்றி பெறட்டும். சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் வாழ்க, வாழ்க சோழம், சோழம்." என்று கத்தினான்.

"தவறியும் இதுபற்றி வெளியே சொல்லாதீர்கள்" என்று சிற்பி கேட்டுக் கொள்ள, அவர்கள் வெளியே சொல்ல மாட்டோம் என்றும் சொன்னார்கள். விடை பெற்றார்கள். தஞ்சையின் எல்லையில் வண்டி ஏறினார்கள். நிசும்பசூதனியை தரிசித்தார்கள். தஞ்சையிலிருந்து விடைபெற்று மெல்ல கிழக்கு நோக்கி திருவெண்காடு நோக்கி வண்டியைச் செலுத்தினார்கள்.

மூன்று காசுக்குச் சத்திரத்து அறை ஒன்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டார்கள். ஆறு செப்புக் காசுக்கு உணவு வாங்கிக் கொண்டார்கள். சத்திரத்தின் மேல் மாடியில் அமர்ந்து உண்டார்கள். அவர்கள் அறையும் அந்த மேல் பகுதியிலேயே இருந்தது. இரவு வந்தது. குளிர்காற்று வீசியது. பூச்சிகள் அடங்கும் வரை துணி போர்த்தி புருஷனும், மனைவியும் அமைதியாய் உட்கார்ந்திருந்தார்கள். நிலவொளியில் அவள் புருஷன் முகத்தைப் பார்த்தாள்.

எவ்வளவு அமைதியான புருஷன் அதட்டல் உண்டா. கோபம் உண்டா. ஒரு கடுஞ்சொல் உண்டா. எத்தனை மிருதுவான புருஷன். இவன் நல்லவன் என்று தெரியும். இப்படி உலகம் சுற்றிப் பார்க்கும் போது இவன் எப்பேர்ப்பட்ட நல்லவன் என்று புரிகிறது.

ஒரு ஆண் வீரனாக இருப்பதைவிட, ஒரு ஆண் கெட்டிக் கார்னாய் இருப்பதைவிட, ஒரு ஆண் உயர்ந்த பதவியில் இருப்பதைவிட, ஒரு ஆண் செல்வந்தனாய் இருப்பதை விட, ஒரு ஆண் நல்லவனாய் இருந்தால்தான் அது பெண்ணுக்குப் பாதுகாப்பாக இருக்கும். அவனோடு எல்லாமும் பேசலாம். சண்டை போடலாம். எதுவும் சொல்ல மாட்டான். என்ன சொன்னாலும் இதமாகத் திசை திருப்புவான்.

இந்தக் கிருஷ்ணர் பொம்மை மண். அது உடைந்தால் மனது வேதனைப்படும். நான் உனக்கு நல்ல பொம்மை செய்து தருகிறேன் என்றானே என்ன அற்புதம் அது. எவ்வளவு இதமாக அதைத் தெரிவித்தான். அவளுக்கு அவன் மீதுகாதல் பிறந்தது. இவனுக்கு ஏதாவது கொடுக்க வேண்டும் என்று தோன்றிதயது. என்ன கொடுக்க. என்ன இருக்கிறது என்னிடம். திரட்சியும். திடமுமான இந்த உடம்பைத் தவிர தன்னிடம் என்ன இருக் கிறது. இது வேண்டுமென்று கேட்பதற்குக் கூட இவன் கூச்சப் படுவானே. இப்படிப்பட்ட புருஷன் கிடைப்பது எப்பேர்ப்பட்ட பாக்கியம். "அடேய், அடேய் உனக்கு ஏதாவது தரவேண்டுமடா. என்ன தருவது. என்னைத் தருகிறேன் வா. வந்து விளையாடு. இது பெரிய பூந்தோட்டமடா முகர்ந்து முகர்ந்து விளையாடடா.

அவள் மெல்ல அவன் தொடைமீது கை வைத்தாள். அவன் மார்மீது சாய்ந்து கொண்டாள். அவன் முகவாயைக் கடித்தாள் அவனை இடுப்பில் கை சுற்றி அணைத்துக் கொண்டாள். இறுக்கினாள். மெல்ல இழுத்து மடியில் போட்டுக் கொண்டாள். அவள் வேகம் காட்டினாள்.

"என்ன ஆயிற்று உனக்கு?" அவன் வியந்தான்.

ஒரு நல்ல புருஷனுக்கு ஏதாவது தர வேண்டாமா. திருவெண் காட்டிலிருந்து பொறுமையாய் எத்தனை இடங்கள் காண்பித் திருக்கிறாய். எனக்கு உணவு வேண்டுமென்று எப்படி ஓடியிருக் கிறாய். எனக்கு என்ன அழகாக கால் பிடித்து விட்டிருக்கிறாய். எனக்கு உணவு வேண்டுமென்று எப்படி ஓடியிருக்கிறாய் நான் சந்தோஷமடைய வேண்டுமென்பதற்காக எத்தனை பொறுமையாகக் காத்திருக்கிறாய். முன் பற்களெல் லாம் உடையும்படி ஒரு பெண்ணை அடித்துத் துன்புறுத்தியிருக் கிறானே அவனும் புருஷனா. இல்லை நீ தான் புருஷன். பௌருஷம் நிரம்பியவன்தான் பருஷன். வீரம் மிகுந்தவன்தான் பௌருஷம் நிரம்பியவன். வலிமையற்றவர்களிடம் காட்டுவது வீரமா. அது கோழைத் தனம். மகா கேவலம். உன் கம்பீரத்திற்குத்

தலை வணங்குகிறேன். உன் பொறுமைக்கு அடி பணிகிறேன். உன் அன்புக்குக் கட்டுப்படுகிறேன். உனக்கு என்ன வேண்டு மென்றாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்.

அவள் தன் உடையைக் களைந்து வெளியே போட்டாள். மல்லாக்கப் படுத்துக் கொண்டாள். "வா" என்றாள். அவள் வேகம் அற்புதமாக இருந்தது. அவள் அன்பு அந்த வேகத்தில் தெரிந்தது. அந்த வேகத்தால்அவளுடைய கருப்பை சரியான இடத்திற்கு நகர்ந்தது. அவள் குலத்தைப் பெருக்கும் யோக்கிய தையைச் சட்டென்று அடைந்தாள். இதற்கு மருந்து காரணமா மருவூர் மாயா காரணமா அல்லது அவர்கள் பிரேமை காரணமா அல்லது எல்லாமுமா.

இது விடை தெரியாத கேள்வி. தன்னுள் மாற்றம் நிகழ்ந்தது. அவளுக்குத் தெளிவாகத் தெரிந்தது. என்ன என்பதை அவள் தெளிவாக உணரவில்லை.

**ம**ண் அச்சுகளைப் புரட்டி, உள்ளே உள்ள கம்பியை இறுக் கப் பிடித்து இரண்டு பேர் அசைத்து மண்ணை உடைத்தார்கள். கம்பி இழுபட மண் உதிர்ந்தது. மெல்ல சுத்தியால் களிமண் ணைத் தட்டிவிட உள்ளுக்குள் இருக்கின்ற உலோகப் பதுமைகள் வெளியே வந்தன. முழங்காலைத் தரையில் வைத்து ஒரு முழங் காலை மெல்ல நீட்டி இடக்கையைத் தரையில் ஊன்றி வலக் கையை நீட்டி அதில் வெண்ணெய் வைத்த கிருஷ்ணரை அவன் மெல்ல வெளியே எடுத்தான். சுத்தம் செய்தான்.

அங்கங்கே நீட்டிக் கொண்டிருந்த பிசிறுகளை விரலால் அழுத்தி உடைத்து சரி செய்தான். எல்லா அங்கங்களையும் ஆட்டிப் பார்த்தான்.

சிலை உறுதியாக இருந்தது.

கிருஷ்ணர் உட்கார்ந்து கொண்டு வெண்ணெயை இந்தா என்று வழங்கிக் கொண்டிருந்தார்.

அவள் வாரியணைத்துக் கொண்டு கிருஷ்ணரை முத்த மிட்டாள். கொண்டு போய் தந்தையிடம் காட்டினாள்.

"அட, நன்றாக இருக்கிறதே இந்தக் கற்பனை. தவழுகின்ற கிருஷ்ணரைச் செய்வார்கள். இப்படி வெண்ணெயை நீட்டுகின்ற கிருஷ்ணரா, கிருஷ்ணர் வெண்ணெயை நீட்டுகிறாரா அல்லது வாங்குகிறாரா." என்று அந்த உலோக ஆசாரி வியப்போடு கேட்டார்.

யாரும் பதில் சொல்லாமல் திரும்பிக் கணபதியை பார்த் தார்கள்.

"இரண்டும்தான்" என்று கணபதி சிரிப்பாகப் பதில் சொன்னான்.

"இரண்டும்தான் என்றால் யார் கொடுக்கிறார்களோ அவரால்தான் வாங்க முடியும். யார் வாங்குகிறார்களோ அவர்கள் நிச்சயம் கொடுப்பார்கள். கிருஷ்ணர் வெண்ணெயைக் கொடுக்கிறார். வாங்குகிறார். இரண்டும் ஒரேவிதமான செய்கை தானே இரண்டு விதமாகவும் எடுத்துக் கொள்ளலாம்" என்று சொல்ல அந்த உலோக ஆச்சாரி வியப்போடு மருமகனைப் பார்த்தார்

தன் மகள் சந்தோஷமாக இருப்பதும், தன் மருமகன் கெட்டிக்காரனாக இருப்பதும் அவருக்குப் பெரிய நிறைவைக் கொடுத்தன.

கடவுளே... கடவுளே... இவனுக்கொரு குழந்தையைக் கொடுத்துவிடு. இவர்கள் வாழ்க்கை பூரணமாகட்டும். உள்ளுக் குள் பெருங்குரலெடுத்து கடவுளை வேண்டினார். அந்த உலோகச் சிற்பங்களுக்கு மெருகேற்றும் வேலை நடந்தது. புது உளியால் உதடு செதுக்கி கிருஷ்ணரை சிரிக்கும்படிச் செய்து உதடு எழுதி, கண் எழுதி, காலில் சலங்கை செய்து, பிருஷ்டத்தை மழமழப்பாக்கி, விரல்களுக்கிடையே அரம் வைத்து ராவி தனித் தனியே விரல்கள் செய்து. அந்த உள்ளங்கால்களுக்குள் ரேகை வரைந்து சிற்பங்களைச் செய்து முடிக்க கணபதிக்கு மூன்று நாட்களாயின.

"மூன்று நவநீத கிருஷ்ண பொம்மைகளை என்ன செய்ய."

அவர்கள் எல்லோரும் பேசிக் கொண்டார்கள்."

"ஒரு பொம்மையை நல்ல பிள்ளை பெற்றவர்களுக்கு தானமாகக் கொடு. உனக்கும் குழந்தை பிறக்கும்." என்று யாரோ சொல்ல, அவள் சரியென்று சொன்னாள். எடுத்து தன்னுடைய மரப்பெட்டியில் வைத்துக் கொண்டாள்.

அருகே குதிரைகள் வரும் சப்தம் கேட்டது. சேனாதிபதி யான கிருஷ்ணன்ராமன் திருவெண்காடு வருகிறார் என்றும், அவருக்குச் சற்றுப் பின்னே பஞ்சவன் மாதேவி நாற்பது குதிரை வீரர்களுடன் வந்து கொண்டிருக்கிறார் என்றும் சொல்லப் பட்டது.

ஊரில் நீர் தெளித்தார்கள். சட்டென்று தென்னோலைக் குருத்தை அறுத்துக் கீழே போட்டு ஆளுக்குப் பத்து தோரணம் கட்டினார்கள். குழந்தைகள் மாவிலை பறித்துக் கெர்த்துக் கொத்தாய் கயிற்றில் இறுக்கினார்கள். மெல்லிய வர்ணத் துணி களை நடுவே கட்டினார்கள். புலிக்கொடிகளை ஊர் முழுவதும் நட்டார்கள். முதலில் வந்த மறவர் படை முன்னும் பின்னும் அலைந்து எல்லோரையும் விசாரித்தது. பல தலைவர்கள் ஒன்றுகூடி தக்க பதில் சொன்னார்கள்.

திருவெண்காடு முதல் மண்டபத்தை வேகமாகச் சுத்தம் செய்தார்கள். அதைச் சுற்றி கனமான துணியைக் கட்டினார்கள். பிரம்மாரயருக்குப் படுக்கை தயாரித்தார்கள். உணவு உண்ணும் சிறிய மரப்பீடத்தை வைத்தார்கள். பெருந்தன அதிகாரிகளும், கரணத்தார்களும், நடுவர்கள் என்று சொல்லப்படும் மத்தியஸ் தர்களும், ஓலை எழுதுபவரும், பட்டயம் தயாரிப்பவரும் எதற்கும் தயாராக இருக்கிறோம் என்று கோவிலுக்குள் வந்து நின்றார்கள்.

பிரம்மராயர் ஊருக்கு வந்ததும் குளத்தில் இறங்கி நீராடி னார். மூன்று குளங்களிலும் முங்கி எழுந்தார். கரையேறி உடம்பு துடைத்துக் கொண்டார். கனமான சரீரத்தையும், கூர்மையான மூக்கையும், பெரிய புஜங்களையுடைய பிரம்மராயர் குளித்துக் கரையேறுவதை ஊர் வேடிக்கை பார்த்தது. வைஷ்ணவச் சின்னங்ளை பிரம்மராயர் நிதானமாகத் தரித்துக் கொண்டார்.

பிரம்மராயர் உட்கார்ந்ததும் ஊர் நிலவரம் கேட்டார் விளைச்சல் கேட்டார். பண்டாரத்திலுள்ள பொருள்களின் அளவு கேட்டார். கோவில் வருமானம் கேட்டார் ஜனங்களின் சுகதுக்கங்கள் கேட்டார்.

"திருவெண்காடு கோவிலுக்குப் போக வேண்டுமென்று தோன்றியது. சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரின் உடல் நலம் கருதி உங்கள் ஊர் காலபைரவருக்கு நேர்ந்தது கொள்வதற்காகப் பஞ்சவன் மாதேவி வருகிறார்.

எந்த நேர்த்தியாயினும் நானே செய்து விடுகிறேனே என்று தான் சொன்னேன். முதலில் சரி என்றவர் திடீரென்று என்ன தோன்றியதோ, இல்லை அது தவறு நானதான் வரவேண்டு மென்று அவரும் கிளம்பி விட்டார். உங்கள் ஊர் சத்திரத்தை முற்றிலும் சுத்தப்படுத்திக் கோலமிட்டு அவருக்கு இடம் கொடுங் கள். கோவிலுக்கருகே இருக்கும் வேதபாட சாலையில் ஒரு நாள் அவர் தங்கும்படி ஏற்பாடு செய்யுங்கள்."

ஊர் சந்தோஷப்பட்டது.

"என்ன ஒருநாள், ஒரு வாரம் தங்கிவிட்டுப் போகட்டுமே."

மக்கள் பரபரப்பாகப் பேசினார்கள்.

பிரம்மராயர் கையமர்த்தினார். அங்கு நிசப்தம் ஏற்பட்டது.

"நீங்கள் அன்பு மிகுதியால் பேசுகிறீர்கள். தயவு செய்து இப்படியெல்லாம் பேசிவிடாதீர்கள். அவர்களுக்கு ஏகப்பட்ட வேலை பளு. சக்ரவர்த்தியின் வேலையில் அவர் தான் பாதி சுமந்து கொண்டிருக்கிறார்.

சக்ரவர்த்தி பட்டமகிஷியோடு குடந்தை போயிருப்பதால் இவருக்குச் சற்று ஓய்வு கிடைத்தது. அந்த ஓய்வைத் தூங்கிக் கழிக்காமல் திருவெண்காட்டுக்கு நேர்ந்து கொள்வதற்காக வரு கிறார். வழியில் இரண்டு மூன்று இடங்களுக்குப் போய் தஞ்சை போகச் சரியாக இருக்கும். நான் வந்தது அவர் பொருட்டு அன்று. திருவெண்காடு கோவில், திருவெண்காடு ஊர் சபை. எவ்வளவு சேமித்து வைத்திருக்கிறது என்று தெரிந்து கொள்வ தற்காக வந்தேன். ஏனெனில்..." என்று சொல்லி நிறுத்தினார்.

ஊர்ச் சபையும், பெருந்தனக்காரர்களும் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"பதினாறு பாரவண்டிகளில் பித்தளை வெண்கலச் சாமான் கள் வருகின்றன. குடந்தையிலிருந்து நான்கு வண்டிகளும், திருவையாறிலிருந்து இரண்டு வண்டிகளும், தஞ்சையிலிருந்து பத்து வண்டிகளும் கிளம்பி விட்டன. இதை மிகப் பத்திரமாகப் பாதுகாத்து உருக்கி உருட்டுக் கட்டைகளைச் செய்து கொண்டு உற்சவர் சிலைகளைச் செய்வதற்குத் தயாராக வேண்டும்.

இந்த ஊர் மண், உலோகச் சிலைகள் செய்வதற்கு மிகவும் ஏற்றது என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அதனாலேயே இங்கு உலோகச் சிற்பிகள் அதிகம் இருக்கிறார்கள். சக்ரவர்த் தியார் இப்போது கட்டிக் கொண்டிருக்கிற இராஜராஜேஸ்வர முடையார் பரமசாமி கோயிலுக்கு விதம்விதமான உலோகச் சிற்பங்கள் செய்ய வேண்டும் அதற்கு இந்த ஊரை நியமிக்கிறேன்."

கூட்டம் எழுந்து நின்று தலைமேல் கை குவித்து ஓ... என்று கதறியது.

அவர் காலில் விழுந்து வணங்கியது.

"என் வயதின் காரணமாக உங்கள் வணக்கத்தை ஏற்றுக் கொள்கிறேன். மற்றபடி இது சக்ரவர்த்தியின் விருப்பம். கடவுளின் ஆணை. ஊர் விவகாரங்கள் நடத்துவதற்கு அப்பால்

இந்தப் பணியில் உங்களில் ஆறு பேர் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும்.”

தொடர்ந்து உச்சி வரை மிகப்பெரிய விவாதங்கள் நடந்தன. அவருக்கு உணவு தயாராகி பரிமாறப் பட்டதும் திரைமறைவிற்குப் போய் சாப்பிடத் துவங்கினார். அதேநேரம் மீண்டும் வந்து குசலங்கள் விசாரித்துவிட்டுப் படுக்கப் போனார். ஊரிலிருந்து இரண்டு மறவர்கள் அவருக்குப் பெரிய விசிறியால் விசிறத் துவங்கினார்கள்.

மக்கள் தள்ளிப் போய் அடிக்குரலில் பேசி தங்களில் ஆறு பேரை தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். அவர்கள் அதுவரை செய்து வந்த பணியை மற்றவர்களுக்குக் கொடுக்க வழிவகை செய்தார்கள்.

தொலைவில் புலிக்கொடியோடு ஒற்றைப் புரவி ஒன்று வருவதைப் பார்த்து அங்கு ஓடினார்கள். அங்கு வந்த அந்த உபசேனாதிபதியை வரவேற்றார்கள். குடிக்க நீர் கொடுத்தார்கள்.

“அரைக்காத தூரத்தில் பஞ்சவன்மாதேவி நாற்பது குதிரை வீரர்களோடு வந்து கொண்டிருக்கிறார். குளித்து விட்டு கோயிலுக்குப் போவார். உணவு தயாராய் இருக்குமா.” என்று கேட்க, அந்த ஊர்ப் பெண்களைப் பெரியவர்கள் துரிதப்படுத்தினார்கள்.

ஊரில் நீர் தெளிக்கப்பட்டது. புதிதாய்ச் சில தோரணங்கள் எழுந்தன. பெரும் கோலங்கள் போடப் பட்டன.

பஞ்சவன்மாதேவி சக்ரவர்த்திக்கு இணையானவரல்லவா. பூக்களைப் பறித்துக் கூடை கூடையாக வைத்துக் கொண்டார்கள். இளைஞர்கள் அதற்காக முன்னும், பின்னும் அலைந்தார்கள். வாழைப்பழங்கள் வெட்டி சீப்புகளாக நறுக்கி வைக்கப்பட்டன. கொய்யாப் பழங்களையும் முகர்ந்து முகர்ந்து தட்டில் அடுக்கி வைத்தார்கள்.

வெயிலில் பயணம் செய்தவருக்கு எப்பொழுதுமே கடுமையாகப் பசிக்கும். ஆக, ஒரு வீரருக்கு ஆறு வாழைப்பழம், இரண்டு கொய்யாப்பழம் முன் பசிக்குக் கொடுத்து, வெற்றிலைப்பாக்கு போடச் சொல்லி பசியடங்கி கோயில் சுற்றி வந்ததும் சோறு போட்டு விட வேண்டும் என்று பரபரத்தார்கள்.

திருவெண்காட்டு மறவர்கள் வரிசையாக நின்று கொண்டார்கள். சோழம், சோழம் என்று கத்தினார்கள். புழுதி பறக்க குதிரைப்படை வந்தது. முகத்தை மூடிக் கொண்டு வந்த குதிரைப்

படை வீரர்கள் கிராமத்துக்கு அருகே வந்ததும் முகத்தை மூடியிருந்த துணிகளைக் கழற்றியிருந்தார்கள். பஞ்சவன்மாதேவியும் தலைத் துணிகளை விலக்கினார். குதிரையை நிதானமாகச் செலுத்தினார். மக்களைப் பார்த்துக் கொண்டு வந்தார். மறவர்கள் சோழம், சோழம் என்று கத்த, மக்கள் உரக்கக் கூறிக் கொண்டாடினார்கள்.

ஊர் அந்தணர்கள் பித்தளைக் குடத்தில் நீர் ஏந்தி தேங்காய் வைதது பஞ்சவன் மாதேவியை வரவேற்றார்கள் ஊர் பொது மக்கள், சிறுவர்கள், சிறுமிகள் பஞ்சவன் மாதேவி காலில் பூக்கள் சொரிந்தார்கள்.

பெரிய ஆலமர நிழலில் இருக்கை போட்டு அமரச் செய்து வாழைப்பழங்களும், கொய்யாப்பழங்களும் நிறைந்த தட்டுகளை நீட்டினார்கள். மாங்கனி ஒன்றும் இருந்தது.

முதல் வாழைப்பழத்தை பஞ்சவன்மாதேவி சாப்பிட்டதும், குதிரை வீரர்கள் அவசரமாக வாழைப் பழங்களை உரித்து விழுங்கினார்கள். கேட்டு வாங்கி மோரும், தண்ணீரும் குடித்தார்கள். பஞ்சவன் மாதேவி மறுபடியும் குதிரை ஏறி ஊருக்குள் நுழைந்து வீட்டிற்குள் போய் முகம் கழுவி, தலைவாரி பொட்டிட்டுக் கொண்டாள். மெல்ல கோவிலுக்குள் நுழைந்து திருவெண்காடு குளத்தில் முங்கிக் குளித்தாள். இரண்டு அதிகாரிச்சிகள் அருகே இருக்க, மறவர்கள் அவர்கள் குளிப்பதற்கு முதுகுகாட்டி ஊர் ஜனம் அருகே வராமல் பார்த்துக் கொண்டார்கள். ஊர்ப் பெண்டுகள் மஞ்சளும், குங்குமமும், வாசனைத் தைலமும், வாசனைப் பொடியும் எடுத்துக் கொண்டு குளத்தில் இறங்கினார்கள்.

பஞ்சவன் மாதேவிக்கு முதுகு துடைத்து விட்டார்கள்.

பஞ்சவன்மாதேவி பெண்களின் நலம்பற்றி விசாரிக்க, அவர்களும் அடிக்குரலில் ஊரில் எல்லோரும் நலமாக இருக்கிறார்கள். என்று சொன்னார்கள். தங்கத்தால் ஆன விபூதிப் பட்டையை பட்டுத் துணியிலிருந்து விலக்கி சிவனுக்கு சார்த்துங்கள் என்று கொடுக்க மூலவருக்கு அந்த விபூதிப்பட்டை சார்த்தப்பட்டது.

கூட்டம் உரக்க சிவாய நமஹ என்று பிளிறியது. காலபைரவர் முன்பு தனியாக வெகுநேரம் பஞ்சவன் மாதேவி கைகூப்பி நின்றார். அவர் கண்கள் கலங்கியிருந்தன. சன்னதியில் பிரம்மராயர் கிருஷ்ணன் ராமனும் கலந்து கொண்டார்.

“என்னாயிற்று தேவி. ஏன் வாட்டமாக இருக்கிறீர்கள்.”

“இல்லை. அரசர் உடல் நலம் குறித்து பைரவரிடம் வேண்டிக் கொண்டேன். மனம் லேசாகக் கலங்கியது. நல்ல வாலிபப் பருவத்தில் இருக்க இடமில்லாமல் ஊர் ஊராகச் சுற்றினார். மத்திம வயதில் போர், போர் என்று அலைந்தார். இப்போது ஐம்பத்தைந்து வயதுக்கும் மேலாகி விட்டது. கோயில் பணிகளுக்காக அலைந்து கொண்டிருக்கிறார். ஓய்வு என்பதே இந்த மனிதருக்கு இல்லையா. ஒரு நாள்கூட விடிந்து நெடுநேரம் வரை தூங்கலாகாதா. இரவும் பகலும் விவாதம் செய்து கொண்டுதான் இருக்க வேண்டுமா. பாட்டு கேட்பதோ, நடனம் பார்ப்பதோ ஏன் அரிதாகி விட்டது. அதை நினைத்துக் கொண்டிருந்தேன். கண் கலங்கி விட்டது.”

“சில பேர் ஜாதகம் அம்மா. சதய நட்சத்திரத்துக் காரர்கள் அப்படித்தான் இருப்பார்கள். ஐப்பசி சதயம் என்றால் நிச்சயமாய் இன்னும் பரபரப்பாகத்தான் இருப்பார்கள். உலோகங்கள் வருவதைச் சொல்லி விட்டேன். ஜனங்கள் மிகச் சந்தோஷமாக இருக்கிறார்கள். அந்தணர்களிலிருந்து எல்லா வகுப்பினரும் இதற்குண்டான எல்லா வித உதவியையும் செய்வதாகச் சொல்லியிருக்கிறார்கள்.”

“எல்லாவற்றையும் ஒரே முனையில் செய்ய வேண்டாமென்றா.”

“அதனால்தான் உலோகம் செய்வதைப் பிரித்து சற்று தள்ளிக் கொண்டு வந்தேன். திருவேரகத்தில் சிலைகள் செய்கிறார்கள். ஆனால், அவை சிறியவை. பெரும் சிலைகள் செய்ய இந்த இடம் தான் ஏற்றது. இந்தப் பக்கமும் வேலைகள் நடந்தால், வண்டிகள் போய் வந்தால் பாதைகள் சரியாகும். மக்கள் வாழ்க்கை சற்று உயருமல்லவா. மக்களின் எல்லாப் பகுதியினரும் கோயில் வேலையில் ஈடுபடட்டுமே.”

“உங்களுடைய திட்டம் அற்புதமானது. என்னுடைய கவலை தலைமை என்று யாரும் இங்கு இருக்க வேண்டாமா. இவர்களே எல்லாமும் நேர்த்தியாகச் செய்து முடித்து விடுவார்களா. தெளிவான உத்தரவு போட இங்கு யாருக்கு அதிகாரம் தரப்போகிறீர்கள்.”

“அம்மா நானே செய்யப் போகிறேன்.”

“அடிக்கடி பயணப்பட வேண்டியிருக்குமே.”

“வேறு வழியில்லை. மாதத்தின் முதல் ஐந்து நாட்கள் இருப்பதாக எனக்குள் ஒரு ஏற்பாடு. கடைசி ஐந்து நாட்கள் நீங்கள்

இருந்தால் இன்னும் நன்றாக இருக்கும். நாம் இருவரும் ஒரு நாள் இங்கு சந்தித்துப் பேசி விஷயங்களைப் புரிந்து கொண்டு பிறகு அவரவர் இருப்பிடத்திற்கு திரும்பி விடலாம்."

"நல்லது. இந்த திட்டமும் சரியாக இருக்கிறது."

"உலோகச் சிலைகள் எப்போது செய்ய வேண்டும்?"

"இப்போதே ஆரம்பித்துவிட வேண்டுமென்பது என்னுடைய அபிப்ராயம்." பிரம்மராயர் இருந்த மண்டபத்திற்கு பஞ்சவன்மாதேவி வந்ததும் அவருக்குத் தனியாக இருக்கை போடப்பட்டது. பிரம்மராயர் சற்று விலகி இன்னொரு இருக்கையில் அமர்ந்து கொண்டார்.

பஞ்சவன்மாதேவிக்கு உலோகச் சிற்பியை அறிமுகப் படுத்தினார்கள்.

"அட, நன்கு தெரியும் அரண்மனைக் கதவுக்குப் பித்தளை வேலை செய்கிறவர். இவரோடு பேசியிருக்கிறேனே."

குதூகலமாகச் சொன்னார். அவர் நலம் விசாரித்தார். உங்கள் உறவுக்காரர் யாரோ நான் விரும்புகின்ற நல்லூர் சிவன் கோயிலுக்கு நாதாங்கி செய்திருக்கிறார்கள். முதலில் இருந்த நாதாங்கியை விட மிக அழகாக, மிக வேலைப்பாட்டோடு செய்திருக்கிறார்கள். நாதாங்கியின் நாக்கில் நந்திகேஸ்வரர் ஒரு பக்கமும், வீரபாகுவை இன்னொரு பக்கமும் செதுக்கியிருக்கிறார்கள். நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். இப்படித்தான் செய்ய வேண்டுமா, எதற்கு என்று கேட்ட போது அந்தச் சிற்பி சொன்னாராம். இதை வெறும் தாழ்ப்பாள் என்று அலட்சியமாகத் திறப்பதனால்தான் உடைந்து போகிறது. இதில் நந்திகேஸ்வரரையும் வீரபாகுவையும் போட்டால் அதைத் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொண்டு மரியாதையாகத் திறப்பார்களல்லவா. தடாரென்று போடமாட்டார்களல்லவா என்று சொன்னாராம். நாதாங்கி உடையவே உடையாது என்றும் வாக்கு கொடுத்தாராம்."

"அவரும் என் உறவினர்தான்."

அடக்கமாக உலோக ஆச்சாரி பதில் சொன்னார்.

"ஆனால், காசு வாங்கிக் கொள்ளவே இல்லையே. 'சக்ரவர்த்தி சிவன் கோயிலுக்கு நிறைய செய்கிறார். என்னால் ஆனதை நான் செய்கிறேன்' என்று சொல்லி விட்டுப் போய் விட்டாராம். ஒரு செப்புக்காசு கூட வாங்க வில்லையாமே.

உண்மையில் உங்களைப்பற்றிய ஞாபகம் வந்ததே அவரால்தான். இது எவ்வளவு நேர்த்தியான வேலை என்று சொன்னபோது, இது திருவெண்காட்டு வேலை என்று சொன்னார்கள். அப்போது உலோகச் சிற்பங்கள் அனைத்தும் திருவெண்காட்டில் செய்ய ஒப்படைப்பது என்று எனக்குள் தேன்றிவிட்டது."

"வேலையைப் பகிர்ந்து கொடுங்களம்மா. திருவேரகத்திலும் நல்ல சிற்பிகள் இருக்கிறார்கள். வேலை தெரிந்தவர்கள் இருக்கிறார்கள்."

அடக்கமாகப் பதில் சொன்னார்.

"அற்புதம் இது மிகப்பெரிய மனித நேயம் திருவேரகத்தில் இருப்பவருக்குக் கோயிலுக்கான பாத்திரங்களையும், பீடங்களையும் பல்லக்குகளையும் செய்யச் சொல்லியிருக்கிறேன். அதைவிட மிக முக்கியமான சில உத்தரவுகளைப் பிறப்பிக்க அரசர் நினைத்திருக்கிறார். எனவே, அது பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவர்களுக்கும் நல்ல வேலைகள் தரப்படும் பிரம்ம ராயர். சொல்லியிருப்பார் என்று நினைக்கிறேன்.

நிறைய பித்தளைச் சாமான்கள் இருக்கின்றன. மேலைச் சாளுக்கியத்திலும், கங்க நாட்டிலும், குடகு நாட்டிலும் எடுத்தவை, நிறைய தாமிரப் பாத்திரங்களும் வருகின்றன. உருக்கி உருளைக் கட்டைகளாக வைத்துக் கொள்ளுங்கள். சக்ரவர்த்தி யார் இங்கு வரக்கூடும். உங்களுக்குத் தனித்த முறையில் தான் என்ன நினைத்திருக்கிறார் என்பதைச் சொல்லக்கூடும். இது விரைவில் நடக்கும்" என்று சொல்ல மக்கள் எகிறிக் குதித்தார்கள். ஆனந்தமானார்கள் பறைகள் முழங்கின சங்கு ஒலித்தது. சோழம், சோழம் என்று மறவர்கள் தட்ட, ஜனங்களும் சேர்ந்து கொண்டார்கள்.

துருத்திப் பிடித்து உலோகச் சிற்பங்களைச் செய்வதற்கு, தங்களைப் பூரணமாக ஒப்படைக்க ஆறு பேர் முன்வர, அவர்களைப் பஞ்சவன் மாதேவி ஏற்றுக் கொண்டாள். அவர்கள் நியமனப்பத்திரத்தை ஓலையில் எழுதிக் கொடுத்தாள். அவர்கள் வருமானத்திற்கு வழி வகுத்தாள்.

பிரம்மராயர் அதற்கு உதவி செய்தார்.

இந்தப் பிடாரிக் கோயிலுக்கு உடனடியாக சூலம் செய்து கொள்ள அந்தப் பண்டாரத்திலிருந்து உலோகம் எடுத்துக் கொள்ளலாம் என்றும் எழுதிக் கொடுத்தாள் அதற்குச் செய்

கூலியைத் தானே கொடுப்பதாகக் கூறி, பதினைந்து கழஞ்சுகள் கொடுக்க, இது அதிகமென்று ஊர் சொல்லியது.

"ஊரின் க்ஷேமத்திற்காக வைத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்ல, மறுபடியும் ஊர் விழுந்து நமஸ்கரித்தது.

"எங்கே அந்த உலோக ஆசாரி. அவருக்கு நான் ஏதாவது தர வேண்டும். நல்லூர் சிவன் கோயிலுக்கு அந்த உலோக ஆச்சாரியின் மனைவியும் ஒரு கிளி செய்திருக்கிறார். மிக அழகாக இருக்கிறது அந்தக் கிளி."

"ஆமாம் அம்மா. அந்த உலோக ஆச்சாரி என் மருமகன். பெயர் கணபதி. என் மகள் பெயர் அம்மங்கை"

"அட, அப்படியா மகளும், மருமகனும் சேர்ந்து செய்தார்களா."

"ஆமாம் அம்மா. திருமணமாகி ஐந்து வருடமாகியும் குழந்தைப் பேறு இல்லை. அவளை ஊர் மக்கள் மெல்லியதாகக் கேலி செய்கிறார்கள். அவள் நொந்து போய் அழுகிறாள் திருக் காட்டுப்பள்ளி அருகே மருவூர் என்கிற ஊர் இருக்கிறது. அந்த மருவூரில் இருக்கிற வைத்தியர்."

"தெரியும் கோதண்டராம வைத்தியர். என்ன சொன்னார்."

ஆவலாகக் கேட்டாள்.

அந்த அக்கறை சிற்பிக்குப் பிடித்திருந்தது.

**"நிச்சயம் குழந்தை பிறக்கும் என்ற சொல்லியிருக்கிறார்."**

**"பிறகென்ன. எங்கே உங்கள் மகள் அம்மங்கை" என்று நிதானமாக அந்தப் பெயரை உச்சரித்தாள்.**

**கூட்டத்தைப் பிளந்து கொண்டு அம்மங்கையும், அவள் பின்னே மிருதுவான நடையோடு கணபதியும் வந்தார்கள். மூன்று பேரும் விழுந்து வணங்கினார்கள்.**

**இரண்டு கைளையும் குவித்து அருகிலிருந்த மரப்பெட்டியி லிருந்து பொற்காசுகள் எடுத்து அவள் அம்மங்கையிடம் நீட் டினாள். அம்மங்கை திரும்பி கணபதியைப் பார்த்தாள். கணபதி முன் நின்று வணங்கினான்.**

**"அம்மா நான் சிவன் கோவிலுக்குச் செய்த காணிக்கையாக என் வேலை இருக்கட்டும். நான் ஒரு நேர்த்தியாகத்தான் இதைச் செய்தேன். நீங்கள் எப்படி மனமுருகி காலபைரவர் சன்னதியில்**

அரசருக்காக வேண்டினீர்களோ, அதேபோல நான் மனமுருகி என் மனைவிக்காகப் பிரார்த்தனை செய்தேன். நல்லூர் சிவன் கோயிலுக்குள் நுழையும்போதே ஒரு மிக முக்கியமான இடத்திற்குள் நுழைகிறோம் என்ற ஒரு எண்ணம் ஏற்பட்டது. உள்ளுக்குள் பேசும் தெய்வம் இருக்கிறது என்ற சிந்தனை ஏற்பட்டது.

"என் சிவனே என் மனைவியின் குறை தீர்ப்பாய் எங்களுக்குக் குழந்தை வரம் தருவாய்" என்று வேண்டினேன். வேண்டி முடித்த வெகு சில வினாடிகளில் இப்படியொரு வேலை செய்ய வேண்டுமென்ற விண்ணப்பம் வந்தது. உடனேயே இந்த வேலையை என்னுடைய காணிக்கையாகத் தீர்மானித்தேன். உங்கள் வாயால் அந்த நாதாங்கியைப் பாராட்டும்போது என் ஜென்மம் சாபல்ய மாயிற்று. இப்படி அந்த நாதாங்கியை வண்ணமாக செய்வதற்குக் காரணம் என் மனைவி குறை நீக்கப்பட்டவளாய், குழந்தைப் பேறு உள்ளவளாய் இறைவன் செய்ய வேண்டுமென்கிற ஆசைதான்."

கணபதி மெல்லிய குரலில் அழுத்தம் திருத்தமாகப் பேச, பஞ்சவன்மாதேவி வியப்போடு அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"எங்கள் ஊருக்கு வந்தது மிகப்பெரிய மரியாதை. குறிப்பாய் உலோக ஆச்சாரிகளுக்கு நீங்கள் செய்திருப்பது பார்த்து நெகிழ்ந்து போனேன். அதற்குக் காரணம் என்னுடைய வேலை என்று சொன்ன போது இன்னும் எனக்குள் சந்தோஷம் பொங்கியது. இது கர்வமாக மாறிவிடக்கூடாது என்று வேண்டிக் கொண்டேன். இது உங்கள் அன்பு. உங்கள் கருணை. உங்கள் பெரிய மனது. உங்களுக்குப் பரிசாக ஒன்று தர விரும்புகிறேன்" அவன் திரும்பி மனைவியைப் பார்த்தான்.

மனைவி மடியிலிருந்து கிருஷ்ணர் பொம்மையை எடுத்தாள். உள்ளங்கையில் வைத்து பஞ்சவன் மாதேவியின் முன்பு நீட்டினாள்.

குழந்தை கிருஷ்ணர், கையில் வெண்ணையோடு பஞ்சவன் மாதேவியைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

பஞ்சவன்மாதேவியின் கண்கள் வியப்பால் விரிந்தன. மெல்ல முன்னே வளைந்து விக்ரஹத்தை உற்றுப் பார்த்தார். தன்னுடைய வலக்கையில் வாங்கினார். கண்களில் ஒற்றிக் கொண்டார். புரட்டி புரட்டி மறுபடியும் விக்ரஹத்தைப் பார்த்தார்.

"அடாடா... அடாடா. அரைஞாண் கயிறு, அதற்கு மேல் தங்கச்சங்கிலி, இடுப்பில் நாய்க்காசு, வீரவாள், சூரியன், சந்திரன், சதங்கை மணி, தெளிவான முதுகுத் தண்டு, சுருள் கேசம், பெரிய கண்கள், சிரிப்பு, அடாடா வித்தை காட்டியிருக்கிறீர்கள். காலில் வீரக்கழல், கைகளில் வளையல், கழுத்தில் ஒட்டிய மணிமாலை."

குழந்தை சற்று நிமிர்ந்ததால் நெஞ்சோடு ஒட்டிய முத்து மாலை அழகான கொண்டை. கொண்டையை ஒட்டிய மயிற் பீலி அற்புதம், அற்புதம் வியந்தாள். மறுபடி மறுபடி கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

அங்கே 'பின்னால் அம்மங்கையின் உறவுகள் பல் கடித் தார்கள்.

"குழந்தைப்பேறு உள்ளவர்களுக்கு முதல் பொம்மையைக் கொடு என்று சொன்னேன். பஞ்சவன் மாதேவிக்குக் கொண்டு போய் கொடுக்கிறாளே. நல்லதா இது."

"சும்மாயிருங்கள். சத்தம் போடாதீர்கள். தவறாகப் பேசா தீர்கள்."

"இல்லையடி. நன்கு குழந்தை பெற்றவர்களுக்கல்லவா கொடுக்க வேண்டும்." என்று மத்திம வயதுக்காரி முணுமுணுக்க, தயவு செய்து வாயை மூடிக்கொண்டிருங்கள் என்று மற்ற பெண்கள் அவளை அடக்கினார்கள். ஆனால், எல்லோருக்கும் உள்ளுக்குள் குறை இருந்தது.

ஆனால் புருஷனும், மனைவியும் நெருக்கமாய் நின்று பஞ்ச வன்மாதேவி அந்தக் கிருஷ்ணர் பொம்மையைக் கொஞ்சுவதைக் கொண்டாடினார்கள்.

"மிக அழகாக இருக்கிறது. இதை ஏன் எனக்குக் கொடுக் கிறாய். நான் என்ன செய்ய வேண்டும் இதை."

"வைத்துப் பூஜை செய்யுங்கள்"

"எதற்காக."

"உங்கள் சோழர் குலம் விளங்குவதற்கு இந்தக் கிருஷ்ணர் பொம்மையைப் பூஜை செய்யலாமல்லவா."

கணபதி அமைதியாகச் சொன்னான்.

அவள் ஏறிட்டுக் கணபதியை உற்றுப் பார்த்தாள்.

அம்மங்கைக்குப் பஞ்சவன் மாதேவியின் தியாகம் நினை விற்கு வந்தது.

"அரசரின் குழந்தைகளெல்லாம் உங்கள் குழந்தைகள் தானே. சோழதேசத்து மக்களெல்லாம் உங்கள் குழந்தைகள்தானே, அவர்கள் விளங்க நீங்கள் பூஜை செய்யலாகாதா."

சாதுர்யமாகப் பேசினாள்.

பஞ்சவன்மாதேவி பெரிதாய்ப் புன்னகை செய்தாள்.

அந்தக் கிருஷ்ணர் பொம்மையை எடுத்து இடுப்பில் மடித்து உருட்டி சொருகிக் கொண்டாள். அருகே வா என்று அம்மங் கையை அழைத்தாள். அம்மங்கை அருகே வர தலையைத் தடவினாள். கணபதி மெல்ல ஒரு அடி முன்னேறினான்.

"அம்மா, அவள் குறை மிகப்பெரிதாக இருக்கிறது. அவள் புலம்பாத இரவுகளே இல்லை. அவளுக்குக் குழந்தை என்பதே இறைவனுடைய வரம் என்று பக்குவமாய்ச் சொல்லுங்கள். அமைதியாக இருக்கச் சொல்லுங்கள். படபடப்பே அவளுக்கு ஆபத்தாக முடியுமோ என்று கவலையாக இருக்கிறது."

அவன் பேசுவது பஞ்சவன்மாதேவிக்குத் தவிர வேறு யாருக்கும் காதில் விழவில்லை. கூட்டம் வேறு ஏதோ சளசளத்துக் கொண்டிருந்தது. பஞ்சவன் மாதேவி தன் சக்தி முழுவதும் நெஞ்சுக் கூட்டுக்குக் கொண்டு வந்தாள். கண் திறந்திருந்தாலும் உள்ளுக்குள் இறைவனை வேண்டினாள். எதிரேயுள்ள இந்தக் குழந்தைக்கு ஒரு குழந்தை தரலாகாதா. இவளுக்கு வம்சம் விருத்தி செய்யக்கூடாதா. இவன் போன்ற ஒரு அற்புதமான கணவனைப் பெற்றிருக்கிற இவள் சந்தோஷமடைந்தால், அவனும் சந்தோஷ மடைந்தால் சோழதேசத்தில் கோவில்களெல்லாம் சிறப்பாகுமே. ஊர் சந்தோஷமாகுமே.

இறையே, இறையே... இந்தப் பெண் மீது கருணை வை என்று உள்ளுக்குள் பெரும் குரலெடுத்துக் கத்தினார். உடம்பின் சக்தி அனைத்தும் ஒரு முனையில் குவிந்தது, உருண்டது, திரண்டது மிகப் பலமாக வளர்ந்தது.

அவள் இரண்டு அடிகள் முன் வைத்து அம்மங்கைக்கு அருகே போய் அவள் நெற்றியில் முத்தமிட்டாள். அவள் சக்தி யில் பாதி நெற்றியின் வழியே இறங்கியது. மெல்லக் கைவிரித்து, அம்மங்கையை இறுகத் தழுவிக் கொண்டாள். தன் சக்தி முழுவதும் அவள் உடம்புக்கு இறங்கவேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். அப்படி ஏதோ ஒன்று இறங்கியது.

ஊர் மொத்தமும் திரும்பி அம்மங்கை தழுவிக் கொள்ளப் படுவதை வியப்போடு பார்த்தது. இறுக்க இரண்டு கன்னங்களி

லும் முத்தமிட அம்மங்கை கருப்பைக்குள் நுழைந்து ஒன்று தங்கியது. சுகமாய் சுருண்டு படுத்தது.

அம்மங்கை தன் உடம்பில் ஒரு புது சிலிர்ப்பு ஏற்படுவதை உணர்ந்தாள். தான் கருவுற்றுவிட்டோம் என்று ஒரு மெல்லிய தான அடிமன எண்ணம் அவளுக்குள் தோன்றியது.

உலோக ஆச்சாரிகளை உபயோகப் படுத்திக் கொள்ள புறம் படிகளும், மண் வாரிக்கொள்ள இடங்களும், பெரிய கொட்ட கைகள் போட்டுக் கொள்ள மேடுகளும் ஒதுக்கப்பட்டன. மானி யங்கள் தரப்பட்டன. மறுநாள் காலை எல்லா வேலைகளும் முடிந்து பஞ்சவன் மாதேவி பயணத்தை முதலில் துவக்கினாள்.

"இன்னும் இரண்டு நாட்கள் இங்கு படுத்துத் தூங்கிவிட்டு வருகிறேன் அம்மா, கொஞ்சம் அலுப்பாக இருக்கிறது" என்று பிரம்மராயர் சொல்ல, அவள் கவலையோடு விசாரித்தாள்.

ஏதுமில்லை என்றதும் உற்சாகமாகக் கிளம்பி தஞ்சையை நோக்கிப் பயணப்பட்டாள்.

நவநீதகிருஷ்ணன் பொம்மை அவள் இடுப்பிலேயே இருந் தது. அவ்வப்போது அதை எடுத்து உற்றுப்பார்ப்பதும் முத்தமி டுவதுமாக இருந்தாள். அரண்மனைக்குள் நுழைந்ததும் தனது அரண்மனைக்குப் போய் இரண்டு மரக்கட்டைகளுக்கு நடுவே முழங்கை நீள பட்டுத் துணியைக் கட்டச் சொன்னாள். அதி காரிச்சி முத்தான பொன்நகை இறுக்கிக் கட்ட, அதில் கிருஷ்ணர் பொம்மையை வைத்தாள். மெல்லத் தாலாட்டினாள்.

"என்னம்மா இது இந்த பொம்மையை இவ்வளவு நேசிக்க ஆரம்பித்து விட்டீர்கள். கிருஷ்ணர் என்றால் விருப்பமா நீங்கள் சிவன் தானே முக்கியமான தெய்வம் என்று சொல்வீர்கள்."

"சிவனாவது, விஷ்ணுவாவது எல்லாம் ஒன்று தானடி."

பிறகு இந்தப் பொம்மையின்மீது என்ன அப்படிக் காதல்.'

முத்தான பொன்நங்கை விடாமல் கேட்டாள்.

"கணபதி சொன்னதை நீ அருகிலிருந்து கேட்க வில்லையா, சோழர் குலம் விளங்க, வம்சம் விருத்தி அடைய கிருஷ்ணர் வழி பாடு அவசியம். இதை முன்னரே ஒருமுறை ஈசான சிவபண்டி தரும் சொல்லியிருக்கிறார். சிவன் போர்த் தெய்வம். சோழ தேசத்தைப் பலமாகக் காவல் காக்க சிவன் உதவுவார். விஷ்ணு வாழ்விக்கும் தெய்வம். நம் வாழ்வு வளமாக விஷ்ணுவின் உதவி நமக்குத் தேவை. இப்படித்தானே வேதங்கள் சொல்லுகின்றன."

"வம்சம் பெருக வேண்டுமென்றால் எப்படி. நீங்க்ள் குழந்தை பெற்றுக் கொள்வீர்களா."

முத்தான பொன் நங்கை வியப்போடு கேட்டாள்.

"எனக்குக் குழந்தை பிறக்காதடி.

"பிறகு."

முத்தான பொன்நங்கை கேள்வியோடு பஞ்சவன்மா தேவியை உற்றுப் பார்த்தாள்.

"வம்சம் என்றால் என் வம்சம்தானா. இராஜேந்திரன் என் மகன் இல்லையா. என் மகன் இராஜேந்திரனுக்குப் பிறந்த குழந் தைகள் நன்கு வளர வேண்டுமடி. அவர்களால் சோழதேசம் மேம்பட வேண்டும். இராஜேந்திர சோழனுடைய புகழ் பரவும் வண்ணம் அவனுடைய குழந்தைகள் வளர வேண்டும். சோழ தேசத்தைக் காக்க வேண்டும். இராஜேந்திர சோழன் குழந்தை களுக்காக நான் இந்த கிருஷ்ணர் பூஜையை தினமும் செய்வேன். துளசி பறித்து வர ஏற்பாடு செய். கிருஷ்ணரை எப்படி வழிபாடு செய்ய வேண்டுமென்று உனக்குத் தெரியுமா. க்லீம் கிருஷ்ண க்லீம். இதுதான் மூலமந்திரம். கிருஷ்ணா, இராஜேந்திர சோழ னுக்கு நல்ல எதிர்காலம் கொடு. என் புருஷனுடைய புகழும், என் மகனுடைய புகழும் அவன் குழந்தைகளால் வளர வேண்டும்."

அவள் கைகூப்பி அந்த விக்ரஹம் பார்த்து உரத்துச் சொன்னாள்.

இன்னும் உலோகங்கள் தேவையா என்று கேட்க வந்த இராஜேந்திரர் அந்த வாசற்படியில் திடுக்கிட்டு நின்றார்.

முத்தான பொன்நங்கை அவர் வருவது பார்த்து விட்டு பஞ்சவன்மாதேவியை எச்சரிக்கக் கையை உயர்த்த, வேண்டா மென்று சொன்னார். முத்தான பொன்நங்கையை மட்டும் வர வழைத்தார்.

பஞ்சவன் மாதேவி தன் மனம் மொத்தமும் ஒன்று குவித்து அந்த கிருஷ்ணர் பொம்மையையே மனத்தில் இருத்தி, தன் வேண்டுதலை பெரிதாக்க, முத்தான பொன் நங்கை வாசலுக்கு வந்தாள்.

"என்ன சொல்கிறார் தேவியார்" என்று அடிக்குரலில் இராஜேந்திரர் கேட்க, முத்தான பொன்நங்கை இராஜேந்திர ருக்கு அவரின் பிரார்த்தனையைச் சொன்னாள்.

இராஜேந்திரர் மனது ஆடிற்று.

"என் வருகையைச் சொல்ல வேண்டாம். நீ சொன்னதையும் சொல்ல வேண்டாம். பஞ்சவன் மாதேவி எனக்கு மட்டும் தாயல்ல. இந்த சோழதேசத்திற்கே அவள் தாய்."

அந்த முரட்டு இளவரசரின் கண்கள் சிவந்தன. கண்ணீர் கொப்பளித்தது. மெல்லக் கன்னம் வழிந்தது.

"எச்சரிக்கை. பஞ்சவன்மாதேவியிடம் இது பற்றிப் பேச வேண்டாம்."

மெல்லிய கடுமையான குரலில் சொல்லிவிட்டு இராஜேந்திரசோழன் படியிறங்கி முற்றம் வழியே நடந்தார்.

அந்த நடை லேசான தள்ளாட்டத்தோடும், நெகிழ்வோடும் இருந்தது. மிகக் கோபக்காரர் என்றும், முரடர் என்றும், எதிரி களைத் துவம்சம் செய்பவர் என்றும், வெட்டு ஒன்று துண்டு ரெண்டாகப் பேசுபவர் என்றும், தன்னை எதிர்ப்பவனை வெகு சீக்கிரம் தூக்கி எறிந்துவிடுவார் என்றும் பேசப்படுகின்ற இராஜேந் திரர் தளர்ந்து போவது பார்த்து இந்தச் சோழ தேசம் நல்ல ஆண்களாலும், அருமையான பெண்களாலும் செழித்து வளருகிறது. ஒரு தேசம வளர அந்த தேசத்து அரசர்கள்தாம் காரணம் என்று முத்தான பொன்நங்கை நினைத்துக் கொண் டாள்.

